வாவியிருந்திசைகடொறுமலிந்தபெரும்புனல்படிந்துமணிவழங்கி
மேவிமனுதீர்த்தத்திற்படிந்தெழுதும் * புத்தகத்தைவிருப்பினீந்து
காவிமலர்சஞ்ஞைதருமிலஞ்சியினிற்கலந்தாடிக்கசிவினோடு
நாவிகமழ்ந்துறியநெய்த்தானமறையவர்மேவநயப்பினல்கி. (௪)

திசைமுகங்கடொறும்போற்றுந்தினகரன்சேர்சூரியபுட்கரணிசேர்ந்தே
நசையினொடும்பணிந்†தானைநல்கிரவியீசனையுநயந்துபோற்றிப்
பசையுறுபாயசந்தீபம்பரிந்தளித்துச்சோமனருள்பட்டமூழ்கி
வசையறவெண்டுகிற்றானம்வழங்கிமறையவர்தமக்குமகிழ்ச்சியோடும். ()

வலிநீலன்றடமூழ்கியஞ்ஞானமோசனமாம்வாவியேய்ந்து
‡ கலிநாசமலிதீர்த்தங்கலந்துவிசுவத்தேவர்கமழுந்தீர்த்த
வொலியாரும்புனல்படிந்துபணிந்துவிசுவேசனையுமுவந்துமூழ்கி
மெலிவீருஞ்சத்தமருத்துறுந்தீர்த்தந்தானியமும்விருப்பினீந்தே. (௬)

அறநெறியான்மருத்தீசன்றனைப்பணிந்துநெய்த்தீபமாற்றிப்போற்றி
விறன்மருவுசாம்பவன்றன்கயமணுகிச்சங்கற்பம்விளைத்துமூழ்கி
நறமலர்சூழ்கேத்திரபிண்டாதிகுலத்தவர்க்களித்துநல்கித்தான
மறமருவுமனவாக்குக்காயத்துப்படைத்தவினைவருத்தமெல்லாம். (௭)

தீர்த்திடுகவெனத்தீர்த்தப்புனலருந்தியென்றீமைசெகுத்திசேர்ந்தா
ரார்த்திதணிப்பாயெனவேயருக்கியமீந்தாச்சியமுமறவோர்க்கீந்து
தார்த்தடந்தோட்சுசேனனருந்தடமூழ்கித்தாம்பூலதானமாதி
பார்த்தலையிற்சுரர்க்களித்துப்பணிவினொடுமேற்றிசையைப்பரிந்துகாக்கும்.

வருணனெடுங்கயத்தடைந்துமறையினவற்குரியமனுவழுத்திமூழ்கி
யருணயந்தவருணேசனருச்சனையும்புரிந்தவன்முன்னசுவதானங்
கருணையுறவழங்கியபின்பரத்துவாசன்றீர்த்தங்கலந்துமூழ்கித்
தெருணயந்து§கோதூமதானமளித்தஞ்செழுத்துஞ்சிறக்கவோதி. (௯)

வீரசத்தியொழித்தருளும்விநாயகனைப்பணிந்தவற்குவிளக்குத்தேங்காய்
மூரனெடுமோதகமுங்கன்னலுமீந்தணியுமணிகன்னிமூழ்கி
யார்வமொடுபணிந்தரனையத்தினத்திற்றுயிலுணவுமகற்றிப்பின்னு
வீரமுடனந்தணருக்கூட்டியபின்பாரணமுமியற்றல்வேண்டும். (௧௦)

---

* புத்தசதானஞ் செய்து. † ஆனைநல்கி-கோதானஞ்செய்து. ‡ கலிநாசதீர்த்தம். விசுவதேவர்தீர்த்தம். சத்தவாயுக்கள் தீர்த்தம். § ஸம்ஸ்கிருதநூலார் கோதூமம் இயற்பெயரெனக்கொள்வர். தமிழ்நூலார் கோதுமம் இயற்பெயரெனகொள்வர். இக்கொள்கைவேறுபாடு மேலுங்குறிப்பிக்கப் பட்டது.

தக்கிணமானசமாகச்சாற்றியயாத்திரைபுரிந்தோர்தங்கடமை
யக்கணமேவிடுத்தமலனருள்பெறுவர் * கிருச்சிரமெட்டமைத்தார்பேறு
தொக்கனவாமற்றையநாள்சுடர்த்தினத்திற்பதின்மடங்காஞ்சோமனின்
மிக்கசதகுணமாகும்புருணசத்தித்தீவினையும்விளியுமன்றே. (௧௪)

தக்கிணமானசயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪௯௨.

---

# பிரமயாத்திரைச்சருக்கம்.

பிரமயாத்திரைபேசுவங்கேளினிப்பிறங்கியமகரத்தே
விரவும்மம்புலிவிளங் † கபிசித்திடைமேவுநாள்விதிமுன்போற்
பரவவாதரித்தபரபக்கப்பதினொன்கினிற்பரிவோடும்
வரமதாமணிகன்னியின்மூழ்கியேவருங்கியதியுமாற்றி. (௧)

வேதநாயகற்பணிந்துவெவ்வினையினைவீட்டியேமெய்ஞ்ஞானம்
போதநல்குதியென்றுரைத்துப்புறம்போந்துபோதகத்துண்டி
நாதனார் ‡ மணிகன்னிவீரக்கொலைநடுக்கியநயினார்தம்
பாதமூலமும்பணிந்துதெங்கின்கனிபரிந்தளித்தருள்பெற்றே. (௨)

கவயன்றீர்த்தமுங்கவாக்கனற்றீர்த்தமுங்கலந்துடன்படிந்தாடிச்
சுவையுறுங்கனியளிக்கதாம்பூலமுங் § கந்தமாதனன்றாய்நீர்
குவவுதீர்த்தத்திற்படிந்துசந்தளித்தபின்குளிர்மருத்துயர்தீர்த்தம்
நவையறப்படிந்தெட்படுபிண்டமுநாற்குலத்தவர்க்கீந்தே. (௩)

வாயுவீசனைவணங்கியஞ்சமுதமும்வழிதரப்பொழிந்தானும்
பாயசான்னமும்பச்சிலைகாயுடன்பரிந்தளித்தவணேகித்
தூயநீர்ப்பிரமன்றருதீர்த்தமுந்தொழுதுபூசுரர்க்கூட்டி
யாயுமப்பிரமீசற்குநிவேதனந்தூபதீபமோடாற்றி. (௪)

மேவிவாணிபேர்த்தீர்த்தமும்படிந்துபொன்வேதியர்க்களித்தேகிப்
பூவினு ‡ ரயன்பொய்கையைப்போற்றியேபுனிதநீர்படிந்தாடி
நாபிநீருறநின்றவன்றிருவுருநட்டுளத்தணியாகக்
காவிவாள்விழிவாணிசாவித்திரிகவின்பெறவிருபாலும். (௫)

---

* கிருச்சிரம் கிருச்சிரவிரதம். புருணகத்தி-கருச்சிதைத்தல். † ஈண்டு அபிசித்தாவது தைமாசத்துக்கிருஷ்ணபக்ஷத்துச்சந்திரன் உத்தராடநக்ஷத்திரத்தின் நான்காம் பாதத்தினும் திருவோண நக்ஷத்திரத்தின் முதனான்கு நாழிகையினும் நான்குவிநாடியினுஞ் சஞ்சரிக்குந் தினமாம். ‡மணிகன்னிகையிலே விதிப்படி ஸ்நானஞ்செய்து. § கந்தமாதனன் ஓர்குரக்குச் சேனைபதி. ‡ பிரமதீர்த்தமும் வேறு, பிரமசரசுவும் வேறு.

அக்கமாலைகுண்டிகைசைவரதாபயமாகியகரநான்குஞ்
செக்கர்மேனியுந்திகழ்மணிக்கிரீடமுந்திருமுகமொருநான்குந்
தொக்கசூரியர்,சந்திரர்கோடியிற்சோதி,சீதளமாக
மிக்கவேதகனைநினைந்துரைநாவுற * விரிஞ்சனதிருக்காறும். (௬)

† பிரமஞானமுன்னுமிருமூன்றையும்பேணிமும்முறைமூழ்கி
யுரவிஞசமனஞ்செயதுகாயத்திரியோதருக்கியமீந்தே
பரவுநீர்விதி, பங்கயயோநியே, பிரம, னீச்சுரன், பார்மேற்
குரவனுன்முக, னிறை, பிரசாபதி, குலவியவமரேசன. (௭)

வேறு.

இரணியகருப்பன், ருதாப், பரமேட்டி, ‡ யீன்றேன்றானா,
யரணமாதிருநாமத்தாற்றருப்பணமார்த்திமூழ்கி
முரணகமருடநானாதருப்பணமுறையிளுற்றிக்
கிரணமார்கரையினேறிக்கேத்திரசிராத்தஞ்செய்தே. (அ)

நெய்வழிந்தொழுகுமன்னமகறாவர்நிமிரவூட்டிக்
கைகமழ்சாந்தமாலைகாயடையளித்துக்காதன்
மெய்தருபிரமஞானம்வேண்டி§வெண்ணீறும்பாவ
மையறவணிந்தெட்டாயவசுக்கடம்வாவிமூழ்கி. (௯)

காசிபதீர்த்தமன்றேன்பன்னியர்காமர்தீர்த்த
மாசறமூழ்கிக்காசிபேசனசடியும்போற்றித்
தேசமர்துபர்தீபஞ்செறித்துயர்திருமால்பட்ட
மாசறுதிருவினதீர்த்தமகிழ்ந்து ○ தாமரையுமீந்தே. (௧௦)

அரிதொழுமரனைப்போற்றிக்காளிபொய்கையிறுமாடி
வரியுமுர்தளித்துதெய்வுமாய்க்கௌத்தருபதீர்த்தம்
பரிவொடுமாடிப்பாவநாசத்தும்படிந்தெதிர்ந்தோர்
முரிதரு + மயிந்தன்வாவிஞானவாவியினுமூழ்கி. (௧௧)

வேறு.

கசிவொடுங்கங்கேசனைப்பூசித்தகன்று = துவிதன்மலர்ச்சயத்துமூழ்கி
விசிதருகாற்றீசனையும்பணிந்துமணிகன்னியினின்மேவிமூழ்கிப
பசியசமிமூலத்தினைஞ்செழுத்தாயிரமிரண்டுபயிலவோதி
நிசிமருவுநதியின்மாறறிவலமேவிநிகமவனநிமலற்போற்றி. (௧௨)

---

* பிரமாவினது வேத இருக்கு ஆறனையும். † பிரமஞக்தமந்திரமாறனை யும். குரவனுகிய நான்முகனெனக்கூட்டி ஓர் நாமமாகக் கொள்க. ‡ ஈன்றேன்றந்தை-பிதாமகன்; ஓர்நாமம். அகமருடணஸ்நானம்-பாவத்தையழிக்கும் ஸ்நானம். § வெண்ணீறு பிரமகுண்டத்துள்ள வெண்ணீறு. ○ தாமரையுமீந்து - பத்மதானமுங்கொடுத்து. + மயிந்தன்-ஓர்குரக்குச்சேனபதி. = துவிதன்-ஓர்குரக்குச் சேனபதி.

வேண்டியனவிளக்காதிவிரைந்தளித்துமெய்ஞ்ஞானம்வேண்டிப்போற்றி
மீண்டியன்மாவிரவியெழுப்படிந்துதொழிலி பறறிமறைமேலோர்க்கூட்டி
யாண்டியல்பாரணமாற்றியமர்கவிதியாத்திரைநன்களிக்குஞான
மீண்டியமாமறைசையிறைக்கிஃகியற்றியருள்சிறந்தாரெண்ணிலாதார். ()

வேறு.

போற்றிபசுவேதகேது*வெஞ்ஞவற்கியனேதூய்மை
யாற[illegible]யனறசேதியரசொடு†சனகனேனோர்
போற[illegible]திரையோராநாளிற்புரையறுஞானமேவி
மே[illegible]வனமுத[illegible]ராகிமேயவினங்கினாரால். (௧௪)

மலரவன[illegible]யாத்திரைமருவி[illegible]
ரலர்[illegible]ரைமா[illegible]ரனைரனையருச்[illegible]ற்றி
யலகருள்[illegible]வியுமையுடனைந[illegible]சாமனைப்
பலமு[illegible]வண[illegible]வரயிதுபவித்திவெனபான. (௧௫)

எளி[illegible]னனி[illegible]யாத்திரையெவர்களேனு
ப[illegible]றி[illegible]டை[illegible]றணியினஞானந்
[illegible]ளியின[illegible]ளித்தவெனைச்சிறப்புடனளித்துஞானங்
களிப்புறவிதுக்[illegible]தடையுஞங்கர[illegible]னனறே. (௧௬)

வேறு.

எட்[illegible]சமருங்கருப்பனிலையைப்புருரவா[illegible]த்திரையீங்கிசைனலேய்ந்தா
‡ [illegible]மானசயாத்[illegible]தனையிஃதுருதறுமவருறுபம்பருகு
ப[illegible]னையுமீயும்[illegible]னங்கிருச்ரமாயி[illegible]தனமேனமை
வை[illegible]ருப்ரமயாத்திரையையவருந்துனை[illegible]சோமவள்ளாலின்னும்.

பிரமயாத்திரைச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௭௬.

---

# உத்தரமானசயாத்திரைச்சருக்கம்.

ஓங்குமுத்தரமானசயாத்திரை
தீங்குதீர்தரச்செப்புவன்செய்விதிப்
பாங்கு § முற்றினந்தொட்டுப்பயின்றபின்
றுங்குசங்கற்பமேவித்தருக்கினுல். (௧)

---

* யாக்கியவற்கியர். † சனகராசா. ‡ காசிப்பதியிலேயுள்ள உத்தரமானச யாத்திரையும், ஈண்டுள்ள பிரமயாத்திரையும் பலனுற் சமமாமென்பது கருத்து. நூறுசாந்திராயணபலத்தையும், ஆயிரங்கிருச்சிரபலத்தையும் இது தரும். § முதனுள் அற்ப போசனஞ்செய்து.

விடியல்வேதவமிர்தம்விளங்குநீர்
கடியின்மூழ்கிக் * கலைக்கடனாற்றியே
படியின்மேவுபுலத்தியன்பட்டமே
நெடிதுமாடியருக்கியநீதியால். (௨)

வாணிகேள்வன்மனத்தெழுமைந்தனே
யேணின்மிக்கவரக்கரையீன்றிடும்
பூணினையபுலத்தியனேயுனக்
காணியாமென்றளித்தயனண்ணியே. (௩)

புலசதீர்த்தம்புரிந்தபினங்கிரா
விலகுதீர்த்தமியற்றியுசத்திய
னலகிறீர்த்தம்படிந்தயனங்கிராக்
குலவுசத்தியற் † கிந்தறல்கோதற. (௪)

விண்ணுளார்குரவன்றடமேவியே
தண்ணெனீரிற்றருப்பண ‡ முன்னரே
யெண்ணுவாற்குமிவற்குமியற்றியே
நண்ணுபொன்வெள்ளிநல்லவிரண்டினும். (௫)

§ வெள்ளிபொய்கையருக்கியம்வீழ்த்தபின
னுள்ளிமூழ்கிப்பிருகுவென்றோதிடு
தெள்ளியார்கட்கருக்கியந்தீவினை
விள்ளவீந்தவண்வெள்ளியுநல்கியே. (௬)

+ மாதுசுந்தரிபொய்கைமருவியே
o சாதவேதசுதான்முதலைஞ்சிருக
கோதிமூழ்கியுமூர்தளித்தானமே
காதுருத்திரதீர்த்தங்கலந்தரோ. (௭)

பே = சுருத்திரசூத்தப்பெருமறைத
தேசதாயசிவமந்திரமெலா
மாசினீர்படிந்தோதியரனையோர்ந்
தேசில்கேத்திரபிண்டமுமீந்தபின். (௮)

---

* காலைக்கடன் கலைக்கடன் எனக் குறுகிற்று. † தருப்பணஞ்செய்து. ‡ முன்னரேயெண்ணுவான் வருஞ்செய்யுளிற்குறிக்கப்படுஞ் சுக்கிரன். § வெள்ளிதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்தபின், அதிலே வெள்ளியின் பிதாவாகிய பிருகுமுதலானவர்களுக்கு அருக்கியத்தைப் பாவந்தொலைக என்று பிரார்த்தித்துக்கொடுத்து. + தூர்க்கைதீர்த்தம். o சாதவேதசு முதலிய ஐந்து இருக்குக்களை ஓதி. = தற்புருஷருத்திரசூத்தம்.

இந்தயாத்திரையாவர்களாயினுஞ்
சிந்தையாற்செயத்தீவினையீர்த்திடும்
புந்தியார்திரிசங்கொர்புலையனுய்
வந்தியாத்திரைசெய்துவிண்வைகினன். (கசு)

இங்கியம்பியயாத்திரையிப்பதித்
திங்கள்விட்டமலசலத்தீங்கெனும்
பங்கநீக்குமிருதுபயின்றவை
மங்கநீக்கிடுந்தக்கிணமானசம். (சஎ)

வேறு.

மூன்றிருதிங்களுமொழிந்ததீவினை
வான்றுயர்பிரமயாத்திரையின் * வைகுமா
லூன்றியவருடமுமுஞற்றுதீவினை
யேன்றுடனழித்திடுஞ்சேதுயாத்திரை. (சஅ)

தோற்றியநான்முதற்பாதிநோய்வினை
யாற்றியமாற்றுமுட்கிரகயாத்திரை
சாற்றினமியாத்திரைதன்னைமூவுல
கேற்றியமாவியாத்திரையமபுவாம். (சகூ)

உத்தரமானசயாத்திரைசசருக்க முற்றிற்று

ஆ திருவிருத்தம் சகூஅ.

---

# விட்டுணுயாத்திரைச்சருக்கம்.

முன்னைநாளொழிந்தணவுமறநெறியான்விடியன் மூழ்கிவேதாமிர்த மொழிதருசங்கற்பம், பன்னியேவித்தேசன்பதம்பணிந்துவடுகன்பரிதீர்த் தம்படிந்தனுமன்பட்டமுவர்தா , ... ளகேசனுயர்பொய்கைமகிழ் ந தன்கண்வழங்குசதானியதான ... னிராமன், பொனணவிருந்தட மூழ்கியிலக்குவன்றன்கயத்துப்புரிந்துதருப்பணம்பிண்டஞ்சீதைமடுப்புணர்ந்தே. (க)

---

* வைகல்-கழிதல்.

வேறு.

மாலியாத்திரைவாய்மொழி
நூலெனித்தனுவன்றவர்க்
காலமாமெனவன்றவாக்
கோளுமாவினைகுன்றுமே. (௭)

விட்டுணுயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௫0௫.

---

# அந்தர்க்கிரகயாத்திரைச்சருக்கம்.

அடையலர்கண்முடிவெயில்சூழலங்கலடியரசேயந்தரெனுமுட்கிரக யாத்திரைநீயறிவாய், நடைபயிலத்தினந்தொறுமீதியற்றுதலேமுறையாரா டு* திரவாரத்துப்பூரணையினலஞ்சேர், தொடைதருமூன்றுடனடக்குநந்த யோகநாளிற்றொடங்கியவைதிருதிவிதிபாதத்துத்தோற்று, மிடைதருமாதப் பிறப்பினயனத்துவிடுவத்தேதமறுந்துவாதசியினிலங்குமரிதினத்தும். (௧)

† பன்னிருதிங்களிற்சிறந்தநாட்டனதுதோற்றம்பயின்றிடுநாளிவை களினும்பரித்திடலாம்பான்மை, முன்னியகற்கொடையாதிவேதநதிப்புணரி முகத்தளித்துமூழ்கியபின்றருப்பணமுமுறையா, லுன்னுதருபதமாதி,டரு செழுத்துநூறுமுரைத்துமகாவாக்கியமுமொலிதருநீர்க்கடருய்ப், பனு தருப்பணம்புரிந்துகேத்திரபிண்டாதிபலியளித்துப்பரமனெதிரிரணியமும ளித்தே. (௨)

அக்கூலத்தம‡ராமிரேசனைக்காளத்தியாதிரனைக்கும்பீசன்றனையணியா ர்கூடற்,சொக்கேசன்கமலைநகர்ச்சோதியைக்கேதாரச்சுடரினையுமடிபரவித் தோமறு§மிந்திரன்றன்,மைக்கோலத்தடமூழ்கி ο மகேந்திரலிங்கனையும்வண ங்கிநளன்றீர்த்தத்தும்பாயசமும்வழங்கிப், புக்கோதுதமிழ்முனிவன்கூபத் துநீராற்புரோக்கித்தேயச்சுவினிபொய்கையினிற்படிந்தே. (௩)

---

* திரவாரம்-சனிக்கிழமை. மூன்றுடனடக்குநந்த யோகம்-நந்தத்ரயம்,யோகத்திரயங்கள். அரிதினம்-ஏகாதசி. † பன்னிருதிங்களிற்சிறந்த நாள்-அவ்வம்மாசநாமநக்ஷத்திரதினம். அந்நக்ஷத்திரங்களாவன:—சித்திரைக்குச் சித்திரையும், வைகாசிக்கு விசாகமும், ஆனிக்குக்கேட்டையும், ஆடிக்குப்பூராடமும், ஆவணிக்குத் திருவோணமும், புரட்டாதிக்குப்பூரட்டாதியும், ஐப்பசிக்கு அச்சுவினியும், கார்த்திகைக்குக் கிருத்திகையும், மார்கழிக்கு மிருகசீரிடமும், தைக்குப்பூசமும், மாசிக்கு மகமும், பங்குனிக்கு உத்தரமுமாம். தனது தோற்றம்பயின்றிடுநாள்-சன்மநக்ஷத்திரதினம். ‡ ஆமிரேசன்-ஏகாம்பரநாதசுவாமி. § இந்திரதீர்த்தம். ο இந்திரேசன்.

மெய்குளிரும்புனலளித்துவியாதனருடீர்த்தமேவி* வியாதேசனையும்
விழைந்தருள்கோகரணச், செய்யசடைமுடியனையுமாடகேசனையுஞ்சித்திர
குத்தேசனையுஞ் சிறப்புடன்பூசித்தே, மொய்வலியங்கதன்றடத்துப்படிந்து
சனியளித்தேமோசமறச்சுக்கிரிவன்மூசுதடமூழ்கி, வெய்யசனிபொய்கையி
னுமேதருகாரானைவேதியர்க்கிந்தகமகிழ்வேதாமிர்தமும்படிந்தே. (ச)

மண்ணினையந்தணர்க்களித்துவித்தையினுக்கீசன்மகிழ்பூசைபுரிந்தரு
ளமான்றீர்த்தம்படிந்தே, நண்ணியநற்றுகிலளித்துப்பாண்டவர்தீர்த்தத்துந
னைந்துசெழும்பொன்னளித்துநலந்தருசக்கிவான், பண்ணியதீர்த்தம்படிந்து
சனனிதைதானப்பண்ணிகைகவுசிசனறண்பட்டத்தும்படிந்தே, தண்
ணியல்பூமினிந்தானஞ்சரிதரபின்னுகேசனருள்பணிந்துவிரகத்திவிமோசக
னருள்பணிமிய. (ரு)

மோகநீத்தடைநாசிகேதுவினுச்சிரமமூசளிக்குழ்புன்னுகமுறைவணங்
கி †யமுத, மேதருகூபந்தாபோ வெனுமிருசகானனைந்து மெல்லிடல்யா
ழைப்பழித்த மென்மொழியைப்பணிந்தே, காதவிழ்மென்போதடைகாய்த
புலவிளக்குசமாபந்தம்பரமானந்தகூபந்தனுஞ்சார்ந்தே, போதவிழ்நீர்பு
ரோகந்தத் சேத்திரபாலனையும் பொருவினந்திபிருங்கியையும்புகழ்ந்துப
ணிந்தெழுந்தே. (சு)

சாந்தாவையருச்சித்துப்பாலடிசிலளித்தேதக்கவருமதிமேவி ‡ லளிதே
சனையடைந்து, பாந்தாவுசராசந்தேச்சுரனையெழுஞ் § சோமனைப்பணிந்தபர
மேசனையும்பரிவினருச்சித்தே, மாதுதாள்வெண்மருட்பினுயர்வராகமூர்த்தி
யையும்வயகசிந்திரேசனையும்வணங்கியனருலகங், காத்தாளுந்துண்டி
விநாயகனைநறுந்தேங்காய்கனனவிலட்டுகெங்கனியாற்காமுறப்பூசித்தே.

ο காரிதனைவடையாதிகலந்தருச்சைமருவிக்கமமூமணிகன்னீசன்வாசு
கியீசனையும்,நேரில் = பருப்பதவீசன்றனையுமருச்சித்தேநிகழ்சங்கைக்கேசவ
னையிராமேசனிழலார், வேரிதருமாகாளேசனையுமடிபரவிவேண்டியபின்ம
ணிகன்னிவிழைந்துபிண்டமளித்தே, பாரிலுயர்காசியரன்பூசையினைப்புரி
ந்துபயினறிடுகசமிமூலத்தஞ்செழுத்தும்பகர்ந்தே. (அ)

---

* வியாதேசனையும், கோகரணேசனையும், ஆடகேசனையும, சித்திரகுத்தேசனையும், வியாததீர்த்தக் கரையிற் பூசித்து. காரான்-காராம்பசு.

† இவ்வமுதகூபம் - அம்மை சந்நிதியிலுள்ளது. ஆபோ எனுமிருக்கு ஆபோ என்பதை முதலாகவுடைய இருக்கு. இருக்கு-வாக்கு.

‡ லளிதேசன் என்புழி, லளிதா என்றது அம்மையை. § சோமேசன்.

ο காரி-காலவைரவர். = பருப்பதேசன். காசியரன்-விசுவநாதன்

வருத்தமறச் * சித்தேசனருச்சனையைப்புரிந்தேவயங்குவிடங்கேசனை
யுமிராமநாதனையுங், கருத்துறுசிந்தாமணிநற்சற்பகத்தைமுத்திக்கதவமுய
ரீசனையுங்கனிவினொடும்பணிந்தே, திருத்தமுறுங்கிரிகோடிதீர்த்தமதுதன்
னைச்சேர்ந்தாபோகிட்டேதிதிகழுமனுவாதி, பொருத்தமுறவுரைத்தாடியன்
னபூரணியைப்பூசித்துப்பொன்வழங்குநகுலேசற்புரிந்தே. (௰)

பணிந்துசபாபதியாயபரம்பரனைத்தேவபத்தசபாநாதனையடிபரிந்து
சரணு,வணிந்தவெனைக்காத்தருளென்றுரைத்துப்பணிந்தேகியருண்மறைசை
ப்பெருமானையாரமுறைப்போற்றித், திணிந்தவிருளகன்றோடச்சிதானந்தத்
தெளிவாந்தேசுருவாயளப்பரியசிவமாகியுளத்தே, துணிந்தவர்கட்கமுதா
றிச்சுருதிமுடிக்கமலத்துடக்கவிழ்க்குமருட்சுடரே துயரறுக்குமருந்தே.

கூற்றுடலம்பொடிபடாகச்சுரைகழற்றுமறையின்குரியநுதிநிமிர்த்த
ருளுங்கோதிலருட்கடலே, தோற்றுசராசரமாகித்துறவாதேதுறந்தனை
யாகியளித்தருளுஞ்சுருதிவனச்சனியே, வேற்றுருவமுணர்ந்தறியேனவிழு
த்துணைநீயலதுவேறுமிலேனவினைச்சடற்கேவீழ்ந்தயராதளித்து, போற்
றுமுணர்வளித்தருள்செயதந்தையனைசுற்றம்பொருள்புகலுநீயலதென்புந்
தியினொன்றிலையால். (௧௧)

எனப்பணிந்துபாலடிசிரும்பூலந்தீபமினியநறுந்தூபமுதலியன்றனவு
மளித்தே, நனத்துயிலிற்செய்வதெல்லாமருச்சனையெனக்கொண்டேநயந்த
ருணீயெனப்பணிந்துமணக்கோலமிறைஞ்சி, மனப்படுநைவேதிதமுட்வ
ழுங்கிவிடைகொண்டேமறையவர்கட்கூட்டியவர்மனமகிழவளித்தே,யினைத்
தினொடுமயின்றிடுகயாத்திரையாயிரமாயியன்றபரிமேதத்தின்பயன்றனையீ
ந்திடுமே. (௧௨

மதியயளஞ்செறிபிரசாபத்தியமாயிரமுமதித்தவயுதமுங்காசிமரணம
றையந்தத், ததிபலவுமுளத்தமைத்தல்யாததிரையீதமைதல்சமனுகும்பய
னிதனைத்தானவிலமுததி,பதியருளு†முன்னுளினொருநாளினமைகசபண்ணி
டுகவாண்டுதொறுந்திங்கடோறும்பயில்க, புதியதினந்தொறுமுடிக்க சா
லோகமுதலாப்புகனறபதமுறையினுறும்புரிந்திடுதல்கடனே. (௧௩)

---

* சித்தேசன் - சமியின் கீழிருப்பவர். சிந்தாமணிவிநாயகர்-வேதவன விநாயகர். முத்திக்கதவமுயரீசன்-மோக்ஷத்துவாரேசுவரன்; இவர் சிந்தாமணிவிநாயகருக்கு பிற்பாகத்திருப்பவர். ஆபோகிட்டேதி என்பதை முதலாகவுடைய வேதமந்திரம். நகுலேசர் அன்னபூரணியோடுகூடவீற்றிருக்குஞ்சிவலிங்கப்பெருமான். † உன்னுளினொருநாளினமைக்க- உன் ஆயுசுக்குள்ளே ஒருதினமேனும்இவ்வியாத்திரையைச்செய்க.

புரியிடைமருவியாவிபுகரறவுறையுநாளுட்
பரிவுடனொருகாலேனும்பற்றியாத்திரையோராறுந்
தெரிதரவிளைத்தோர்போகந்தெளிதருமுத்திகைவாய்ந்
தரியனவுறுவர்கக்கிவானெனவரசரேறே. (உ)

எனமுனியியம்பக்கோமானியம்பியகக்கிவானும்
பனவனதோற்றமாதிபயனளவுரைத்தியென்று
வினவினன்பணியத்தீயவெவ்வினையிரிக்குங்காதை
மனமகிழ்மனுவின்மைந்தகேளெனவகுத்துச்சொல்வான். (ங)

வண்டினமறையினார்க்கு * மலர்முகமறையோன்வாங்குந்
தெண்டிரையுலகந்தேற்றுமரீசியத்திரிதீங்கொல்கக்
கண்டவங்கிராவசிட்டன்புலத்தியன்புலகன்காமம்
விண்டவப்பிருகுதக்கன்கிரதுமேதக்கயானே. (ச)

என்னவீரைந்தினீண்டும்புதல்வரையினிதினீன்றான்
மன்னுசித்திரசிகண்டியங்கிராமைந்தனாகி
முன்னுசத்தியனைப்பின்னர்வியாழத்தைமுறையிற்பெற்றான்
பொன்னியற்பெயரோன்றேவர்குருவெனப்பொலியுநாளில். (ரு)

பழுதறுமோரையொன்றுபண்புறத்தோற்றவாய்ந்து
தொழுதகுமிதனின்மைந்தன்றோற்றுமேற்சுடரேபோல
முழுதுலகளிக்குமென்றுமுன்னித்தன்மனையினோகிக்
கெழுதகுகற்பின்மிக்ககிழத்தியைக்காணாகி. (சா)

முறையினிற் † சேட்டனில்லாண்முற்றிழைமுயக்கம்வேண்ட
நிறைதருகருப்பமுள்ளேனினைப்பரிதெனவுநேர்ந்து
சிறைதரப்பற்றிச்சேரச்சேயிழைகுறியுட்சேய்தான்
மறைவுறவிருவர்க்கீங்குவைகிடமில்லையென்றே. (எ)

வழிமறைத்திடவுநீங்காவலியிற்சுக்கிலத்தைவாய்த்துப்
பொழிவுறக் ‡ களியிற்போகம்புதைத்தநின்றனக்குப்போக
விழியெனச்சபித்துநீங்கமெல்லியறன்பால்வேத
மொழிதரத்திருவின்மிக்காரிருவருமுனைத்தாரன்றே. (அ)

---

* மறைமுகமறையோன் எனவும்பாடம். யான் என்றது நாரதமுனிவர் தம்மை எனவறிக. † சேட்டன் தமையனாகிய உசத்தியன். ‡ களி-கட்குடியன். ஈண்டுப்போகமென்றது போகத்தானமாகிய பெண்குறியிற் கருப்பகாடியை. இனிப்போகம் என்பது பாம்பின்படமெனவும் பொருள் படுதலின், அஃதீண்டாகுபெயராய்ப் பெண்குறியை உணர்த்திற்றென்றது பொருந்த.

ஓரையிற்கருப்பமுற்றேறனுதித்திடவவன்ற * யோங்குஞ்
சீரையுற்றிவனைநீயேதாங்கெனச்சிவனருளு
மேரைநீபற்றுகென்னவியற்பரத்துவாசனுகி
வீரையிற்கதிரேபோலவிண்முதல்விளக்கினனே. (௯)

சிற்றுதரத்துமுன்னஞ்சேர்ந்தவன்செறியுஞ்சாபத்
தற்றிருகணனுந் † தீர்க்கதமனெனவறையுநாமம்
பெற்றுணர்வாயநாட்டப்பெயரொடும்பிறங்கிவேத
முற்றியவனத்தினில்லானொடுந்தவமுறையிற்செய், (௫௦)

அருந்தவந்திருந்தவேதவனத்துறையமலனுளங்
கருந்தடங்கண்ணியோடுமகிழ்ந்திடச்சரிசன்றுற்றாப்
‡ பெருந்தகையருளாற்கச்சீவானெனும்பெயரோன்பெட்பான்
முருந்தனமுறுவற்செவ்வாய்முற்றிழைவயிற்றிலுற்றான. (௫௧)

எற்றிகழோரைத்தோற்றமேயினன்றனக்குத் § தோற்றம்
பற்றியகாரணமாதிப்பரிசெலாம்பழையவேதஞ்
சொற்றருமறையினுற்றிசசுருதிநாறருமென்சாகை
முற்றுபாயனமோராதுமுடித்தனன்முனிவர்கோமான்.

முந்துமாச்சிரமர்போற்றமுகிழ்த்தென ○ முஞ்சிபூணர்
நந்தியராசந்தம்பிக்கையில்கோவணமுந்தாங்கி
யிந்துவிற்பிராசாபத்தியத்தியல்விரதமாதி
தந்துறப்பயிற்றிவேதமுழுவதுந்தழையச்சார்ந்தே. ௫௩)

---

* ஒங்குஞ்சீரையுறவு என்பது நந்தையையபோனறிருக்குந்தன்மையைப்பார்த்து என்னும் தாற்பரியத்தின்மேற்று. ஏரை - அழகுடையா. ஒருவர்க்கொருவர்நீயேதாங்கென்று அன்னைதந்தையர்இருவராலும் தனித்தனிசொல்லப்பட்டமையின், அக்குழந்தைக்குப்பரத்துவாசன் எனக்காரணப்பெயர் உளதாயிற்று. பர-தாங்குதல். துவா-ஈண்டிருவர். சம்-உண்டாதல். † தீர்க்கம்-நீட்சி. தமம்-அந்தகாரம். எனவே, தீர்க்கதமன் என்பதற்குப் பிறவியந்தகர் என்பது பொருளாயிற்று. உணர்வாயநாட்டப்பெயர் பிறக்கிஞாசட்சு என்பது. ‡ பெருந்தகை - சிவபெருமான். § தோற்றம்பற்றிய காரணம்-சாதகன்மம். ○ முஞ்சி முஞ்சிப்புல்லு. இது கயிறுக்கிஅரையிற்றரித்துக்கொள்ளப்படுவது. இந்துவியல்விரதம், பிராசாபத்தியத்தியல்விரமெனத் தனித்தனிகூட்டுக. இந்துவியல்விரதம் சாந்திராயண விரதம். பிராசாபத்தியம் பிரமாவினுலே நியமிக்கப்பட்டது. பிராசாபதி-பிரமா. ஒருவர்ந்தசாதிப்பக யாதுவிலைபெறுமோ அவ்விலைப்பணங்கொண்டுசெய்யும் ஓர்விதசற்கருமமே பிராசாபத்தியவிரதமென்க.

* குருகுலந்தன்னினல்கிக்கோதறுபயிக்கங்கோலந்
தருமுறைகவர்ந்துதந்தைக்குய்த்தனுமதியாற்றனும்
வருமுறையயின்றுகாலவமுவறவழங்கிவாய்மைத்
திருமறைப்பயனுமாய்ந்துசேர்முதக்குறையின்மிக்கான். (கச)

அறிவினுனுய்ந்துதந்தையடியிணைபரவியோர்நாட்
குறியுறுமெனதுமாற்றங்குறிக்கொணீகுலவுந்தோற்றஞ்
செறிவுறுமக்கள்யார்க்கு † மிரணமாய்ச்செறியுந்தேவர்
நெறிதருபிதிர்கணீடுமி [illegible] டிபோர்நிவந்தமூன்றே. (க௫)

ஆங்கவற்றிருடிநாட [illegible] தணைவதுன்னருளினுனால்
பாங்குறப்பயில [illegible] போயதேனையபருமவல்குற்
றேங்குழற்றிருவைவாய்ந்துதீர்ப்பவத்திருவுமுன்னுற்
றுங்குவதளித்திதாழாதெனமுனி ‡ சமழ்த்துச்சொல்வான். (கசு)

நோக்கி [illegible] மைநீங்கிரைபுகறுணுகிநீதந்
தாக்கி [illegible] கிழங்குபல்சாயாதியினமர்ந்துவாழ்வேன்
றா [illegible] யென்செய்கேனீயேசுடர்முடியரசர்ச்சாரி
னி [illegible] வரன்றியீசனளிக்குநீயிரந்துபோற்றின். (கஎ)

[illegible] றதுபுரிதியென்னவெழுந்தடிபணிந்துபோற்றிப்
ப [illegible] றருமுனதுபாதப்பணியனறிப்பசையால்வேறு
மூய [illegible] ன்றியாதடைவதாக்கமுதிர்தருப்போன்றுசான்று
நயன்றருமறத்தையோவிநலனெவர்நண்ணினுரே. (கஅ)

திருத்தகுதெய்வமாக்கஞ்சிறந்தருள [illegible] தீமை
முருக்கியதவஞ்சேராதிமுதல்வனின்பாதமேலத்
தருத்தலையேவலாவிதழைப்பதுன்னருளான்மற்றோர்
கருத்திலேன்கடனுமற்றுன்கருணையாற்சழிப்பனென்றே. (ககூ)

திரும்பியவேவலாற்றிவிழைந்தவன்வேதநாத
னரும்பியகருணைபோலுமணிகன்னியங்கிதிக்கிற்
பெரும்பெயர்த்தந்தைவைக § வுடசமொன்றமைத்துப்பின்னுங்
கரும்பியநீர்வாவியதன்முனங்கடிதிற்செய்தான். (உ0)

மணிதெளித்தனையதூய்நீர்மணிகன்னிமருங்கிற்பாவந்
துணிதரமுப்பதாயவிற்கிடைதொட்ட ○ தீர்த்தத்
தணிபெறநானமாதியாற்றியேயறவோன்வைகப்
பணிவொடுசேக்கிவானுமேவலிற்பயினுநாளில். (உக)

---

* குருகுலம்-குருமனை. அல்கல்-தங்கல். † இரணமூன்றுவன தேவர்கடன், பிதிர்கடன், முனிவர்கடன் என்பன. இரணம்-கடன். ‡ சமழ்த்தல்-வருந்தல். § உடசம்-பன்னசாலை. ○ இதுவே கன்னிதீர்த்தம்.

கறையறுமதியத்திங்கட்கதிரொளமுத்தத்தாம
முறைதருகுடையினீழலிலமகனோசையுள்ள
நிறைதரவணித்துநேரார்நெஞ்சகமஞ்சிநாளும்
பறைசெயப்பணித்தவைவேற்பாண்டியனாட்டினின்றும். (உஉ)

எழுந்ததோரமலச்சீர்த்தியதனையுமிறைவகேண்மோ
கொழுந்தவிர்குவவுத்திண்டோட்கொற்றவற்சற்றைநாளிற்
றெழுந்தகுமறத்தாலோர்பெண்டோற்றினள்சதையிற்றூய
செழுங்கதிர்குழைத்துத்தீட்டுஞ்சித்திரப்பாவையன்னாள். (உங)

இருட்புரிந்தனையகூந்தலெழின்முகமெதிர்ந்திராவோ
டுருட்கதிர்மதியர்தோற்றமொழித்துவர்த்துவரிபாய
வருட்கழைமாரற்கியவக்கழையருகிரேணுடிச்
சுருட்குழைதடவுநீலத்துணைவிழிப்பணைமென்றோளும். (உச)

வரிச்சிலம்பரற்றுஞ்செய்யமலரடிவனப்புவாய்ந்து
குருத்தனகுறங்குகாமக்குளிர்நதிப்புளினம்போலப்
பெருத்தொளிர்பருமவல்குற்பெயர்தழீஇப்பொருளைக்காணுக்
கருத்தருநுசுப்புப்பூகக்கண்கரிகளத்தினேரும். (உரு)

பெற்றொளிர்காமவல்லிப்பேரெழில்வனப்பின்மலகி
யுற்றவர்மனமுங்கண்ணுமுண்டிடுமுருவினாகிப்
பற்றியகாமச்செவ்விப்பயன்குழைப்பாங்கிற்சொல்லக்
கற்றனகரியவாட்கட்காரிகைகவினவாய்ந்தே. (உசு)

செறிப்புறவொளிருமேனிநிழல்செயவொரிந்துகூந்தல்
வெறித்தமைக்குழம்புதூவவியனுலகசீந்துமுண்பான்
குறித்தடங்கியவெங்கூற்றமுகிழ்த்தெனகுலவிக்கோங்கிற்
செறிதகமெனமுலையிறகொங்கைத்திசழ்நரத்திருவினமிக்காள். (உஎ)

கடிமணப்பருவங்கூருங்காரிகைதன்னைக்காணூஉப்
படியினைப்புரக்குஞ்செங்கோற்பாண்டியன்பதிவினுவக்
கொடியெனவொல்கிநான்குகோட்டுவெள்ளானைமேல்கொண்
டொடிவறவருவோற்காயினுரியள்மற்றொழிதியென்ன. (உஅ)

கனங்குழைநியமச்சூழ்ச்சிகற்பகநிழலிற்றேவ
ரினந்தொழவைகுந்தேவினிடத்ததாலிதற்குத்தேற்ற
மனங்கொளுஞ்செய்கைகாணேன்வாய்வதுமரிதுமாமை
யனங்கனுமவாவுங்காலமாயிழைக்காயதின்றே. (உகூ)

ஆருயிரனைத்துங்காக்குமரனருட்செய்கையல்லா
தோருவதனைதோவென்னவொழிதலுமுலகமீதே
வாருதமுமுகிலினுட்கோண்மலிந்தசீர்பரந்தவேத
மோருருவாயக்கீவான்செவியுற்றதன்றே. (ஙய)

சிந்தையிற்சேர்த்தியோடுசேயிழைவளப்புமல்கத்
தந்தையினைவல்போற்றுந்தனையனைத்தந்தைநோக்கி
யெந்தையுன்மனத்துவைகுமேந்திழையுனக்குப்பாரி
முந்தையூழ்முறையினென்னமொழிந்தனன்முனிவர்கோமான். (கூக)

சாற்றிய * தந்தைதீர்க்கதமன்றனைத்தனையனோக்கி
நாற்றிசைபரவுநான்குகோட்டுவெண்ணாகமீது
தோற்றினற்குரியளாகுந்துமொழிசுருதிவாய்மை
யாற்றியவறிவவெவ்வாறளியனேற்காவளென்ன. (கூஉ)

மொழிந்திடுமாற்றங்கேளாமுருசலர்பெருகாறி
வழிந்தெழுமதுவார்வேதவனத்துறைவரதனோங்
தொழுங்குலதெய்வமாகிச்சுடர்தலாலரியதுண்டோ
வழிந்திடலவலமெல்லாமவனருளாகுமன்றே. (கூங)

இயற்றலுமியலுஞ்செய்கைமாற்றலுமியலவேறு
பயிற்றலுஞ்சராசரத்தின்பயிறசியும்பரனலாகு
மயற்றுகளகற்றியன்பால்வழிபடவாயுமெல்லாம்
புயற்களத் † தமலற்கன்புபொற்றருப்போலுமன்றே. (கூச)

முன்னமுன்னுள்ளமோர்வான்மொழிந்தனன்வேறதாக
வென்னதுதவத்தின்மேன்மைகாண்டிநீயிழைத்தவேவற்
கன்னதுவாயுமற்று ‡ மாறியாத்திரையுமாற்றிப்
பொன்னவிர்சடையாற்போற்றிற்பொலிதரும்புரிதியென்றே. (கூரு)

மிக்கயாத்திரையீதாற்றிவிழைபவர்க்கரியதேனு
மக்கணமருளுமேன்மையவரிடையருளுங்கூருஞ்
செக்கரஞ்சடையானென்னத்திருவருள்பெற்றுத்தேசார்
தக்கயாத்திரையோராறுமியற்றினன்றருமமிக்கான். (கூசா)

தான்முயன்றியற்றும்பட்டர்தன்னினுமூழ்கித்தந்தை
வான்மகிழ்சரணம்போற்றிமழமதிக்கதிர்க்குமாறுய்த்
தேன்மலிகொன்றைவேதவனத்தரன்சிறந்தசெங்கேழ்க்
கான்மலர்ப்பாதம்போற்றிக்கண்கணீர்கலுழிபாய. (கூஎ)

---

* தந்தையாகியதீர்க்கதமன் என இருபெயரொட்டுப்பண்புத்தொகை. † அமலனிடத்து வைத்த அன்பானது பொற்றருவைப்போல வேண்டிய வெல்லாங் கொடுக்குமென்க. ‡ ஆறியாத்திரைகளாவன சேதுயாத்திரை, பிரமயாத்திரை, தக்கிணமானசயாத்திரை, உத்தரமானசயாத்திரை, விட்டுணுயாத்திரை, அந்தர்க்கிரகயாத்திரை என மேலேகூறப்பட்டனவாம்.

உருகியவன்பிற்பூமியுடனுறப்பணிந்துபோற்றிக்
கருகியவிருள்போயுள்ளத்தருட்கதிர்கலப்பக்கண்ணிற்
பருகியின்புருவமாகிப்பன்முறைபணிந்துபண்பாற்
பெருகியவுவகையோடேந்துதிபலபேசலுற்றான். (கூஅ)

வேறு.

பொய்ப்படக்குழியிற்புரைபடச்சுழற்றிப்புகர்படுபுழையிடைப்புகுப்பா
னெய்ப்பறச்சுழன்றனைபபடுத்தெனையுமெல்லையில்விடயமேற்றுவு
மைப்படுபொறியையனமுடன்மடக்கும்வழியிலேன்மகறவனத்தமர்ந்த
மெய்ப்பொருள்கமலச்சரணமேயரணாப்மேவினனேனவினன்வினையே. (கூகூ)

புலிங்கமார்சனலிற்புகன்மறைச்சிரத்துப்பொருளினைபபுகரறவிளக்கு
* மிலிங்கமாறுணர்ததுாதேசிகனமுகத்தானிலங்கியபார்தெளிசதறியேன்
குலிங்கமாயிகலவேனகுறிகுணமவத்தைகூடிடுமுடற்கியானசரியே
யலிங்கமெனறுணாந்துமையமாயடைந்தேனரணவனத்தநின்சரணே. (சo)

தனுவொருமூன்றுமுலசமுமவத்தைத்தன்மையுமுடலதற்கிடமாய்
மனுமுயிர்சரியெனறுணர்ந்தவற்றுண்மை†மதிப்பதுமனனமாகேள்வி
யனுதினஞ்சமாதியால்விபரீதமகற்றியானந்தமாயுறையப்
பனுமறைவனத்துப்பரஞ்சுடர்சரணபதுமமேயரணெனப்பணிகேன். (சக)

பரசிவமனந்தம்பூரண‡மமேயம்பார்ப்பதிகார்தமானந்தம்
திரமுறுமேகஞ்சிற்பரமசங்கந்தேசுசால்சுயம்பிரகாசம்
வரமுறுமறைசைமணிசரணரணப்மதித்தனனமாயையின்வலிபோய்ப்
பிரமமாயுறையுஞ்சனகனேமுதலோர்பெற்றிநிம்பேற்றினைப்பெறவே. (சஉ)

வேறு.

புரிசடையமல o பரமகல்யாணபூரணவாரணவனத்த
வரியயனமராதிவறவொளிருமனந்தவானந்தமாவசல
தெரிதருசரணமிரிபரமருவுசிற்பரவற்புதசீதம்
விரிதருமமுதமதியினுட்புகுதும்விகிர்தனேவேதநாயகனே. (சங)

போற்றியென்றிறைஞ்சக்கூற்றுயிர்கவர்ந்தபுங்கவன்செங்கண்மால்வி
டைமேற், றோற்றினனமரர்நாற்றிசைபரவத்தொழுதெழப்பழுதில்கக்கிவா, னூறறியவிழிநீர்சாற்றுமன்புருவோயுவந்தனந்துதியினுமதியா, லாற்றியாத்திரையிற்றேற்றியவரநீயறைஎனுமிறையெதிரறைவான். (சச)

---

* இலிங்கமாறு-சிக்ஷைமுதலியவேதாங்கங்களாறு. குலிங்கம-காக்கை. அவத்தை அவத்தாத்திரயம். சரி-சான்று. அலிங்கம் இலிங்கமல்லாதது. இலிங்கத்தன்மை அறியாதிருந்தும் தேவரீரை யடைந்தேன் என்பதாம். † மதிப்பது-தியானித்தல். மனனம்-பற்றுதல். கேள்வி-சிரவணம். சமாதி-கிட்டைகூடல். ‡ அமேயம் - அளவிடப்படாதது. அசங்கம்-பற்றில்லாதது. o பரமகல்யாண-மேலான மங்கலத்தை யுடையவரே.

## வேறு.

மயக்குமாயையாலுலகுயிருளதெனமதித்து
நயக்குமாறறவாவியுநீயெனநயந்தே
வியக்குமேன்மையுமுற்று*நின்னுருவமேவேறு
பயக்குமொன்றிலையென்பதும்பணியெனப்பகவன். (சரு)

இன்னநல்வரமீந்தன†முடலுடனியன்று
மன்னுமார்வினைமாய்தரிடப்பாண்டியன்மகளாம்
பொன்னவாமுலைப்பூவையைமணந்துநற்புதல்வர்
நின்னையொப்பவர்ப்பயந்தருமகமெலாநிறைத்தே. (சசு)

கடனைத்தையுங்கழியினமோர்வரங்களிவாற்
றடமியற்றினையத்தடநின்பெயர்சார்ந்தே
யுடலியற்றியதீவினையாடினர்க்கொழித்தே
யிடனுடைத்தலத்திலங்குகவென்றனனிறைவன். (சஎ)

இறைவனம்மொழிகூறலுமுனிமகனிறைநீ
யறையுமாதயிராவதப்பிடர்த்தலையலங்கி
யுறையுமாங்கவற்குரிமைபூண்டனளொளையொக்குங்
குறையுளாற்கரிதென்றிடக்கூறினன்குழகன். (சஅ)

நேயமார்தருபாண்டியனிருக்கையைநினைந்தே
யேயவேகுழியிலங்கிராமேச்சுரத்தெல்லை
பாயநம்மருட்பான்மையாற்குறுமுனிபட்டத்
தாயநற்களிறடைந்துனையேந்திடுமடைவாய். (சகூ)

என்றுகூறியவ்விலிங்கமாய்மறைந்தனனிறைவன்
றுன்றுகாதலான்முனிமகன்வழிக்கொண்டுதொடர்பாற்
சென்றுசீரிராமேச்சுரத்தகத்தியதீர்த்தத்
தன்றுகண்டுவெள்ளானையேலிவர்ந்தனனம்மா. (ருo)

வெள்ளிமால்வரைமேல்கொளும்விரிசடையோனிற்
புள்ளிமாமுகக்களிற்றின்மேற்பொலிந்துபாண்டியனை
யுள்ளியேகலும்வேட்டையாலவ்வழியுற்றோன்
றெள்ளியோர்ந்தனன்பாண்டியன்சிறுவன்யாரென்றே. (ருக)

ஆய்ந்தமைச்சனையழைத்தயிராவதப்பிடர்மேல்
வாய்ந்தமாதவன்றன்னுழைவழிபடுமொழியா
லேய்ந்ததென்னிவண்யாவனீயெனவினயிருள்போய்
மாய்ந்துதீர்தரவழங்கெனவேகினன்மகிழ்வால். (ருஉ)

---

* நின்னுருவமே வேறு பயக்குமொன்றிலை என்றது சீவன்முத்தியை.
† உடலுடனியன்று மன்னுமார்வினை பிராரத்துவம்.

பரிவினானணைந்தருமுனிபாலனைப்போற்றிக்
கரியின்மீதுயர்கடவுளோயாரைநீகாட்டிக்
கரியையேகுவதெங்குநாலிங்குனையாய்ந்து
தெரியவேவியபாண்டியனமைச்செனச்செப்ப. (௫௩)

மற்றவாய்மொழிகேட்டியான்வானவனல்லே
னற்றவத்தருமுனிமகனயந்தபாண்டியன்சீர்
பெற்றகன்னியைவேட்பதற்கரனருட்பெட்பா
லுற்றகாரியமென்றிடவமைச்சனுமுவந்தே. (௫௪)

ஏகிமன்னவற்கியம்பலுமிலங்கிழைப்பணைத்தோட்
பாகினன்மொழிபகர்ந்தருள்பழுத்ததென்றெழுந்து
போகிமாதவப்புதல்வனைப்பணிந்துநின்புரிவற்
றாகினையயான்பாண்டியனென்பவனாமே. (௫௫)

ஆன்றபேரறத்தணிதிரண்டகலிடத்தெதிர்தாங்
கீன்றதையலையியன்மறையொழுக்கினிலெரியே
சான்றதாயிடத்தருகுவன்கோடிநீயென்ன
வேண்டுமன்னவற்கினிதெனமுனிமகன்விளம்பும். (௫௬)

வேலையினொலிவிழாவொலிமறையொலிவிளங்குஞ்
சாலைமாமகச்சடங்கொலிதழைத்திடத்தடம்பூஞ்
சோலைசூழ்மறைவனத்திடைச்சுருதிநூற்றுறையின்
* மாலைமாற்றுமென்றந்தையுண்மகிழ்ந்துமன்னினனால். (௫௭)

அனையதீர்க்கதமாவெனப்பெயர்பெறுமறவோன்
றனையனாமெனக்கவனருடலைமிசைக்கொண்டே
நினையுமாறெனவரசனுமமைச்சனைநீபோய்த்
துனைவினாங்கவற்கொணர்கெனவேகினன்றுணிவால். (௫௮)

கானகம்பலகடந்துதன்வளமெலாங்கவர்ந்து
வானகங்கழிகாலையிற்கிடந்தெனவயங்கி
† யானகம்பலதுவைத்திடவொலிக்கடலாகுந்
தேனகம்படுசோலைசூழ்மறைவனஞ்சேர்ந்தான். (௫௯)

முனிவனீரடிமுளரியிற்பணிந்துநின்புதல்வற்
கினியனாகியபாண்டியன்புதல்வியையீவான்
றுனியினன்மொழிசொல்லெனவிடுத்தனன்றூயோய்
கனிவினாயவன்மந்திரியானெனக்கரைந்தே. (௬௰)

---

* மால்-ஈண்டுச் சந்தேகவிபரீதங்கள். † ஆனகம்—வாத்தியப்பொது.

விரைவினேகெனவிழைந்தவன்றேர்மிசைமேவித்
திரையிரங்கிராமேச்சுரத்தவனுழைச்சேர
வரையனேய்ந்தவனடிதொழுதருந்தவத்தறவோய்
கரைவிஞுனைக்கண்டதெத்தவப்பயன்கடியேன். (கக)

என்றுநன்மொழியியம்பியென்புநல்வினையியல்பாற்
றுன்றுநின்மகற்களித்திடத்தணிதியென்றுரைப்ப
நன்றுநின்குலத்தியற்கையாற்றவமுனிநயப்ப
வொன்றுமென்றுபேருவகையோடுரைத்திடவுரவோன். (கஉ)

ஆரியமாதவரந்தணரரசரையழைத்தே
யுரியவோரையின்முறைவழியழற்றுறையோங்கக்
கரியவாட்கயற்கண்ணியைமணந்தகக்கிவான்
புரியநல்கியேபுகலருமகிழ்ச்சியிற்பொலிந்தான். (கஙு)

இலங்குபன்மணியானினம்பழனவூரிமைக்கும்
பொலங்கலம்பலபுரிவொடுமளித்திடப்போகிக்
கலங்குதெண்டிரைவளையொடுகருமணிபுரட்ட
வலங்கிராப்பகற்பொருவபோன்மறைவனமடைந்தான். (கச)

பயந்தமாமுனிதன்னொடும்பரிவுறும்போகம்
வியந்துவேண்டுவநுகர்ந்துபன்மகங்களுமவேட்டு
நயந்தஞானமுமுத்தியோடணைதரநலத்தா
லுயர்ந்துமல்கினனியாத்திரையாறிஞுரவோன். (கரு)

வேறு.

கருதியாத்திரையாற்றிடுகக்கிவான்
சுருதிமாவனந்தொட்டநற்பட்டமே
பரிதிபோலிருள்பாற்றும்படிந்திடின்
வருதியானமறுமையுநல்குமே. (கசு)

முன்னியன்னதின்மூழ்கிமுகிணைகைக்
கன்னிதானமளிப்பவர்காண்பய
னுன்னியாரளப்பாருலவாப்பயன்
பன்னியாடப்பவத்தையும்பாற்றுமே. (கஎ)

வேறு.

யாத்திரைவிழுப்ப
மேத்தினனறிதி
வேத்தியலருத
பார்த்திபவினிதே. (கஅ)

கக்கிவச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருகo.

---

# வன்னிச்சருக்கம்.

நரைதிரையொழித்திடுநறியதீங்கனி
யுரையெனப்பொலிதலாலுள்ளத்திச்சையே
வரையெனப்பொலியுமான்வன்னியிப்பதி
விரைதருமிக்கதைவிளம்புவாயென. (௧)

வேந்தனீதுரைத்தலும்விழைந்துநாரதன்
பூந்துணர்மதத்துளிபொழியும்வன்னியீங்
கேய்ந்ததுமதனிடல்பெனைத்துங்கூறுவன்
மாந்தரிற்றேவநீமதியென்றோதுவான். (௨)

அருவியுமதியெனவமுதவெண்ணிலா
மருவொளிவார்தலுமயங்கிமாமதப்
பொருகளிறொளியினிற்புழைக்கைநீட்டியே
யுருவுறுகிழற்கரியொளிப்பப்பாயுமே. (௩)

வானகநிறைமதிவயங்கல்போலெழு
கானகநடுவுறைகயிலைமாமலை
யானகவொலிக்கெதிரதிர்ந்திராவணன்
றானகமுறைமறைசாற்றுந்தன்மைத்தே. (௪)

அறமலர்முகிழ்த்தபூந்துணரினுசறு
நிறமலரவ்வரைநெருங்கிச்சூழ்தருந்
திறமலிபொருப்பினுட்சிறந்துதெய்வமார்ந்
துறமலிசத்தியகிரியொன்றோங்குமே. (௫)

அன்னதுகயிலையோ * டழுக்கற்றுங்குயர்
பொன்னவிர்குடுமியிற்பொலிந்துநூறெனப்
பன்னருமியோசனைபரப்பினுயிர
மென்னநீள்யோசனையுயரமெய்துமே. (௬)

முடியிரண்டியோசனையகலமுற்றியே
கடிதருநறுமலர்கமழ்ந்துகாயத்திற்
பொடிமணிதாதுவிற்பொலிந்துபொற்றருப்
படிநிழற்கின்னரர்பயிலும்பண்பிற்றே. (௭)

வெள்ளியங்கிரியிருப்பொருவிவீங்கொளி
யுள்ளிநன்கிம்மலையுறையுவப்பினாற்
றெள்ளியதித்தலைச்செறிந்துகாசிப
னள்ளியவருந்தவம்புதல்வர்க்காற்றினான். (௮)

* அழுக்கற்றுங்கு— அழுக்காற்றைச்செய்தாற் போல.

ஆற்றியவருந்தவத்தமலன்முன்புறத்
தோற்றினன்றோற்றலுந்தொழுதுதூய்மறை
போற்றியவிசையினூற்புகழ்ந்துபோற்றியக்
கூற்றயரடிமலர்குழையத்தாழ்தலும். (கூ)

முனிமுகநோக்கியேமுதிருங்காதலா
லினிதுறுபுதல்வரையெய்துவாயெனாக்
கனிவொடுகூறியாங்கடிதுதோற்றுதற்
குனியதொர்காரணமுணர்கென்றோதுவான். (கo)

மழலையஞ்சின்மொழிமதுரத்தேன்சொரி
குழவியங்குமரனைக்கொடுங்கையேந்தியே
நிழன்மணியிவ்வரைநெற்றிமேன்மகிழ்ந்
தழல்விளையாட்டினாலுமையுலாவினாள். (கக)

இளந்தளிர்நலங்கவர்ந்திலங்குநல்லெழில்
வளம்பிறிதாகலுந்தளர்ச்சிவாட்டமு
முளந்தெளிதோழியருரையுமோரையு
மளந்திலள்பான்முகக்குழவியன்பினால். (கஉ)

* புறம்பொலிநம்முயிர்போலுமங்கைதன்
றிறம்பலவுணரவுஞ்சிரமந்தீர்க்கவு
நறுங்குழறளர்சமியென்னுநம்முளத்
தறம்பொலியேவலிற்சமியதாகியே. (கங)

பனியிணர்ப்பாசிலைபரப்பியின்னிழற்
கனிமதுத்துளியொடுகலந்துவீசலின்
முனிவுறுதளர்வகன்றின்பமுற்றினாள்
வனிதையர்திலகமாய்வயங்குமங்கையே. (கச)

வளர்விளையாட்டொடுதளர்ச்சிமாற்றியே
யுளர்சிறையளிக்கமுதுயிர்க்கும்வன்னியின்
கிளர்நிறங்கண்டரிக்கெண்டைக்கண்ணினு
ளுளமுறமுறுவலோடொல்கிமெல்லென. (கரு)

---

* அகத்தின்கணன்றிப் புறத்தின்கட்பொலியும் நம்முயிர்போலும் மங்கையது விளையாடல்களைப் பார்த்தறியும்பொருட்டும்,அவ்விளையாடற் சிரமந் தீர்க்கும்பொருட்டும்,நறுங்குழலினது சிரமத்தைப்போக்கென்னும் நம்மனத்ததேவலான் நாம் சமிவிருக்ஷமாகி என்க. சமம்-போக்கல். சமமெனினும் சமனமெனினுமொக்கும். சமி-போக்குவது. இவ்வன்னிவிருக்ஷம் உமையம்மையினது விளையாடற் சிரமத்தைப் போக்கினமையாற் சிரமாபநோதனம் எனவும் பெயர்பெறும். அபநோதனம்-போக்குதல். மங்கை-நண்டு நித்தியகன்னிகை என்னும் பொருட்டு.

பரிபுரமரிச்சிலம்பரற்றப்பன்மலர்
புரிகுறுங்கருங்குழற்பொம்மல்வெம்முலை
தெரியுமெம்முருவெனத்தெளிந்துபோற்றியே
யுரிமையிற்பரிவொடுமுவந்துவேண்டினாள். (௧௬)

வேறு.

எண்ணருங்கருணைகூரவென்னிடையருளாலிங்குப்
புண்ணியவுருவமாகப்பொருந்தினையென்றுமேவிக்
கண்ணிணைகுளிரநின்றுகளைதவிர்த்திடுதியென்னாப்
பண்ணமர்மொழியாள்வேண்டநின்றனம்பாற்றித்தாபம். (௧௭)

பிதிர்சுணங்கரும்புங்கொங்கைப்பெய்வளைவேண்டநின்ற
தெதிருனக்குற்றவன்னியிதுவதனிலங்குஞ்சார்பின்
முதிர்தவமுயன்றவாற்றான்முன்னுனக்கெளிதுதோன்ற
வுதிர்கனியுமிழுந்தீஞ்சொ * லும்பலுமுற்றாயன்றே. (௧௮)

இயம்பியவன்னிநீழலிலங்கொளித்திங்கட்புத்தேள்
நயம்படுசெறிவான்மிக்க † வோடதிநாதனானன்
வயம்பெறுமவுணர்சாய்வானித்தலைவானநாடர்
சயம்பெறக்குமரன்சேனாபதியபிடேகஞ்சார்ந்தான். (௧௯)

இத்தருநீழன்மேவியெம்மிடைச்சனகன்முன்னோர்
புத்தமுதனையஞானம்புரிவுடன்மகிழ்ந்துபெற்றார்
கொத்தவிழ்நிழலினற்பங்குணத்தனவேனுந்தன்றாய்
முத்தியைநல்குமீயுமொழிந்தனயாவுமன்றே. (௨௰)

அஞ்செழுத்தொருகாலீக்குப்பகரினுமனந்தமாகி
வஞ்சமுறறியவெம்பாவவாரியைவறளவாக்கி
நெஞ்சமுற்றமலமாகநீடருணிறைத்துநந்தாட்
கஞ்சமுற்றின்பமேவிக்கலந்துறவனிக்குங்கண்டாய். (௨௧)

வேறு.

எனவுரைபகர்ந்தரனேகக்காமிபன்
றனதுறுநிலையிடைச்சார்ந்துவைகினா
னனையகுன்றிராமனன்றனைசெய்காலையிற்
றுனைதருகவயனாற்றோண்டப்பட்டதே. (௨௨)

விற்றிறலிராகவன்வெற்றிமேயவன்
கற்றிரளிலங்கையைக்கருதிக்கார்க்கடற்
பற்றணையியற்றியஞான்றுபார்வயி
னற்றழிதரக்கிரியரிகளாற்றினார். (௨௩)

---

* உம்பல்—பிள்ளை. ஓடதி-மரமுதன்மருந்து.

நெருங்கியகிரிக்குலமகழ்ந்தநீர்நிலஞ்
சுருங்கியவணைசெயத்தொடங்குங்காலையிற்
பொருங்கயமுழுவலிக்கவயன்போயதன்
மருங்குறைசத்தியகிரியைவௌவியே. (௨௪)

அத்தியினிடுதலுமழுந்தியாயிரந்
தொத்தியயோசனைசுடரும்பாரள
வொத்தினிதச்சியினொளிரும்வன்னியு
முத்திமென்கனிதரமுகிழ்த்தமூயதே. (௨௫)

இந்நிழலிராகவனியற்றிநற்றவந்
தன்னியகத்தியைத்தொலைத்துத்தூயனாய்
மன்னினன்கடிதரன்மகிழ்ந்தவாய்மையாற்
றன்னிகர்கவுசிகன்றானுஞ்சார்ந்தரோ. (௨௬)

பெருந்திசைநான்கினும்பெருகுநற்றவந்
திருந்தியவாற்றியுஞ்செம்மைசேர்கலான்
வருந்தினன்மறைவனவன்னிவார்நிழற்
பொருந்தினன்பிரமமாம்புனிதத்தன்மையே. (௨௭)

* பொன்றிரள்பூந்துணர்பூத்தவன்னியின்
மன்றிரிசங்குறநோற்றமாண்பினான்
மின்றிரள்விமானமேன்மேவிவாழ்ந்தன
னன்றியுமிருடிகளனந்தமாயினார். (௨௮)

வார்ந்தருசமியிடைமன்னிமாதவஞ்
சேர்தருஞானமெண்சித்தியெய்தினா
ரோர்தருதவஞ்செபந்தான † மீரெரி
யாரழலிதன்கணொன்றனந்தமாகுமே. (௨௯)

வேறு.

அன்னமீந்தவரிதனகத்தரன்புரியணைவார்
பன்னுமாமறைப்பனவருக்களித்திடிற்கலையின்
மன்னவாற்றியசிராத்தநற்பயன்றருமறைதேர்
முன்னவர்க்‡கினன்றினமரிதினஞ்செயுமுறையால் (௩௦)

---

* வன்னிப்பூப் பொனனிறமாகலிற் பொன்றிரள்பூந்துணர் என்றார்.
† ஈரெரி இரண்டக்கினி. பின், ஆரழல் எனவே, மூன்றக்கினி என்றதாயிற்று. அம்மூன்றக்கினிகளுட் காருகபத்தியம் கிருகத்தாச்சிரமத்திற் குரியது. ஆகவனீயம் யாகாதிகளுக்குரியது. தக்ஷிணாக்கினி அபரகிருத்தியங்களுக் குரியது எனவறிக. ‡ இனன்றினம் ஆதிவாரம். அரிதினம் ஈண்டுத் துவாதசித்தினம்; ஏகாதசித்தினமன்று. செயுமுறையாலாற்றின் என முன்னர்க் கூட்டுக.

* ஆற்றினட்டகஞ்சோடசக்கயைப்பயனளிக்குந்
தோற்றுவாவினிற்சதகுணமாயிரந்தொடர்பாற்
சாற்றுமாவிதிபாதத்துத்தருமகமாகந்
தேற்றுநாட்செயவாயிரமுனை அறச்செறியும். (கக)

அயனமேற்பதினுயிரம்விஷுவமவ்வாறும்
பயனதாமுபராகத்தினிலக்கமாம்பலன்கள்
சயனமாமருத்தோதயமகோதயந்தம்மில்
வியனதாகியகோடியாங்கயைதரும்வினைவே. (கஉ)

எத்தினத்தினுமித்தலையளித்திடிற்கயையின்
வைத்தருத்தியபயனுறுமொருபிடிவரம்பும்
பைத்தமேருவிற்பயன்படும்பயின்றனவெல்லாஞ்
சித்தமார்தருசித்தியாம்வன்னியின்சிறப்பால். (கங)

பாசிலைப்பரமாகியவன்னியைப்பணிந்தே
தேசுசாலிலைதரித்திடினிரவுறாதீங்கும்
பேசுநோய்களும்பிரிந்திடுமண்முடிப்பெய்யி
னுசிலாமுத்தியணைந்திடுஞ்சிதத்திகளனைத்தும். (கச)

வேறு.

முற்றிநின்சித்திகள்வன்னிமூலமே
பற்றிடவுடன்றரும்பரப்புமபல்குணத்
துற்றதைசிடவன் † றணியினுலுற
வற்றமிறேவலன்மறைசையண்மியே. (கரு)

பொலிமணிகன்னிநீர்மூழ்கிப்பூந்துணர்
மலிதருசமியடிவைகிமந்திர
மொலிபெறவுரைத்தயனுலகமெய்தினுன்
கலிவலிதொலைந்திடுஞ்சமிகண்காணவே. (கசு)

வேறு.

வன்னிவரத்தது
பன்னினமிக்கதை
முன்னினர்பெற்றவர்
மன்னவமுத்தியே. (கஎ)

வன்னிச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் கூஉஎ.

---

* ஆதிவாரத்தில் எண்மடங்கு பலனும், அவாதசித்தினத்திற் பதினுறு மடங்கு பலனு மளிக்குமென கிரணிறையாகக் கொள்க. அட்டகம் எட்டின் கூட்டம். மகமாகத்தேற்றுநாள்-மாசிமாசத்து மகநக்ஷத்திரதினம். † தனிமணவைரம். சைசிடேவ்வியமுனிவரிடத்துக்கொண்டமணவைரத்திறுவென்க.

# பஞ்சாக்கரச்சருக்கம்.

புரிநரம்பிரங்கிசைப்புதியவின்மது
விரியுநின்வீணையினெழுந்தமெல்லிசைப்
பரிதருமுளமெனப்பகர்ந்தகாதையிற்
றெரிதருமென்மனவிருப்பஞ்சென்றதே. (க)

பகர்தருகாதைமுன்பரிந்தவெண்ணில
வகருறுகொழும்புகையணியினுகமே
நிகர்தருமறைவனநீர்மைபோலவே
புகரறுமின்பமேபுரிந்ததல்லவே. (உ)

வன்னியினீழலஞ்செழுத்தும்வாய்ப்புற
வுன்னிடிற்படனபெரிதுதவுமென்றுமுன்
பன்னினையம்மனுப்பயிற்றும்பான்மையு
முன்னியபயனையுமொழிகுவாயென. (ங)

மன்னவனுரைசெயமகிழ்ந்துமாமுனி
யன்னதன்பெருமையையகிலமாகிய
முன்னவனன்றியாரறிவர்மொய்குழற்
கின்னணமியம்பினனீசனென்பவே. (ச)

எண்ணருமந்திரத்தியற்கையாவையு
முன்னிகழ்ந்துறவுமையுணர்ந்திவற்றினுற்
கண்ணியபெரும்பயன்காண்பதின்றெனுப்
புண்ணியனடிபணிந்தன்பிற்போற்றவே. (ரு)

பானலங்கண்ணுமைபரிவுதீர்தர
வானனமொன்றினொன்முகவஞ்செழுத்
தூனமிலொலியொடுமுதித்தவாலவை
வானமர்தாரகத்துருவம்வாய்ந்தவே. (சு)

மறைகளுமாகமவழக்குமற்றைய
விறையவனூல்களும்யாவுமஞ்செழுத்
தறைதருபொருள்விரித்தறையுமாதலாற்
பிறைதவழ்சடையவனனையபெற்றிய. (எ)

அஞ்செழுத்தமலனதுருவமஞ்செழுத்
தெஞ்சலிறிருநடமிறைவனைந்தொழி
லுஞ்சுறுநெறிபொறிகரணமூழ்பசு
மஞ்சமர்பொருளெலாமவைகளாகுமே. (அ)

அரனொடுமெஞ்செழுத்தமிக்கமாகியே
யுரனுறவொற்றுமையுற்றுநிற்றலாற்
பரவுயிர்நீங்கரும்பதியைப்பற்றுமா
றிரவிரியருளெனவிலங்குமென்பவே. (௨௯)

விதிவழிமந்திரமுணர்ந்துமேன்மைசால்
பதியுருவாகியகுரவன்பாற்பசர்
மதிநிலமளிக்குமிம்மனுவுக்கங்கமாங்
கதிதருமிருடிமுன்னுயகாட்சியும. (௩௦)

கரமுதலாகியநியாசங்காமர்சீர்
தாவிரிதியானமுஞ்சாற்றுமூவகை
பரவியவுரைவிதிப்பண்புமோமாதையும்
விரவியவாய்ந்தபின்விளைத்தல்வேண்டுமே. (௩௧)

மனுவினுளரசெனமதித்தமாமனுப்
பனுமுறையறிந்துளம்பதித்துபபோற்றிடிற்
றனுமுறைமூன்றினுநகழைந்தவல்வினை
யுறுமுனமெரியுறுபஞ்சிஞெயுமே. (௩௨)

வருணமாச்சிரமமாம்வரம்புங்காலமுந்
திருமலிதேசமுஞ்சேர்ந்திடாதுயிர்க
கிருமையுமுதவிமேலின்பமீதயர்
கருமவிபிறவியுங்காயுங்காட்சிய. (௩௩)

எத்தலத்துறைப்பினுமிரிந்துத்தீவினை
கைத்தலமுத்தியுங்காட்டுமாயினுஞ்
சித்திசேர்தலத்திடைச்செப்பிற்சீர்தரு
மத்தலமுணர்த்துவனரசகேட்டியால். (௩௪)

நலம்பெறுமந்திரநவிற்றநன்மைசா
றலம்பலபுடவியிற்றழைக்குமாங்கவற்
றலம்புநீர்நாவலந்தீவினூர்சில
வுலம்படுதோளினுயுரைப்பனோர்தியே. (௩௫)

பெருந்திரைமணிப்பிரயாகைகைமிசந்
திருந்தியகயைதிருக்காசிமானதம்
பொருந்தியவிலந்தையக்காணம்பொற்கரி
வருநதுசேதாரமேமந்தராசலம். (௩௬)

# வேதாரணிய புராணம்.

சித்திரசிலைப்பெயர்த்தானந்தேசுறு
மத்திரியம்பகமாதியேமௌன
வைத்தகோதாவிரிமல்லிகார்ச்சுன
முத்தணிகாஞ்சிமாமுதுகுன்றென்பவே. (௧௭)

ஓதியபுண்ணியதலத்தினுண்மையா
லாதியமறைவனமதிகத்தோங்கலி
னேதமிலத்தலத்தியம்புமாயிரத்
தாதியமிதனினொருருவினுண்டரோ. (௧௮)

விரைதருமறைவனமேவிமேன்மைசான்
றுரையுறுமஞ்செழுத்தொழுங்கினோதியே
பரைதருமுத்தியிற்படிந்துளார்தமைக்
கரைதரினெண்கரைகடக்குமென்பவே. (௧௯)

அருக்கனற்றினத்துறுமமையினுசெலா
முருக்கிடுமாமணிகன்னிமூழ்கியே
பெருக்கினின்று†யிரப்பத்திற்பின்னிரண்
டிருக்குறுமஞ்செழுத்தியல்பினெண்ணினோர். (௨௦)

ஆற்றியதீவினையழித்தெண்சித்தியும்
போற்றியவுலகினிற்பொலிவரன்னவர்
தோற்றமேகாணினுந்தொடர்ந்தவிப்பிரர்ச்
சாற்றியகத்தியுந்தளர்ந்துசாயுமே. (௨௧)

இணையறுமித்தலத்தியல்புதேர்ந்தருட்
புணையுறுமஞ்செழுத்துளத்துப்பூரியா
வணைதருமுக்குறும்பரிந்த‡வையரித்
துணையெனற்கரியரித்தலத்துத்துன்னினார். (௨௨)

---

* சித்திரசிலை என்னுந்தலம். தேசுறுமத்திரி அருணாசலம். அம்பகம் திரியம்பகம். ஆதியேமௌனவைத்தகோதாவிரி சத்தகோதாவிரி. இன்னும், என்ப என்றமையாது, ஓதிய எனமிகுத்துக்கூறலான், ஸ்ரீசைலம், தீர்த்தபருவதம், கோபருவதம், சங்காத்திரி, சூலபருவதம், கந்தகிரி, சித்திரகூடம், மக்ஷிமலை, (மக்ஷி-ஈ.) கெசாரணியம், பிரமேசுரம், வீமவனம், மார்க்கண்டேயம், மத்தியார்ச்சுனம், கோமதீசம், மாயூரம், பாசுபதம், மாகாளம், தாண்டேசுரம், பிரயாணேசம், வில்வவனம், வன்மீகம், என்னும் தலங்களும் பஞ்சாக்ஷர செபத்திற்கு விசேடமுடையன வாகலின், அவற்றையுந் தழீஇக்கொள்க. † பன்னீராயிரமுருச்செபித்தவர். ‡ ஐயர்-தேவர்.

உளந்தெளிகபிலன்முன்னுறுத்தயோகிக
ளளந்தறிவியாதன்முன்னாயவந்தணர்
கிளர்ந்தெழு*வாலகில்லியர்கள்கேடிலிவ்
வளம்பதிலைகினன்முத்திவாய்ந்துளார். (உ௩)

எறிதிரைமறைவனத்தியாவராயினுஞ்
செறிதருமஞ்செழுத்துளத்திற்சேர்த்தினா
ரறிவருமுத்திதங்கரத்துளாக்கினார்
வெறிகமழிலங்கிலைவெயில்செய்வேலினாய். (உ௪)

சொற்பலபெருக்கியென்சுடருமஞ்செழுத்
†தற்புதமொருமுறையறையுமன்பினார்
பொற்புறுமறைகளுன்கங்கம்பூரியா
வெற்படவோதினபயனையெய்துவார். (உ௫)

பாவனைநியாசமுமியற்றும்பண்புமற்
றேவரேயெனினுமிங்கியம்பிணிப்பயன்
காவலநெறிமுறைகணித்தகற்பினார்
தேவரேமறைவனஞ்சேர்ந்தசெய்கையார். (உ௬)

ஆகையாலஞ்செழுத்தகத்துளாக்கியே
யோகையாலிப்பதியுரைத்தல்வேண்டுமாற்
பாகையார்மென்மொழிபங்கனற்பத
மீகையான்முத்தியுமெளிதினெய்துமே. (உ௭)

துத்தியம்பஃறலைப்பாந்தள்சோர்வுறா
தித்தலந்தாங்குதோணிறைவவிக்கதை
புத்தியுமுத்தியும்புரக்கும்புண்ணியம்
பத்தியிற்கேட்டியாற்பரிதிவேலினாய். (உ௮)

மின்னுசாகல்லியபுரத்துமேவிய
பன்னுசீர்‡வேதபப்பணவன்பாயசீர்
மன்னினான்வேதநூல்வழக்கின்வாழ்பவன்
றன்னுயிரெனவுயிரவிக்குந்தன்மையான். (உ௯)

---

* வாலகில்லியர்கள் பிரமாவின்புத்திரர்கள். பிரமாவின் பின்புறத்திற் பிறந்தமையால் வாலகில்லியரெனப்பெயர்பெற்று.இவர் அறுபதினாயிரவர்.
† அற்புதம் - ஓரெண். ‡ வேதபப்பணவன் - வேதபனென்னும் பெயரையுடையபிராமணன்; வேதத்தைப்பாராயணம்பண்ணினவன் என்பது பொருள்.

நெடியநாட்டன்பதிவைகிநேரிலான்
முடிவறுதீர்த்தயாத்திரையின்முன்னினான்
படியமர்தீர்த்தங்கள்படிந்துபற்றினாற்
கடிகமழ்மறைவனங்கண்டுகாதலால். (௫௦)

தீவினையிருள்கெடத்திகழுந்தீர்த்தநான்
காவியினமுக்கறமூழ்கியன்பினாற்
பூவியலருச்சனையாற்றிப்பொங்குசீர்
நாவியலஞ்செழுத்துளத்துநாடியே. (௫௧)

மறைவனங்காதலரல்லைவகிவாழ்பவ
னிறையவனிசியெனவிலங்குநாள்வரக்
கறைகெழுமிடற்றவற்சலந்தவனபிரு
னிறைதருபூசனைநிகழ்த்திநீர்மையால். (௫௨)

துஞ்சலற்றிரவிடைத்துகளற்றோங்கி
வஞ்செழுத்துளத்துறவழுத்தியார்வமோ
டெஞ்சலுறறிடாதுரைதிரு[illegible]
கஞ்சநற்முனினைக்கதியினமேவினான. (௫௩)

ஆதியாச்சிரமமாநதனுளனுக்
கோ*தவகிரணமுற்றதாயிடி
னுதனன்மறைவனநண்ணித்தீர்த்தங்கள்
காதலினாடியக்கடவுட்போற்றியே. (௫௪)

ஒருபதினாயிரமுறைக்கினஞ்செழுத
தருவினையொழிந்திடு,† மகத்தினமேவினான்
வருமதிற்பாதியாம்,வனத்தினான்றனக்
கிருமடி, யதிதனக்கிலக்கமாகுமே. (௫௫)

‡ பட்டினியைந்துநாட்,பாதி,பத்துநா,
ளெட்டியல்மாதமு,நிரையினாயிடு
மொட்டியமறப்பினாலுற்றதீங்கினுக்
கெட்டியவுருவினானிசைத்ததாகுமே. (௫௬)

---

* அவகிரணம்-சிதறுதல், எனவே, தவறுதல் என்றதாயிற்று. இதுமேலுங்காட்டப்பட்டது. † அகத்தின்மேவினான் - கிருகத்தன். வனத்தினான்-வானப்பிரத்தன். யதி - சந்நியாசி. ‡ நால்வர்க்கும் முறையே உபவாசம் ஐந்துநாளும், இரண்டரைநாளும், பத்துநாளும், ஒருமாதமுமாம் என்க.

அதிர்ந்துளம்பல்லநாளாற்றினர்வினை
யெதிர்ந்திடுநற்பரிகாரமில்லையாற்
* றுறந்தவர்போற்கலன்றுறந்ததோகையர்
செறிந்தவர்மறையுளான்போலச்செய்கவே. (௧௭)

வன்னிகீழுஞ்செழுத்துரைதருமாதவர்க்
கன்னமதளித்தவரமலனுருவ
ருன்னினென்றுலப்பிலாப்பயனுற்றோங்கிடு
மன்னநீமனத்திதுமதித்தியென்றனன். (௧௮)

வேறு.

அக்கரமைந்தினை
பக்கமறிந்தே
மிக்கவர்யீடார்
தக்கவர்தாமே. (௧௯)

பதராகநகரச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௯௯.

---

# பிரதக்ஷிணச்சருக்கம்.

---

மறைவனநாதனைவலஞ்செய்மாதவத்
துறையினைமுனிவரசொற்றியென்னவே
கறைநபவருளினன்கருணையாற்சனிந்
தறைகடலுலகினைபளிக்குநீர்மையான். (௧)

நாதனைவலஞ்செய்வவென்றுநாடவே
பாதகமாயினமுற்றும்பாறியே
காதமதுற்றிடுஞ்சருதியாற்றிடி
னேதமினமுத்தியுமெய்துமென்பவே. (௨)

வேறு.

மறைசையண்ணலைவலஞ்செயவங்கவன்மகிழுங்
குறைவில்பூசையாம்பூசனையாற்றியுங்கோயின்
முறைவலஞ்செயாரருச்சனைப்பயன்பெறார்முற்று
மிறைவன்பூசனைவலமுறச்சூழ்ந்திடுமியல்பே. (௩)

---

* அமங்கலிகள் சந்நியாசிகளைப்போலவும், சுமங்கலிகள் பிரமசாரியைப்போலவும், மேற்கூறிய பிராயச்சித்தஞ்செய்துகொள்க என்பதாம். செறிந்தவர் கலன்செறிந்தவர். மறையுளான் பிரமசாரி.

மாயனேமுதற்றேவருக்கெண்ணிருவகையா
லாயகல்லுபசாரமேயருச்சனையாகும்
பாயமாமறைவனத்துறைபரமனுக்கன்பா
லேயுமாவலஞ்செய்தலேயருச்சனையென்ப. (௭)

சுருதிநாயகன்சூழ்வெனுங்கலுழனைத்தணிவாற்
கருதினுற்றியவினையெனுமரவெலாங்கரியும்
பரிதியாம்பிரதக்கிணம்பாவமாமிருளை
வெருவிமாய்தரத்துரந்தருள்விழிபினைவிளக்கும். (௮)

வாக்கின்மந்திரந்தோத்திரமனத்திடைத்தியான
மாக்கியேகமஞ்சூன்மகளலங்குநீர்க்கும்பந்
தேக்கிமென்சிரத்திருத்தினணடந்தெனச்செல்க
தூக்கின்மாற்றியதொடர்வினைநெறியினைத்துறந்தே. (௯)

ஒருகையாற்றொழுமெலொருபிரதக்கிணமுலவாத்
திருகுவெஞ்சினச்செய்கைவீண்பயனிலசெப்ப
லொருவுவாமத்தினிறைஞ்சுதலுருவுறச்செபிர்தன்
மருவலென்றிவையியற்றியபுண்ணியமாய்க்கும். (௧௦)

நீங்குதீர்தரத்திருமறைக்காட்டுறைதேவைப்
பாங்குசூழ்வலஞ்செயதிடிற்பாதவைப்பொன்றிற்
கோங்குவேள்விகளொருபதினுயிரமுளுற்றத்
தாங்குபுண்ணியமனைத்தையுஞ்சார்குவர்சரதம். (௧௧)

வேறுவேண்டியசெய்யினும்வேதநாயகற்குக்
கூறுநற்பிரதக்கிணம்போதுளங்குளிரா
மாறுதீர்வலம்வந்திடிற்கடிதுளமகிழ்ந்தே
காறுசெஞ்சடைநாதன்வேண்டியவரநல்கும். (௧௨)

வெறிகமழ்ந்தணிவேய்ந்தொளிர்தேர்பயில்வீதி
நெறியினுற்பிரதக்கிணஞ்செய்தவர்நீடி
மறிதருங்கொடுநிரயவெவ்வழலினைமாற்றிப்
பொறிதரும்பயன்புணர்ந்துடன்புண்ணியராவார். (௧௩)

அங்கமார்வலமவ்வயிற்செய்திடிமறவோ
ரெங்கள்வார்சடையிறைவனேடின்பமுற்றிருப்பார்
தங்கமாக்கரடபத்தியினித்தியஞ்சூழ்வோர்
செங்கண்மாயன்முதற்றேவரைவசஞ்செயுந்தேவர். (௧௪)

* பணிந்தெழுந்துபின்பணிந்தெழுந்திங்ஙனம்படி மீ
தணிந்துசூழ்பவர்க்கயுதமாமிலக்கமொன்ருற்றத்
துணிந்தநற்பயன்றனித்திடும்பவத்தொடர்ச்சி
தணிந்தநற்கதிதருமிதுதாழ்வறந்தழையும். (கஉ)

† வலத்துமற்றையவிடத்தினும்வலமுறவரினே
நலத்தசவ்வியமேயபசவ்வியநாமம்
புலத்திறலிதுபுரிந்தவர்புனிதராய்ப்பொன்பூ
நிலத்தின்மேவுவர்நிரயமங்கவர்தமைநினையா. (கங)

‡ விடையடைந்து, பின்சண்டனதருகுறமேவி,
யடையவேற்றினைச், சோமசூத்திரமுற, வானின்
புடையுஞ், சண்டனே, சூத்திரம், போற்றியசண்ட,
னடைவின்மூறி, யென்றென்பதுமிம்முறையாற்றின். (கச)

சோமசூத்திரவலமெனச்சொல்லுவர்தொல்லோர்
நாமமின்னதற்கிப்பிரதக்கிணநயந்த
காமநல்கிடுமறைவனமேயகண்ணுதலுக்
கேமமார்வலஞ்சித்திகளெண்ணிலவீயும். (கரு)

---

* பணிந்தெழுந்துபின் பணிந்தெழுந்திங்ஙனமபடிமீதணிந்துசூழ்தலைக் கும்பிடுதண்டமென்ப. அயுதமாமிலக்கம்-பதினாயிரமிலக்கம். † இது சவ்வியாசவ்விய பிரதக்கிணமெனப் பெயர்பெறும். சவ்வியம் - வலம். அசவ்வியம்-இடம். அசவ்வியமெனினும் அபசவ்வியமெனினு மொக்கும். இனி அபசவ்வியம்-வலம்; சவ்வியம்-இடம் என்பாருமுளர். ‡ முதல் நந்தியைத்தரிசித்து, உ-வது இடமாகச்சென்று சண்டேசுரரைத்தரிசித்து, ங-வது திரும்பி வலமாகச்சென்று நந்தியைத்தரிசித்து, ச - வது வலமாகச்சென்று சோமசூத்திரத்தைத்தரிசித்து, ரு-வது திரும்பி இடமாகச்சென்று நந்தியைத்தரிசித்து, சு-வது இடமாகச்சென்று சண்டேசுரரைத்தரிசித்து, எ-வது அங்கிருந்து மீண்டுசென்று நந்தியைத்தரிசியாமல் வலமாகச்சென்று சோமசூத்திரத்தைத்தரிசித்து,அ-வது மீண்டு இடமாகச்சென்று நந்தியைத் தரிசியாமற் சண்டேசுரரைத்தரிசித்து, கூ-வது நந்தியைத்தரிசிக்கின், இது சோமசூத்திரப் பிரதக்கிணமெனப் பெயர்பெறும்.இத்துணையும் ஒருபிரதக்கிணமாம். இங்ஙன மும்முறை செய்யப்படும். சோமசூத்திரம்-கோமுகை. இச்சோமசூத்திரப் பிரதக்கிணம்பிரதோஷகாலத்திற் செய்வது உத்தமோத்தமம். பிரதோஷம் என்பதற்கு இராப்பொழுது பிரவேசிக்குங்காலம் என்பது பொருள். இதற்கு இரசனிமுகம் எனவும்பெயர். இரசனி-இரா. இனி இரசனி என்பதற்கு மஞ்சல் எனப்பொருள்கொண்டு, மஞ்சல்வெயின்மாலை எனத்தாற்பரியங்கூறலுமொன்று. திரயோதசித்தினத்திற் சூரியன் அஸ்தமயனமாவதன் முன்னும், அஸ்தமயனமான பின்னுமாகிய இருகூற்றும் ஓர் சாமமே பிரதோஷகாலமெனவறிக. இப்பிரதக்கணத்திற் கோமுகையெல்லையைக் கடவாமைபோலச் சண்டேசுரரெல்லையைக் கடவாமையும் ஆன்றோராசாரமென்பதுய்த்துணர்ந்து கொள்க. மூரி-இடபம்.

* இலங்குநல்வலத்தியற்றலொன்,றாயிரமிடத்தின்,
வலம்புரிந்திடலோடிடமிலக்கமா,மண்மேற்
புலம்புரிந்தறப்பணிதலாற்புண்ணியங்கோடி,
யலங்குமேனியாலனந்தமாம், வலம்வருமறனே. (சகூ)

வேறு.

வெளிதருவீதியினிவற்றைமேவிடிற்
களிதருமனந்தமாங்காளமாமுகின்
முளிதருபயிர்க்கெனமுறையிற்சூழ்தலாற்
றெளிதருஞானமுங்கதியுஞ்சேருமே. (சஎ)

எவ்வணமாயினுமறைசையீர்ஞ்சடைச்
செவ்வணமேனியற்றெளிந்துசூழ்வரின்
மைவணப்பிறப்பறும்வாயுமுததியு
மூய்வணமுணர்ந்தவர்க்குண்மையுண்மையே. (சஅ)

வேறு.

மறைவனமருவிய
விறைவனைவலமுற
முறைதருமுணர்வொடு
நிறைவதுகதியே. (சகூ)

பிரதக்கிணச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கூஅ௩.

---

# மணவாளக்கோலச்சருக்கம்.

மாற்றலர்தமுயிரனைத்துமருநகைசையாற்பருகியருவயிற்றினலே [ன்
யூற்றுவபோற்கதிர்முகத்தினொளிகாலுந்தழல்வேற்கையுலஞ்செய்தோளா
கூற்றடருங்கொடுங்களிற்றுன்குறுகலர்தமுறுமருமங்குழையப்பாயுங்
காற்றனையகடும்பரியானிரவிகுலதீபமெனக்காட்சிமிக்கான். (க)

மாந்தாதாவெனும்பெயரான்மனுமுதனூறெறிவழக்கின்வையமாளும்
வேந்தாயபெருந்தகையான்வீணைமுனிநாரதனைவிழைவினோக்கித்
தேந்தாயவேதவனச்சிறப்புமுனசெவ்வழிபோற்சிறந்தவாக்கு
மாந்தாதார்†மரமாதல்வண்மையுறுகராதல்வசையிற்றுமே. (உ)

---

* வலம்வருதல் ஒன்று ஒன்றேயாம், இடம்வருதல் ஒன்று ஆயிரமாம், வலமுமிடமுமாக வருதல் ஒன்று இலக்கமாம், கும்பிடுதண்டம் ஒன்றுகோடியாம், அங்கப்பிரதக்கிணம் ஒன்று அநந்தமாம், பயன்றருமென்க. † மரமாதல் - மரமாகுக.

ஆதிரண்டெறுதிங்களினப்பெயர்
கூறியந்தணர்க்கூடய்க்கொடைமேம்படப்
பேறினீங்கிப்பிறங்கிடப்பின்னர்நீ
மாதிலாத்தொழில்செய்துவருகென. (சஉ)

பற்றியேவல்பரிக்கப்பணித்திடுங்
குற்றமேயுருவாயகோலாகலன்
பெற்றரூத்திரசாதியிற்பேறுளான்
மற்றமைந்தன்வளரவளர்ந்தவன். (சங)

உணர்வொழிந்துமருட்கடலுய்த்திடப்
புணர்மறத்தவிளமைபுகுதலு
மணர்களிக்கடுங்காமத்தவசமாய்த்
துணரின்மொய்த்திடுந்தூர்த்தரிற்கூடினான். (சச)

காவிநீலக்கருங்கட்கடையினு
லாவியீருமணங்கனவேசையர்
தூவியந்துகிற்சேக்கையிற்றோய்ந்தவ
ரோவியாவியொருவணமின்றென. (சரு)

சிலம்பரற்றியசீறடிசென்னியிற்
பலம்படத்திப்பரித்தபுலவிதீர்த்
தலம்புமேகலையார்ப்பவமுதனூர்
சலம்பொதிக்குங்கலவியிற் * கன்றினான். (சகா)

தந்தைதந்தைவழிமுறைச்சார்ந்தன
முந்தையாயமுழுநிதியாவையுஞ்
சிந்தைமேயதெரிவையர்க்கீந்தவ
ரந்தைவந்தமுறுவலரும்பியே. (சஎ)

இன்னரம்பினிரங்கிசையாடலாற்
கின்னரம்பணிபாடற்கிறியினு
னன்னரம்பயினுட்டநலங்கொளீஇ
முன்னரம்பையர்போற்பலர்முற்றவே. (சஅ)

பூணிழைத்தபுணர்முலைப்பொன்னகர்க்
காணியாயகழைச்சிலைவேள்கணைத்
தூணியாகிச்சுரும்புறுதூர்த்தருக்
காணியாய்மருந்தாற்றலரும்பொனுல். (சகூ)

ஏரணிந்தபிறர்மனையேழைமார்
வாரணிந்தவனமுலைமூழ்கியே
தேரணிந்தொளிர்வீதித்தெருத்தொறு
மூரணிந்தமருத்திறுலாவுமால். (ரு0)

* கன்றல்-மிகுதல்; 'கன்றியகற்புடைக்கனலிமாமுகன்' என்பதனுமுணர்க.

அறிவழிந்தனைதக்கதையருங்குலம்
பொறியழிந்திடும்புண்ணியர்சொற்றிடு
நெறியிகழ்ந்திகழ்ந்தேநிறைபாதகக்
குறியினின்றுகோலாகலக்கோதினான். (உக)

அன்னநன்வழியத்தனருந்தனந்
தன்னதென்றளவற்றதனமெலாம்
பொன்னனார்தட்களித்த * இலம்பூண்டவன்
முன்னமேவிமுறைபிறழ்ந்தென்றாயனை. (உஉ)

கள்ளவெட்டொழிலாற்றிக்கடிநக
ருள்ளகொண்டுறுமின்பமுறுதியென்
றுள்ளனாறியவப்பதியச்சுற
நள்ளிருட்கரவாற்றினனாடொறும். (உங)

காவன்மேயினர்கண்டுசென்றவ
னாவிநீரப்பிடித்தடித்தார்த்திட
மேயருங்கிளையோர்கள்விடுத்தபின்
றாவருமபொதுமாதருந்துற்றலும். (உச)

வெறிதருங்கள்விழைந்தரிவெந்தடி
யறிவழிந்தவெங்காமமுனார்ந்தவன்
பொறியழிந்துபுகலறப்போயில
நறியமென்குழற்றாய்நலகண்ணுவான். (உரு)

சனியிருந்தவத்தாய்நலஞ்சார்ந்திடப்
பணிமலர்க்கரம்பற்றிப்பணிமொழி
யினியநல்குவனிம்மறையேயெனத்
துணியிலானுமங்கெய்திடச்சோர்வினான். (உசா)

பாயன்மீதுவலிதிற்படுத்துளத்
தாயசெய்கையனைத்தையுமாற்றிட
வேயதோளிவெருவிவிளங்குளந்
தூயளாகியினையனசொல்லினாள். (உஎ)

மைந்தனீமதுமாந்துங்களிப்பினால்
வெந்திறற்றொழின்மேவினையேயலாற்
கொந்தழற்கட்குறுங்கடிகொண்டதோ
ரந்துமோகமருந்துநயத்தியோ. (உஅ)

---

* இலம்-வறுமை.

சூதகன்றியதூர்த்தரிற்கூடியோ
யாதகாரணமெண்ணலனீங்கிது
கோதுகொண்டகுறியிதுகூடினார்
மாதயர்க்கொடுக்கும்பியின்மாள்குவார். (௨௯)

பிரமவேதியர்ப்பேசக்கொலையினுங்
குரவனாயிழைகூட்டுங்கொடியதாற்
கரவினன்முறையல்லவற்காதலாற்
பரவினார்நிரயக்குழிபற்றியே. (௩௰)

பல்லகாலம்பரம்பெரிப்பாழ்நர
சல்லலேயுற்றழுங்குவாரதலா
னல்லவேண்டினயக்தெறுமித்திறம்
வல்லையோவல்வழக்கெனமாசினான். (௩௧)

முறையெனச்சிலமுற்றினர்சூழ்குவர்
கறையெனச்சிலசத்திகைகாமுறும்
பிறைநுதற்பெருந்தோணலம்பெட்டலாற்
குறையெனக்கிலையின்பங்குறுகுமால். (௩௨)

மாய்ந்தபின்னெனின்வஞ்சவழக்கினால்
வேய்ந்தவெம்மொழிமேவியபேதைநீ
தோய்ந்திடேனாவவிதிற்றொடக்கியே
காய்ந்தமோகக்கலவியிற்கன்றினான். (௩௩)

ஊறுகாதலிவணலமுற்றிடின்
மாறுகொள்ளுமிவனெனமாசினா
னூறுதந்தைக்குதவியுலர்ந்தபின்
னாறுபூங்குழனன்னலநண்ணினான். (௩௪)

ஒன்றுபின்பழனக்குதவுற்றவன்
பொன்றினானதும்பூங்குழல்பூமதத்
தன்றுவெந்தடிதுற்றினர்தோய்ந்தெனை
நன்றுவாழ்கெனநண்ணினனாடொறும். (௩௫

அணங்கனாருமருவினைத்தீமையா
லுணங்கிடாதுறலாகவொழிவிலா
மணங்கலந்துமகிழவம்மன்னனுங்
கணங்களாலஃதாய்ந்துகவற்றினான். (௩௬

வேறு.

அப்புரநீக்கிடநீங்கியாயிடை
வெப்புறுகொடுஞ்சுரமேவிமேதினி
வைப்புறுபல்பதிவைகுநாளவர்க்
கொப்புறுபுதல்வருமுபயராயினர். (௩எ)

கொடியவெவ்வடவியிற்கொண்டுபோக்குறும்
படியுறுவேதியர்பலரைமாய்த்தவர்
முடியவப்பொருள்கொடுமுற்றிப்பற்றுயி
ரடியறவதைத்தவையாரக்ஞூர்ந்தபின். (௩அ)

உற்றிடுபுதல்வருமுருகுநாதலாற்
பெற்றிடுமனைவியுந்தாறும்பேர்ந்துபோய்ச்
சுற்றியநல்வினைத்தொடர்ச்சியாலவ்வினை
யெற்றிடுமறைவனமெய்திஞரோ. (௩௯)

வேறு.

வழங்குமாமறைவளரொளிமைந்தர்தாமகிழ
முழங்குமோதையுமுதிர்மறைப்பயன்றருமுறைநூ
றழங்குமோதையுந்தழலவிர்வேள்வியிற்சாற்றுங்
குழங்கொளோசையுமுழவொலியிற்படக்குலவும். (௪0)

நான்முகந்துறந்தரும்பொருள்பன்முகநவிற்று
நான்முகந்தெரியயனனவேதியர்நோன்புந்
தேன்முகந்தனசிலமொழிமங்கைபாதேனிற்
பான்முகந்தனவொழுக்கமும்விழுப்பமும்பண்பும். (௪௧)

தெய்வமாமறைவனமெலிதிருவுருமேவி
வையமேழினும்வளரொளிபரபியவனப்பு
மையவாவியமழைமதர்நெடுங்கணுளோடு
மையன்மேவியபெருமையுமாரணவனமும். (௪௨)

கண்டுகண்குளிர்ந்துண்டியீங்குளதெனக்காமங்
கொண்டுவேதயாற்றடைகரைக்குடிசையின்மேவிப்
பண்டுதான்செயும்பயிற்சியிற்பல்வினைபயிற்றி
யுண்டுவாழ்ந்தனரொரிருதிங்களங்குவப்பால். (௪௩)

முடியுநாள்வரமுடிந்தனனங்கவன்முடிநாட்
கொடியவெம்புலிகுடிசையிற்கொன்றிடமனையு
கொடியுமைந்தருமடிந்தனர்மடிதரகொடியிற்
கடியதூதுவர்கலந்தனர்சயிற்றெருடுங்காய்வார். (௪௪)

வெங்கணற்படிவங்கொடுவேற்றுயிர்விழுங்கு
மங்கியுட்படுத்தரிந்துவெந்தசையினையவித்துப்
பங்கிசெய்தடும்படுகுழிக்கும்பியுட்படுத்துச்
சிங்கிசெய்திடப்பற்றுமின்றீயனையென்றே. (சரு)

சுருக்கியங்கவன்கழுத்தினைத்தோட்படுகதையான்
முருக்கியீர்த்திடமுதல்வனுமுக்கணெம்பெருமான்
திருக்கிளர்ந்தொளிர்மறைவனமேவியசிவனுங்
குருக்குமன்பொடுநின்றதன்றூதருக்குரைப்பான். (சசு)

மதிப்பருங்கொடுந்தீவினையாற்றியேமறலிக்
கதிக்குறுந்துணைகாண்பருங்கயவர்களேனுந்
துதிக்குநம்மறைவனத்திடைத்துறப்பரேலுடல
முதிக்குஞானநம்முண்மையுமுணர்ந்துவீடுறுவார். (சஎ)

நடுவன்றூதவர்நலந்தருமீத்திறநாடார்
கொடுவன்செய்கையினிறந்தகோலாகலற்குமைந்தல்
வடுவன்றென்றறவலிந்தனரவர்தமைமாற்றிக்
கடுவன்சூழ்பணிகலநடாய்நம்பதிகாண்மின். (சஅ)

என்றுசால்புரைத்தேவிடவெரிவிரியசும்பொற்
குன்றுபோலுயர்விமானமுநடவினர்குறுகிக்
கன்றுமுள்ளமுங்கனற்குறுங்குஞ்சிவெங்கடுங்கண்
வன்றிறற்கொடுந்தூதரைக்கூஉயிறுவகுப்பார். (சகூ)

பரிசவேதியிற்பசும்பொனுமிரும்பெனப்பாவ
மிரியநன்மையுற்றிலங்குகோலாகலனிருந்தோன்
முரியவீக்கியமுரணொழித்திடுமெனமூரிக
கரியதூதவரவர்க்கெதிரின்னனகரைவார். (ருo)

பாதகக்கொடும்பரவையாற்றியவிவன்பாவ
மேதமுற்றிடுமுரைக்கினுமிவற்கிலையென்றுங்
கோதகற்றிடுகொள்கையென்றிகழ்ந்தவர்குறியார்
போதகச்சினம்பூத்தலும்புங்கவன்பூதர். (ருக)

எரிபரந்தவெங்காற்றெனவெருளியோடேகிப்
பரிவுறுஞ்சமன்றூதரைத்தரைமிசைப்பணைத்தோள்
புரிதருங்கரஞ்சிரமறப்பொடித்தவர்புரளா
விரிதரும்படியடர்த்தவரேங்குபுநீங்க. (ருஉ)

ஒடுங்குமெய்ப்புறத்தூறும்வடக்கட்டிறுலுடைந்து
நடுங்கிநாவுலர்ந்தயர்ந்தகோலாகலனயப்பக்
கடுங்கயிற்றுறுங்கட்டினையவிழ்த்தவன்காதற்
படுங்கதிர்ப்பணிவிமானமீதேற்றினர்பரிவால். (ருங)

அங்கவன்றரும்புதல்வருமனைவியுமழியாப்
புங்கவன்றருவிமானமேற்பொலிந்துடன்புரிவாற்
றங்கவன்பொடுஞ்சார்ந்துவெந்தூதர்பாற்றந்தி
சிங்கவன்கையிற்றீர்த்தெனமறைவனஞ்சேர்ந்தே. (௫௪)

கண்ணுதற்பெருமானடிக்கமலமுன்காட்டப்
புண்ணியப்பொருளாகியபுங்கவர்கோமா
ணுண்ணிகழ்த்திடுமுணர்வளிதறொளியுறவியோகம்
பண்ணினர்க்கருமபதமளித்திடமிகப்பரிந்தான். (௫௫)

ஆற்றரீவினையளப்பிலவாயினுமமலன்
போற்றுநற்பதிமரித்திடும்புண்ணியப்பொலிவான்
மாற்றிவெவ்வினைமகிழ்ச்சியோடானந்தவளங்கா
ணூற்றிருந்திடும்பதந்தியர்முவருமுறைந்தார். (௫௬)

முறுகுவெஞ்சினக்கணங்களாற்கரஞ்சிரமுரிந்தே
மறுகியோடியதூதுவர்*யமனிவாயமன்னிக்
குறுகிவாறெருடுருவலமுற்றுயிரெலாங்குழுமச்
சிறுகுவாயிலிற்சென்றனர்செய்வியேதெரிவார். (௫௭)

எண்ணகன்றிடுநோய்களுமிருவினைத்திரளுங்
கண்ணகன்றிடுங்கவலையேமுதலியகளையு
மண்ணகன்றிடமனுமுறைநூல்களுமற்றும்
விண்ணகந்தருமுருக்கொடுபேரவைவிளங்க. (௫௮)

கரியமேகமொன்றெரிபசும்பொன்வரைகலந்தாங்
கரிகளாறறிடுமணமிசையமரரேத்தெடுப்பப்
புரிவிளுேடமர்ந்திடுநடுவன்றனைப்போற்றிப்
பரிபவம்படுபரிசெலாம்பகர்ந்தனர்பணிந்தார். (௫௯)

மொழியுமங்கவர்மூரணழிசெய்கையுமுன்னு
விழியுமுள்ளமுமெரியெழவெகுண்டுநேர்விழித்தே
பழிகொடுவினைப்பயத்தவற்கிங்கலம்படுமே
லழியுநம்மரசென்றறவழன்றனனறைவான். (௬௦)

பக்கநின்றவச்சித்திரகுத்தனைப்பாவர்
தொக்கவிங்கிவன்சூழ்ந்திடுநல்வினைத்தொடர்ச்சி
மிக்கதுள்ளதேல்விளம்பெனவிரைவினாராய்ந்து
தக்கதின்றெனத்தழலெனவெழுந்தனன்றருக்கால். (௬௧)

---

* யமனி-யமபுரி.

செங்கண்மேதிமேற்கருமுகிற்றலைமிசைச்சிறந்த
வங்கண்மாநிலமழித்திடுவிடமெனவமர்ந்தே
தங்கணாகியதண்டமும்பாசமுந்தாங்கி
யெங்கணாயகன்முன்னெழின்மறைவனமேய்ந்தான். (சுஉ)

காமமேமுதலறுபகைவேரறக்களைந்து
பூமமாகியபொருளொடுமிரண்டறப்புணர்ந்த
வேமமாதவர்யோகிகளிடர்வினையொழிக்கு
நாமமார்தருகங்கையேமுதலியநதிகள். (சுங)

மடல்விரித்தளிமதுத்துளிவளர்த்தநற்றுளவத்
தடன்மிகுத்ததோண்முகுந்தனேயாதியவமரர்
மிடலுடைக்கணவேந்தர்கண்மிடைந்துசூழ்தரற்றுங்
கடலுடைத்தனதோத்திரவேற்றொலிகறங்க. (சுச)

அளிக்குமின்புறுமமுதவெண்ணிலாக்கதிரனைத்துங்
களிக்குமின்சுவையேடெலாமொன்றெனக்கலந்து
தெளிக்குநல்லெழிற்றிருமணக்கோலமார்சிந்தை
யொளிக்குமாமுனிக்குதவியநூலகெலாமுவப்ப. (சுரு)

கண்வழக்கறக்கதிரொளிகான்றிடும்பளிக்குத்
தண்வரைப்புறஞ்சார்பசுங்கொம்பெனச்சாயற்
பெண்ணுருப்பெறும்பெரியவின்புருவமாம்பேதை
யுண்ணிரப்புறுகாதலாற்களித்துளமுருக. (சுசு)

தரித்தெவற்றையுந்தாங்கியசத்தியேமுதற்றீங்
கரித்துளத்தருளாக்கிடுஞ்சத்தியேயளவாய்
விரித்தவாதனமேற்றனதிச்சையால்வினைப்பாற்
றெரித்திடும்பரையாகியதிருவுருவோடும். (சுஎ)

வீற்றிருந்தருள்விமலவானந்தமாய்விளங்கித்
தோற்றமிவ்வுலகனைத்தினுஞ்சுடரொளிதூங்க
வேற்றிலங்கியவிறைவனையெல்லையின்வணங்கிப்
போற்றியேபணிந்தெழுந்தணிப்பின்னரும்போற்றி. (சுஅ)

அலகிறந்தமலமாகியனந்தவானந்தமேயா
யுலகொடுமனமும்வாக்குமொழித்தநீயுலகமாகி
யிலகினைநின்னையல்லாதிலையிலையிருளிற்பாசங்
குலவியவரவுபோலக்குறிக்கொளிற்கோதிலாதோய். (சுகூ)

உண்மையாய்க்கருமைபொன்மையுருவமாயுலக்குமன்பர்க்
கண்மையாய்ச்சேய்மையாகியணுவினுக்கணுவாயாக்கந்
திண்மையாய்ப்பெருமைக்காருந்திருவுமாய்ச்சேர்ந்தவெம்மை
தண்மையாய்முற்றுமாகிச்சராசரத்தலைமைசார்ந்தோய். (எo)

நெறியுறுநிலைமையாகிநிலைவொடுநிலைமநீங்கிப்
பொறியுறுகரணமுற்றும்புணர்ந்திடாதருவமாகி
யறியுறுமறிவுக்கெட்டாவனந்தவானந்தமாகி
வெறியுறமிதழிவேய்ந்தவேதநாயகனேபோற்றி. (எக)

உரையொடுமனமும்வாக்குமொழிவுறவொழியாதோங்கிப்
பரையுருவாகியப்பாற்பற்றுறுபரமமாகித்
திரையறுமுததிபோலச்சிற்பரானந்தமாய
விரைதருமிதழிவேய்ந்தவேதநாயகனேபோற்றி. (எஉ)

பெறுமுறையுலகமேவிப்பிறங்கியபொருளுங்காய
முறுமுயிரனைத்துமாய்வுற்றுறுறுகளாகியண்ட
மறுவில்சூனியமாயோர்ச்சிவமுக்கறுகாலையாய
வெறுவெளியாகியோங்கும்வேதநாயகனேபோற்றி. (எங)

தோற்றமுமீறுமாதியந்தமுந்துறந்துதோயா
தாற்றியவுலகந்தோற்றியழித்திடுமொடன்மேவிச்
சாற்றியநெறியின்மேயார்தம்முளத்தமுதமாகி
வேற்றியலின்றிமேவும்வேதநாயகனேபோற்றி. (எச)

நின்னளந்தறிந்துபோற்றுநிலைமையெற்குளதேகேழி
மன்னளந்தறியான்பூமேல்வள்ளலும்வகுத்தவாற்றி
னின்னமம்பயின்றேனெல்லாவேதமும்பொறுப்பாயென்றுப்
பொன்னடிபுகழ்ந்துபோற்றிப்புணணியனருகுசேர்ந்தே. (எரு)

வேறு.

* வீசபாசமுந்தண்டமும்விரும்புமுத்திரையு
மாசிலாமணிதன்முனம்வைத்ததிகார
மாசிலாயினியமையுமேலாகமுமழித்துப்
பேசமாறிலேனெனப்பணிந்தெழுந்திடப்பெரியோன். (எசு)

அஞ்சிநஞ்சினுனடக்கமுமடக்கருஞ்சினமும்
வஞ்சிபங்கினுணர்ந்தவன்மகிழ்வுறநோக்கிக்
குஞ்சிமேலுனதாணையேகொண்டவரல்லா
லெஞ்சிஞரெவருரையெனவியம்பலுமியமன். (எஎ)

பணித்தநாண்முதற்பல்லுயிரனைத்துமென்பாசம்
பிணித்ததல்லதுமற்றதன்றெழில்பிறழ்ந்திலதா
லணித்தகாளினிலயர்ந்தகோலாகலனுவி
குணித்தவந்தவரேவியதூதவர்கொன்வான். (எஅ)

---

* காலபாசத்தையும் காலதண்டத்தையும் விரும்பப்படும் முத்திரைக் கோலையும்.

அடுத்தனுதரையடர்த்தவனூர்வமோடமர
விடுத்தவேட்கையர்மேவரும்பதத்தினில்விடுத்தார்
கடுத்தவாறிறுசுனவிலுநல்வினைகருதான்
றொடுத்ததீவினைசொல்லளவல்லவாற்றூயோய். (௭௯)

ஈட்டுதீவினையெண்ணிலவியற்றியாற்கின்பங்
கூட்டுமேயெனிற்குவலயத்தருமறைக்குறியாற்
காட்டுமாமகமருந்தவங்காமமேமுதல
மாட்டுநல்லறந்தானமென்றிவற்றையார்மதிப்பார். (௮௰)

நன்மையாற்றினர்தீயவரென்றியானடாத்துஞ்
சொன்மைமாண்டதுசுருதியாற்றிருவழித்தூணியுந்
தன்மையின்றியேதாங்கருதியநெறிநாமும்
புன்மைபூண்டதுபுவியெனவுவர்ப்புறப்புகன்றான். (௮௧)

வேறு.

கூற்றுவனிவ்வணங்குறிப்பிற்கூறலு
நாற்றடக்தோளுடைநம்பனன்றெனுச்
சாற்றுகோலாகலன்சமைத்ததீமையாற்
சேற்றுறுகும்பியேதிளைப்பனுயினும். (௮௨)

பருமையினூல்பலபயிற்றும்பான்மையே
தருமநீயறிதிஙந்தழைத்தநல்லற
மருமையினுண்மையாமறிதலன்னதா
லிருமையுமுறுமெவரெய்தற்பாலரே. (௮௩)

வையமேற்சிவபுரமானமாநில
முய்யநம்பதிபலவோங்குமாங்கவை
வெய்யதீவினையவர்விழைவின்மேவினு
மையமினம்பதமளிக்குமுண்மையே. (௮௪)

காதலற்றவர்வினைக்கயவராயினு
மேதமினம்பதியிறப்பராயிடிற்
போதவிழ்புதுமதுப்பொழிந்துபொன்னிறத்
தாதவிழ்நம்பதஞ்சார்வர்திண்ணமே. (௮௫)

சேர்த்தகோலாகலன்றீமையாவையு
மார்த்தநம்மறைவனத்தலங்குதீர்த்தமேல்
வார்ந்தெர்ளிர்காற்றினுன்மாற்றிமாய்வினு
லூர்ந்தனன்விமானமேலுறுதியெய்தினுன். (௮௬)

உரைத்தனயாவையுமுள்ளங்கொண்டுநீர்த்
தரைத்தலைநம்பதிதங்கினார் * கணைத்
தரைத்துணையாயினுமவரைவெளவியே
குரைத்தடல்செய்திடுங்கொள்கைமாற்றியே. (௮௭)

பாசமுந்தண்டமும்பரிந்துப்பல்லுயிர்
நேசமொடுன்றொழினிகழ்த்துவாயென
மூசளிபரிவுறுமுளரிகாண்மல
ரீசனதடிமுடியிறைஞ்சியேத்தியே. (௮௮)

பரந்துலகனைத்துமுட்படுத்தப்பாற்பட
விரந்தபேருணர்வெலாநினதுநீடிரு
புரந்துநீயளித்தவத்துணையதேயெமக்
கரந்தையெம்பிழைபொறுத்தளித்தியென்னவே. (௮௯)

வீழ்ந்தடித்தாமரைவிரும்பிமெய்யுறத்
தாழ்ந்துபின்னரனருடலையிற்றாங்கியே
சூழ்ந்தெழுந்தூதுவரோடுந்தோமற
வாழ்ந்தனனென்றுபோய்யமனிவைகினான். (௯0)

வேறு.

இனையநற்கதையீசனிலங்குதோட்
புனைதுழாயவற்கோதியபோற்றியே
நினையவெவ்வினைநீக்கிநிழற்றுசீர்
வனையுமாலுலகேற்றிடுமாட்சியால். (௯௧)

ஆதிசேதுவளக்கரினாடியே
போதியாணிப்புதுமைபுலங்கொளாக்
கோதிலானந்தமேவிக்குலாயது
நீதியாயறியென்றனனீர்மையால். (௯௨)

வேறு.

இரும்பூதுபலதருமிப்பதிபோலவியனுலகத்தில்லைவல்லே
வரும்போதுகழித்தியலும்வல்வினையாளுளங்கருகிவாடல்வேண்டா
நரும்போதுகமழ்வேதவனமருவிக்கணமேனுநயப்பினாவி
தெறும்போதுபெறற்கரியசிவபதமாம்பேரின்பந்திளைக்கலாமே. (௯௩)

பெற்றிடுநல்வினையுடையேம்பெருகியதீவினையுடையேமென்றுபேதம்
பற்றிடுமின்களிதுயரப்பான்மையொரீஇவேதவனம்பரிவீராயிற்
சுற்றியதீவினையினெடுந்தொடக்கறுத்துப்பவநீக்கிச்சுருதிமீதா
மற்றிணையில்பதமளித்துவாழ்விக்கும்வேதவனவள்ளன்மாதோ. (௯௪)

* கணைத்தரைத்துணையாயினும்-அரைக்கணமளவாயினும்.

வேறு.

மதிநிலைவுறவெருவருவினைமறைசையின்மடிவாமேற்
புதியனபழையனவருவினைமடிவனபொருளாமே
யதிர்கடலுலகினிலிதநிகர்பதியிலையடல்வேலோய்
பதிநிலைதருமறைவனமெனமனனொடுபணிவாயே. (கரு)

நாரத * னிருள்வலிவழிவருகரபதிநலமேவப்
பாரதியுரைசெயுமதன்வழிபழமொழிபகர்சூத
னாரணவொலிதருமோரணிநைமிசமதின்மேவுஞ்
சீரணிமுனிவரர்க்கோதினன்வரன்முறைதெளிவாக. (கசு)

கோலாகலச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ச,0௫௫.

# குளகேசச்சருக்கம்.

சொல்லும்பொருளுஞ்சுவையாயமுதம்
புல்லும்பொருளாசைபுகுத்தலினு
லல்லும்பகலும்மொழியாதரவே
செல்லும்முறையாய்தெளிதேசிகனே. (க)

இளமாமழையீர்ம்பொழில்வேதவனங்
குளகேசனுறுஞ்செயல்கூறுசெனு
வுளமார்தரவோதினனென்னலர்தங்
கிளர்மாமுடிசிந்தியகேசரியே. (உ)

குழைவாலரசோதியகோதறுசொற்
பிழையாதருமாமுனிபேசினனல்
விழைவாயுயர்விண்ணொடுமண்ணகமுந்
தழைவாயுற † வாதிதரித்திடுநாள். (ங)

வஞ்சத்துயர்தானவர்வானவரு
நெஞ்சொத்தொருபாயநினைந்தனரா
லஞ்சத்‡திரையாதியமர்ந்துறமே
லெஞ்சுற்றவர்மானுடர்யாமெனவே. (ச)

---

* இருள்வலி-சூரியன். † ஆதிதரித்திடுநாள்-ஆதியிலேதங்குங்காலத்து.
‡ திரை, நரை, சாக்காடு, பசிமுதலியன எம்மிடத்துளவாயின், யாங்குறைந்தயருமானுடகதியினரென்று.

பாலாழிகடைந்து*பணித்திடவே
மேலாமமுதெய்திவிழைந்தனமே
லேலாவிலையென்றெழுமந்தரநட்
டோலாவலைகோவெனவுய்த்தனரே. (ரு)

வேறு.

துளையெயிற்றரவுநாண்கொளுவித்தோள்களா
லுளைவுறத்தானவரமரரொட்டியே
சளைநரக்கடைதலுங்கலங்கியோலமிட்
†டளைதரத்தாழியிற்றாழியாயதே. (சு)

அலைகடல்வயிறுளைந்தரற்றியான்றபான்
முலையணிசுரபியைமுன்னமீன்றபின்
மலைகருவிழியிணைமதர்த்த‡வாருணி
யிலைமலிதருவினையீன்றதென்பவே. (எ)

ஆரெழில்வனமுலையமுதச்சாயலா
ரேர்மலியரம்பையர்தம்மையீன்றபின
வார்கதிரொழுகியமதுரவாய்மது
நீர்தருபிறையினைநிமலற்கீந்ததே. (அ)

வெண்டுகிலிடையினின்விளங்க§தேவர்தம்
பண்டிதற்பயந்தபினபலநாள்செல
வுண்டுலகனைத்தையுமுருக்குமொள்ளழல்
விண்டெனக்கொடுவிடமவிர்ந்துதோன்றியே. (கூ)

பாற்கடன்முழுவதும்பருவவெண்மதி
மேற்கதிர்விழுங்கிருள்வேகவெம்பனி
போற்கவர்ந்தடர்தலிற்றினற்றிறப்புங்கவர்
தோற்கருந்தானவர்த்தொடர்ந்துசுற்றவே. (க0)

மான்முகத்துறவவன்மயங்கிவார்கதிர்ப்
பான்முகக்கயிலையிற்படர்ந்துபற்றலுந்
தேன்முகத்தொழுகியதிங்கட்டேவர்தங்
கோனமுகப்பரிதியிற்குலவுங்குன்றமே. (கக)

---

* பணித்தல்-கொடுத்தல். † பாற்கடல் தயிரைத்தரிக்குஞ் சாடியைப் போலாயிற்றென்க. ‡ வாருணிதேவியையும், பாரிசாதமென்னுந் தருவையும் ஈன்றதென்க. வாருணி - இலகரிவஸ்துக்களின் அதிதேவதை. § தேவர்தம் பண்டிதன் என்றது தேவவைத்தியனாகிய தன்வந்திரியை.

மணிமுடியுடைதரவெறியும்வார்பிரம்
பணிதருதேவினதருளினுங்கவர்
பணிதருகோயிலுட்பரமன்பாதமே
லணியெனமணிமுடியமைத்துக்கூறுவார். (௧௨)

ஊழியினெமைபொருங்குண்ணவெண்ணியே
யாழியினெடுங்கடுவடர்த்ததென்றலும்
பாழியினதுகரப்பதுமத்தாக்கியே
பூழியினயின்றனன்புவனம்பூப்பவே. (௧௩)

கடுவயின்றன்னதுகளத்திலுங்கியே
வடுவறுதேவரைவருத்தமாற்றிநீர்
றொடுகடற்கடைந்திடிற்றோன்றுமின்னமு
தடுபதிசகத்திரவுருவினென்றிட. (௧௪)

விடைகொடுபுங்கவர்மேவிவேலையைக்
கடைதலுமலையடிகலந்துபாதல
மிடைதலுமனைவரும்வெருவிச்செய்கையற்
றுடைதலுமால்கடலூடுபோகியே. (௧௫)

கருமுரட்புறமுறுகமடமாகியே
வெருவறமந்தரம்வெரிநிற்றாங்கியே
மருவினன்முன்பெனவைப்பவாசுகி
தெருமரக்கடைந்தனர்திரண்டதோள்களால். (௧௬)

ஓலமிட்டலைகடலுமிழ * மார்ச்சனி
நாலமுற்கலதியுநஞ்சிற்றோன்றினள்
பாலியற்குஞ்சரத்தோடுபாய்கதிர்
வாலியகவுத்துவமணியும்வந்ததே. (௧௭)

சரிபரியிற்திரள்கவரக்கால்கதிர்
விரிமணிக்கவுத்துவம்விண்டுவேய்ந்தனன்
பரிபுரமிழற்றியபாதபங்கயத்
தரிமதர்மழைக்கணேரமுதச்சாயலாள். (௧௮)

பொறிச்சுணங்கரும்பியபொம்மல்வெம்முலை
யெறித்தசெங்கதிர்ப்பணியேய்ந்ததாமரை
வெறித்தடமலர்மகண்மேவிமாலுரங்
குறித்தனளமர்ந்தனள்குலவுங்காலையே. (௧௯)

---

* கலதியும் மார்ச்சனி கையிற்றுங்க மேற்றோன்றிய நஞ்சுபோலத் தோன்றினளென்க. கலதி-மூதேவி. மார்ச்சனி-துடைப்பம்.

சுடர்விரித்தாரமுதொளிருஞ்சோதியா
யிடர்கெடத்தோற்றலுமமரரேந்தியே
யடர்தருகனியொடும்பரவிப்பைந்துழா
யடர்முகின்முனமமைத்தன்மிற்போற்றலும். (௨௰)

நறுமலர்த்தாமரைநாபனடியே
* யிறுகுறச்செறிதருமினியதெள்ளமு
தறுமணித்தசும்பினுளுறத்தியூர்தரப்
பெறுமமுதிளகியவமுதமபெட்பவே. (௨௧)

† விண்ணவர்மகிழ்வுறவருத்திவிஞ்சிய
தண்ணமுதினையுமோர்தசும்பிருக்கியே
யெண்ணமர்வாயுவையிவற்றையிந்திரன்
கண்ணமராவதிக்காவல்செய்கென. (௨௨)

புங்கவரீந்தருள்புனிதப்பொற்கட
மங்கையினேந்தியவ்வனிலனேகியே
கொங்கணிமறைவனங்குறுகப்பொற்குடம்
பங்கமுற் ‡ றொன்றுசெம்பாரில்வீழ்ந்ததே. (௨௩)

வீழ்ந்துடைந்திறுகியவமுதம்விற்புறஞ்
சூழ்ந்தொளிரிலிங்கமாய்த்தோன்றவானவர்
வாழ்ந்திடற்கேதுவாமிதனைமாற்றினேன்
றாழ்ந்தனரெனின்னெனுமென்றுசாம்பியே. (௨௪)

கையறுதுயரொடுங்கலங்குகாலையாங்
குய்வகைநாடியவும்பர்மான்முதற்
றெய்வநாயகனுறைமறைசேர்ந்துகா
னைவதுகண்டுளநடுங்கினார்களே. (௨௫)

இறையவர்நடுக்கமுமிலிங்கத்தன்மையுங்
கறையறவுணர்ந்துமால்காற்றைநோக்கியே
குறையுறவருர்தனீயென்றுகோளொடு
மிறையுறுவானவர்விளங்கக்கூறுவான். (௨௬)

---

* அமுதம் இறுகியும், இறுகாதும் இருதிறனாகத் தோன்றிற்றென்பது தாற்பரியம். † இளகிய அமுதைத் தேவர்க்கருத்தி, அதில் விஞ்சியதை ஓர்குடத்தும், இறுகிய அமுதை மற்றோர்குடத்தும் அமைத்து, அவ்விரு குடங்களையும் வாயுவை அமராவதியிற் கொடுசென்று வைத்துக் காக்க என்று கூற என்பது கருத்து. ‡ ஒன்றென்றது இறுகிய அமுது வைத்த குடத்தை.

சாற்றின்மேற்கடுஞ்சினஞ்கதுவக்காய்தலை
மாற்றுமினன்னவன்மடமையாற்கடம்
வீற்றுறமேவியதன்றுவீறுசா
லேற்றுடையிறைவனுலெய்திற்றுகுமே. (உஎ)

இடங்கரிற்கடினமுற்றிறுகுமின்னமு
தடங்கலுந்திரண்டொளியாருமிச்சுறி
முடங்கிளரிளமதிமுகிழ்த்தசெஞ்சடைப்
படங்கிளரரவணிப்பரமமாருமே. (உஅ)

ஊறுமின்னமுதமக்குருற்றுங்காரியர்
தேறுமிச்சிவகுறிதிருவினல்குமான்
மாறுகொண்டழிவரைமாற்றிமல்கிய
பேறுதவாலயம்பேணுமெனனவே. (உகூ)

தளவணிகரியமால்சொற்றநன்மொழிக்
குளமகிழ்வெய்தியவும்பரோங்கிய
வளமலிசினகரம்வள்ளற்காற்றுவா
னளவறிதச்சனையழைத்துச்செய்கென. (௩0)

காய்ந்தபொன்காசொடுகலந்துகாமுற
வேய்ந்தொளிமிளிர்தரவிரைவிறுற்றது
மாய்ந்தநூல்விதிவழியமரர்பூசனை
வாய்ந்துறவியற்றினார்மலிர்ந்தபேற்றினுர். (௩க)

குழைதருமன்பொடுகுளிர்ந்தபூசனை
மழைவளர்கண்டனுக்கியற்றிவானவ
ரிழைவளர்வனமுலையிமயமென்கொடி
யுழைவளர்குன்றினையுவந்துபோற்றுவார். (௩உ)

வேறு.

புனிதவாரமுதிற்றோன்றும்புராதனபோற்றிபோற்றி
வனிதையோடமலமாகிமகிழ்ந்திடும்வள்ளல்போற்றி
தனிதருமுதலதாகிச்சராசரமாகித்தாமம்
பனிதருதிங்கள்வேய்ந்தபரஞ்சுடர்போற்றிபோற்றி. (௩௩)

ஆனந்தவுருவமாகியமலமாயறிவுமாகி
வானந்தமாயவெல்லாவுலகுமாய்மதித்தலோடுந்
தானந்தமின்றிச்சத்தாய்த்தற்பரந்தாணுயின்ப
மோனந்தநிலைமையாகுமுதல்வனேபோற்றிபோற்றி. (௩ச)

அயன்முதலாயதேவர்க்கவ்வவர்துறைகளாற்றிப்
பயனுறவளித்துக்காக்கும்பகவனேபோற்றிபாச
மயமறுத்துணர்த்தயோகர்மனத்துளாய்போற்றிவாய்ந்த
செயன்முதலாவிக்கீந்தெரிவருள்செல்வபோற்றி. (௩௫)

எனத்தொழுதிறைஞ்சலோடுமிருள்கிழித்திலங்குஞ்சோதிக்
கனப்பசுங்குன்றம்போலக்கடவுளர்முன்னர்த்தோன்ற
மனத்துறுகவலைநீங்கிமண்மிசைப்பணிந்துபோற்று
மினப்பெருங்கிளையைநோக்கியெம்பிரானியம்பலுற்றான். (௩௬)

* ஆரமுதேசனென்றேயிலைமும்பரவிப்போற்ற
வோர்தரவமலமாயவுருத்திரகோடிமேவிச்
சீர்பெறவுறைவயிங்கியாஞ்செறிதலாற்சிறந்தவிப்பார்
கூர்தருபோதமிக்கீருருத்திரகோடியாமே. (௩௭)

கோடியினுதகிமூழ்கியுருத்திரகோடியாய
பாடியினுறையுமெம்மைப்பணிந்திடிற்படியாதாகி
வாடியவினைகள்வீட்டிவாழ்வருள்போகமூட்டி
நீடியவீடுகாட்டிநிகழ்த்துதுநீவிர்கேட்டிர். (௩௮)

பூந்துணர்த்தருவினீழற்பொலிகுவீர்பூசையாலுந்
தேந்துளிசிந்துமின்சொற்றுதியினுஞ்சிந்தையார்வ
மேய்ந்தனம்வரங்கள்வேண்டுமென்றிடவமரர்பூமேன்
மாந்தரின்னரைகளாதிவந்துறுதளித்திமற்றும. (௩௯)

வெந்திறலவுணர்க்கஞ்சிவீடுதன்மாற்றிநின்பால்
முந்தியவன்புதந்திங்காளெனமுறையிற்போற்ற
நந்தியெம்பெருமானச்சநரைதிரைசாவுநாடா
திந்தியமகிழ்ச்சிமேவுமெனவுரைத்தேகினானே. (௪0)

மறைதருஞ்சுடரைப்போற்றிவானவர்வானமுற்றார்
நிறைதருமன்பிற்போற்றிநெடியவனிலையிற்சேர்ந்தா
னறைதருமமுதவீசனடியிணைபணிந்தோரார்வ
முறைதரமாடுசூழ்ந்தோருவந்தனவுதவினோரும். (௪௧)

பணிபலவியற்றினோரும்பன்மலர்சாந்தம்பாலா
னணிதுகில்விளக்கமன்னமளித்தவரங்கணன்னர்
தணிவறப்பசித்தார்க்கீந்தோரந்தணர்தழையச்செய்தோர்
பிணியறச்செல்வமேவிப்பிறங்கியமுத்திசேர்வார். (௪௨)

---

* அமுதகடேசர் என்று. கடம்-குடம்.

இன்னமுதருவமாகுமிக்கதைபிரவிபோலத்
தன்னகவிருளையீர்ந்துதயங்கொளிதழையவாற்றிப்
பன்னலமளிக்குமென்னப்பரம்பரன்குளகநாம
மன்னியவாறுநீயேவழங்கெனவகுத்துச்சொல்வான். (௪௩)

கழிந்ததோர்காலந்தன்னிற்கரைபொருதிரங்கும்பூநீர்
வழிந்தெழுதரங்கமேயநருமதைவளருங்கூலம்
மொழிந்தொளிர்வேதமாதிமுனிவறப்பயின்றுமோக
மொழிந்தவன்சுவேதனென்பானுயர்தவத்துருவமானான். (௪௪)

அருந்ததியனையகற்பினவன்மனைக்கிழத்திநாமந்
திருந்தியசுசீலையாகுந்திருவினுமுருவமிக்கா
டருந்திருமைந்தன்சீலந்தவம்பொறைசால்புகல்வி
பொருந்தியகுளகனென்பான்புண்ணியம்பூத்தநீரான். (௪௫)

மூவரும் * துவலாற்றங்கரைமிசைமுயலுநோன்பிற்
றேவருமுவப்பவைகிச்செறிந்தனர்செல்லுங்காலம்
பூவருமாரிகுன்றியபத்தலைபொலிவுமாற
யாவருமங்கணுள்ளாரிடைந்துதென்றிசையினேக. (௪௬)

சொற்றருசுவேதன்றானும் † குறுமுனிதுயரநீங்கிப்
பற்றுமாச்சிரமந்தன்னிற்பைந்தொடிபாலன்மற்று
‡ நற்றவரோடுமேவிநடுவுறுநகரந்தேசம்
பற்றறப்போகிவேதவனத்தினைப்பணிந்துபோற்றி. (௪௭)

முனிவனுச்சிரமமேவிமொழிதமிழ்முனியைப்போற்றக்
கனிவொடுமிருக்கைநல்கிக்காய்கிழங்காதியாய
வினியனபலவுநல்கியிருடிகட்கியையினுற்ற
நனிபலகாலம்வேதநாதனைப்போற்றிவாழ்ந்தார். (௪௮)

அருந்தவச்சுவேதன்றானுமமுதமாமிலிங்கமேவிப்
பொருந்தியதலத்துமைந்தன்பூங்குழற்பூவையோடு
மிருந்தவர்சூழமேவியிறைவனைப்போற்றிமாற்றி
வருந்தறநெடுநாண்மேவிமகிழ்வொடுவைகுநாளில். (௪௯)

தோன்றலாங்குளகனோர்நாட்சுதைபதிந்துருவச்சோதி
யீன்றொளிரிலிங்கமாயவிறையுளமுவப்பவெண்ணிச்
சான்றதாய்நிறைந்தசோதிதன்னையேயுளத்துளாக்கி
யுநன்றபூசனையேசெய்தானுற்றியவடைவுஞ்சொல்வாம். (௫௦)

---

* துவலாற்றங்கரைமிசை - துவலையுடைய நருமதாநதிதீரத்தில்.
† குறுமுனிதுயரநீங்கிப்பற்றுமாச்சிரமம் - அகத்தியான்பள்ளி. ‡ நற்றவர் பதினாயிரவர் என முதனூலிற் கூறப்பட்டது.

மருத்தினையொடுக்கியோகவல்லவர்முனிவர்வானோர்
கருத்தினையடக்கியோடுங்கவற்சியற்றுளத்துப்பூசை
திருத்துதலரியதாகுஞ்சிவனருட்செய்கையார்க்கே
குருத்திடுமுணர்வுகூடுங்கோதறுமின்பமாமே. (௫௧)

வேறு.

நிலவெனவிலகியொளிதருகயிலைநிழலரியணை, யதன்*பீடங்
குலவியகமட, மலர்தலையுலகுகொளும்பணுடவிகள்பாத்திரமா,
யிலகியமுனைகாவிரிமதியமியல்பிரயாகையென்றிவையேர்
கலவியவுதகமருக்கியமுதல, கங்கையம்புனலபிடேகம். (௫௨)

புனை†துகிலாரமெனவிரிதிசையும்பொலியவாகாயநீணதியு,
நனைதருமலருமுடுநிரை, மதியநலமிகுசந்தன, நகையார்
வனையணியிரவிபதின்மரோடிருவர், வாசுகிமார்பணிநூலுங்,
கனைதருகடசமுதலியபணிகள்கலையணலரவமற்றையவே. (௫௩)

மேகமேதூபந், தீபமேகிரகம், விரிதருநதிக‡ணீராசம்,
வேகமார்வாயுவிலகியதாலவிருந்தமேசாமரை,வேள்வி
யாகமார்வன்னி, கடல்களேயான்பா, லன்னமிரேழுலகனைத்துந்,
தாகமார்சுதியுமோடதிமுதலதருவெலாங், குலாசலமப்பூபம். (௫௪)

§ பக்கமார்வரைகணறுங்குளங், ககனம்படரொளியாடி, தாம்பூல
மிக்கமாமணிக,ளொழிதனவெவையும்வேண்டியபொருள்களாக்கொண்டு
தச்சமாபூசைசமைத்தனனுருந்தகவுறுபூசையாற்றியபின்
னைக்கனைத்தொழுதுநயந்தவனபாதநலமலிதுதிபலநவில்வான். (௫௫)

வேறு.

பாற்கடற்பிறந்தவமுதருவாயபகவனேபல்லுயிர்க்கரசே
நூற்கடனுனித்துநுணங்கியகேள்விகோற்றவராற்றல்சால்கொள்கை
மேற்கடருயவீடருள்வேதவிழுச்சிரதத்தழுத்துமாமணியே
மாற்கடனேமிவழங்கியவாழ்வேவறியனேனறியுமாறருளே. (௫௬)

வழிபடுகுழவியழிதரவெதிருமறவினைமறலிவாயுதிரம்
பொழிவுறவிழிகள்சுழல்செயவலரும்புதுமலர் ০ கொதுமல்சேரடியாய்
பழிதருகுழியினிழிவுறுபிறவிபடர்மிடியிடருறுகடல்வாய்
யுழிதரல்கழியவழிதரல்நினையாயுனையலாவினையுமாறிலனே. (௫௭)

---

* பீடம்-பத்திரபீடம். பாத்திரம்-பூசைப்பாத்திரம். மதியம்-சந்திரபாகை. † துகிலும் முத்துமாலையும் முறையே திக்கும் ஆகாயகங்கையும் என்க. ‡ நீராசம்-நீராஞ்சனம்; ஆலாத்தி. யாகங்கள்-நித்தியாக்கினி. § குலாசலங்களின் பக்கமலைகளாகிய பரியந்தபருப்பதங்கள் வெல்லம். ০ கொதுமல்-கொய்ம்மை, பற்றிகலின்மை.

வேறு.

ஆதிநாயகனேபோற்றியமலனேபோற்றியானின்
பூதியார்புனிதாபோற்றிபுராதனபோற்றிபோற்றி
சோதியாயகண்டமாயதோற்றமாய்த்துறவாவின்பக்
கோதிலாவமுதேபோற்றிகுளகனேபோற்றிபோற்றி. (ருஅ)

இனையனபரவிப்போற்றவினியவாரமுதமூர்த்தி
கனைசுடர்க்கற்றைகான்றசதிருலகனைத்துமூழ்சத்
துனைவெதிர்நிற்றலோடுஞ்சுருதிநாயகனைப்போற்றி
வனைதருசண்ணீர்வாரவார்மயிர்ப்புளகம்போர்ப்ப. (ருகூ)

என்புநைந்துருகிசசெய்கைமறந்தெழுந்திறையோன்முன்ன
மன்பினுனிருசதஞ்செய்யவங்கையாற்றமுவியார்வ
முன்புறநோக்கிவேண்டும்வரந்தரமொழிகவென்ன
நின்பதத்தன்புநீங்காதருளெனநிகழ்த்திப்பின்னும். (சுo)

அடியனேன்பெயரினுனீயமர்ந்திடவேண்டுமோர்வங்
கடிபுமென்றந்தையாயெங்காதலர்கலந்துமேவும்
படியெலாம்வறுமைதீர்ந்துபயன்றரவனிப்பாயென்று
முடியிறைப்பணியகல்கிக்கரந்தனன்முழுதுமானேன். (சுக)

அந்தநாண்முதலதாகக்குளகனென்றறையுநாமம்
வந்ததாற்குளகன்றானுமலரடிவணங்கிப்போற்றித்
தந்தைதாய்சூழ்ந்தமேலோர்தம்மொடுமங்கண்மேவிச்
சிந்தையார்வறுமைதீர்ந்துசிவனருள்சேர்ந்தானன்றே. (சுஉ)

முரிதிரைக்கோடிமேயமுன்னவன்றேற்றநாமம்
பெரிதுறப்பெற்றவாறுபேசினமிச்சீர்கேட்போர்
விரிதரச்சொல்வோர்யாரும்வெவ்வினைவீட்டியின்பம்
புரிதருமுத்தியெய்வார்புனிதாரய்ப்புவியின்வாய்வார். (சுங)

வேறு.

இளகேசிலிரும்புறவேர்மலருங்
குளகேசனிருங்கதைகொண்டுணர்வார்
பளகேசரிபான்மையராயமர்வா
ரளகேசனெனப்பரனாருருளே. (சுச)

குளகேசச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௬,௧௧௧.

---

# சபைச்சருக்கம்.

---

மழைவளர்தடக்கைவிழையுமார்தாதாமறைமுனிநிறைமொழிகேட்டுக்
குழைதருமுளத்தோடறவநீமுன்னங்கூறினைகொழுஞ்சுவைநறுந்தேன்
கழைவளர்சாரன்மறைவனத்தமர்ந்துகதிதருஞ்சபைபலவென்றே
தழைதரவவற்றின்றன்மையுஞ்செய்மைதன்னையுஞ்சாற்றுதியென்ன. (௧)

எல்லையில்கதியும்வல்லையேயருளுமெண்ணிருசபைதரும்பயனு
நல்லநீகேட்டியல்லவேர்மாட்டிநலந்தருபயனெலாங்காட்டி
முல்லைசூழ்வேலிபுல்லுமாமறைநகைமுழுமுதற்றொழுதருமன்பை
யொல்லையேகாட்டிச்செல்வமாவீட்டினுய்த்திடுமெனவுரையூட்டும். (௨)

† வளங்கெழுதில்லைவனச்சபைமேல்பான்மற்றதன்பின்னர்மாசபையாங்
களங்கொளுமுலோகதருமிணிசபைபின்கலந்திடும்பஞ்சயோசனையின்
விளங்கியகோணகும்பமென்பெயரான்மேவியதீர்த்தமற்றதன்கண்
ணுளங்கொளுமுமையோடுறைந்திடுமீசன்யோசனையிரண்டரையதன்மேல்

வேறு.

‡ கன்னகுச்சநான்காவதாங்கதழ்கதிர்த்திக்கின்
மன்னியுற்றிடுஞ்சங்கரன்மற்றதன்கீழ்பாற்
றன்றுமற்றிசுவேதவனப்பெயர்ச்சபையாம்
பன்னுபஞ்சமமற்றதற்கியோசனைபாங்கின். (௪)

வடதிசைப் § புரிகாளியாமற்றதன்கிழ்பாற்
கடலயற்பிரவேசனியங்கதிற்களந்து
விடமடக்கியமதிச்சடைவிமலன்வீற்றிருந்தே
யிடரகற்றுவன்மற்றதேழாவதாமியம்பின். (௫)

---

† முதலாவது சபை தில்லைச்சபை; மேல்பாகத்தில்; இது ரகசியம். இரண்டாவது சபை கீழ்பாகத்தில் மகாசபையாம். இது சிற்றம்பலம். மூன்றாவது சபை உலோகதருமிணிசபையாம். இது கும்பகோணம். ‡ நான்காவது சபை கன்னகுச்சசபை. இதற்குத் தக்ஷ சபை எனவும் பெயர். இது திருப்பறியல். ஐந்தாவது சபை சுவேதவனசபை. இது திருவெண்காடு. இதை வழிபட்டுய்ந்தது அத்தியாகலின், அத்திசுவேத வனசபை என்றார். § காளிபுரி என மாறுக. ஆறாவது சபை காளிபுர சபை. இது திருவாலங்காடு. ஏழாவதுசபை பிரவேசனிசபை. இது, காவேரி சமுத்திரத்தோடுபிரவேசனஞ் செய்வது எனப்பொருள்படுதலாற், காவிரிப்பூம் பட்டினமென்பர். பிரவேசனம்-வாயில், பிரவேசித்தல்.

இங்கிதற்கயற்றக்கிணைத்திலங்கிய* காம
னங்கநாசனியட்டமியாஞ்சபைநவமி
தங்கமார்தருகாலநாசனிநமன்றொலைய
வெங்கணுயகனடர்த்திடவிலங்கியவிடனே. (௬)

காலியோசனையகத்திதன்காறிசைகலந்த
பாலிரண்டரையோசனைப்† பாவநாசனியாம்
வாலிதாஞ்சபைதசமியாமற்றதின்வயங்குஞ்
சூலியாழியுந்தரித்தெலாந்தானெனச்சுடரும். (௭)

அச்சபைக்குமேற்கருகினிற்§சுகிர்தயதான
முச்சரித்திடிற்றீவினையொழித்திடுமுமைகோ
னச்சியங்கதிருகர்வேட்டுவர்விலங்கோடு
நிச்சமாவிளையாடியேசிலையொடுநிலையும். (௮)

சொற்றவச்சபைத்தக்கிணக்கீழ்த்திசைத்துணிவே
யற்றியோசனைமூன்றரைப்பாங்கினிற்பரிவா
லுற்றசேடனதருச்சை‡காரோணமென்றோங்கு
மற்றதன்கணேமிலிங்கமாய்வரந்தரும்வரதன். (௯)

பாசமுத்தலைச்சூலமும்பரித்தனன்பணித்தோ
ராசகற்றியேசித்திகளனைத்தையுமளிக்கு
மூசுமங்கதன்றக்கிணமூன்றியோசனையிற்
பேசவேதவனப்பெயர்த்○தீர்த்தமேபிறங்கும். (௰)

---

* எட்டாவதுசபை காமாங்கநாசனிசபை. இதற்குச் சம்புவிநோதச பை எனவும்பெயர். இது திருக்குறுக்கை. ஒன்பதாவதுசபை காலநாசனி சபை. இது திருக்கடவூர். † பத்தாவதுசபை பாவநாசனிசபை. இது துர்க் கிருதநாசனிசபை எனவும் பெயர்பெறும். இது திருவிற்குடி. சூலத்தையு டைய சிவபிரான் சக்கரத்தையுந் தரித்தது. § இசசுகிர்தயதானத்துக்குச் சுப் பிரமமெனவும் பெயர். இத்தானத்திலே சிவபிரான் உமாசமேதராய்ச் சிவ கணநாதர்களோடும், வேட்டுவர்களோடும், விலங்குகளோடும் விளையாடி வீற்றிருப்பர். ‡ பதினொராவது சபை காயாரோகணசபை. இது திருநா கை. இங்கேபுண்டரீகமாமுனிவரைச் சுவாமி ஐக்கியஞ்செய்துகொண்ட மையால், இதற்குக்காயாரோகணம் எனப் பெயராயிற்று. காயம்-மேனி. ஆரோகணம்-ஏறுதல். காயாரோகணம் காரோணம் என மரீஇயிற்று. சிவ பெருமான் தம்மோடு பிரமவிஷ்ணுக்கள் இருவரையும் சேர்த்துக்கொண்டு மும்மூர்த்திவடிவாயிருத்தலின், இப்பெயர்பெற்றதென்றலுமாம். ○ தீர்த் தம்-பரிசுத்தம். அஃதீண்டாகுபெயராய்ச் சபையையுணர்த்திற்று.

இலங்குமிச்சபைபன்னிரண்டாவதாமிதன்பா
லுலங்கொடோளிராவணனற*மெம்மிடத்துணர்ந்தா
னலங்குமிங்கிதன்வாயுதிக் † கருத்தமுமிரண்டும்
விலங்கியோசனையகத்ததோர்மேன்மைசாதீர்த்தம். (கக)

அதிகியங்கறலிடைத்தவமாதரித்தடியார்
கதியதாம்பரம்பரன்றனைக்கதிர்க்குழாந்திரண்டாங்
கெதிர்தரும்படிபுனலிடையெழுதரவெதிர்ந்தே
முதிருமன்பினுண்முன்னியமனக்குறைமுடித்தாள். (கஉ)

ஆயதற்கிருகுரோசத்திற்‡பதுமமோடடுத்து
மேயமாவனபெயர்த்தொருதீர்த்தமேல்விண்ணோர்
நாயகன்றெழுவுத்தரநயந்திடுங்கால
கேயனன்னதிற்படிந்துயர்தோள்வலிகிடைத்தான். (கங)

அன்னதற்குமேற்கலாவதியாஞ்சபையனிலன்
மன்றுதிக்கினிற்றழைத்துமாமகிமையான்வயங்கிப்
பன்னசப்பணிப்பாவமைபரிவுசெய்பாலா
மின்னலுற்றவரில்லையாமிச்சபைகண்டோர். (கச)

உள்ளுமப்பயனுதவலாலமரருமுவப்பின்
விள்ளுதற்கரிதிதுபதின்மூன்றதாய்விளங்குங்
கொள்ளுமுச்சபையினனமுமுளகுறிதனென்னுற்
றெள்ளுதற்கரிதவைதமைவியாதனேதெளியும். (கரு)

ஆறுபீதுகொண்டணிபெறுமைந்திரண்டாய
பேறுசால்சபையுரைத்தனமிச்சபைபேணின்
வீறுமாதவப்பயனெலாமளித்திடுமேன்மை
கூறுவாரசொலக்கேட்பவர்வினையெலாங்குன்றும். (கசு)

வேறு.

படியுயர்சபைபதினாறும்
விடியலினினைபவர்விழைவா
னெடியவனணைவருநெடியோ
னடியிணையமர்கதியடைவார். (கஎ)

சபைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,கஙகசு.

---

* எம்மென்றது நாரதமுனிவர் தம்மை என்க. †இரண்டரையோசனை.
‡ பதுமமோடடுத்து மேயமாவனப்பெயர்த்தொருதீர்த்தம் - பதுமனை மென்னும் பெயரையுடைய தீர்த்தம்.

# வேதவனச்சபைத்தோற்றச்சருக்கம்.

பூந்தாதுபரந்ததருப்பொற்சிகரமெனப்பொலிதோண்
மாந்தாதாவீணைமுனிமதுரமொழிமாந்தாதா
ராந்தாயகடன்மூழ்கினடைவதெவனென்றுமுனி
வேந்தாயவறவனெதிர்வினயமொடுவிளம்புவான். (க)

வேறு.

பாரினிற்சிவபுரியென்னப்பல்வளத்
தேரினிற்பொலிதருமறைசையின்பமே
நாரினிற்பணிதரநல்குநற்பதி
சீரினிற்றிகழ்சபைத்திறங்களோதியே. (௨)

ஒளிதருமிச்சபையுவந்துபோற்றவே
களிதருமின்பமேகாட்டித்தீவினை
யெளிதெனவகற்றிடுமினியயோகமுந்
தெளிதருசித்தியுங்கதியுஞ்சேர்க்குமே. (௩)

கறைவனங்கழித்திடுங்கதிரினிச்சபை
யுறைவனமறைவனமுலப்பினன்மையே
நிறைவனமிறைவனநீர்மையாவரு
முறைவனமளித்திடுமூலமென்னவே. (௪)

தெரிதரவுணர்த்தினைசிறந்தவிப்பதி
புரிதருசபையினிப்புணர்ந்தவண்ணமும்
பரிதருபயன்றருபண்பும்பாயசீர்
விரிதரவுணர்த்தெனவிளம்பனமேயினான். (௫)

வேறு.

மலரவன்றந்தமைந்தன்காசிபன்வயங்குவாட்கண்
ணிலவொளிர்குமுதச்செவ்வாய்த்திதியிடைநிறைந்தகாதற்
குலமுறவீன்றமைந்தனிரணியன்குறிப்பினாற்றும்
புலமுறவரியநோற்றுப்புவனமூன்றளிக்குநாளில். (௬)

கடவுளர்க்கியற்றுஞ்செய்கையனைத்துந்தன்கண்ணவாக
வடமுறையியற்றவாக்கிமெல்லடர்க்கதிர்களாதி
படர்தொழிலனைத்துமாற்றிப்பகைவருளென்றுபாய
தடமுறுபுவனமூன்றுந்தன்வழியொழுகச்செய்தே. (௭)

ஆழிமாலிடையிற்செற்றமகத்துறவலிக்குகாலின்
வாழிய*பிரகலாதன்மைந்தனாய்வரிவண்டார்க்கு
மேழிசைத்துளபமாயனிசையெடுத்தியம்பவோர்நா
ளூழியினழியுமாவோவுயர்முதலென்றுசீறி. (அ)

உருமெனமுழங்கிமைந்தனுயிர்கவர்ந்துண்ணவெண்ணக்
கருகியசிறுவனுள்ளங்கலங்கினன்கருதலோடுந்
திருகுவெஞ்சினத்துத்தீயிற்றிசைதிரிந்தவியச்சுணிற்
பெருநரசிங்கமாகிப்பிறையெயிற்றொளிசுடாவ. (கூ)

சுழல்விழிக்குழிசட்பேழ்வாய்ச்சுடருளைச்சுலவுநாவிற்
றழலுருத்தனையனாகித்தராதலநெளியவேகி
மழாதிரணையிற்றங்கிவலிந்தமருடற்றிவாட்போர்
கிழலெழவசுரனாற்றுநெடுங்கரமுருங்கப்பாய்ந்தே. (௧0)

பற்றினன்படையிற்சாவாப்பண்பொடுபலவுமோர்ந்து
முற்றியகுலிசம்போலுமுகிரினான்முதிர்கவானிற்
றெற்றெனவகலம்போழ்ந்துசெறிதசெங்குருதிமாந்திக்
குற்றுயிர்பருகிச்செற்றங்கொடுமொடுக்குடிதந்தவாற்றால். (கக)

வெறிக்கனிமிக்குமுற்றும்விழுங்குவனென்றுவீறும்
பொறிக்குறும்பகன்றமேவிப்பூமிசைப்புக்கேதனாதி
நெறிப்புறமமார்க்கூவி †நெடுமொழிமலனமாயஞ்
செறிப்புறப்பிணிப்பப்போதஞ்சிதைத்தனன்செப்புகின்றான். (கஉ)

அலைவறச்சராசரங்களனைத்தையுமளித்துக்காக்குந்
தலைவன்யானெனினையொப்பார்சகத்திலையதனானீவிர்
நிலைபெறும்புத்திமுத்தியெனநடிநீழலாறறி
யுலைவறப்பொருந்துவீரீதுறுதியென்றுணர்மினென்ன. (கங)

மயக்குறுமாற்றங்கேளாமலரவனிறும்பூதெய்தி
நயக்குறையுடையமாற்றநவிற்றலையொழிதிநாடார்
வியக்குநர்வினிவர்தானேமேம்படத்தன்னைக்கூறுங்
கயக்குறுமொழியிற்சாதல்கதிதருங்கருதிக்கேண்மோ. (கச)

அளவறுபுவனமாகியனைத்தையுமடக்கியேற்றி
னுளபொருடானேயாகியொருவனாயுலப்பிலானாய்
வளமலிமறையினீறுமனத்தொடுவாக்குந்தோயா
விளரிலாவணியும்வேணியிறைவனேயேகனென்றும். (கரு)

---

* இவ்விரணியனுக்குப் பிரகலாதனேயன்றி, அநுகலாதன், சங்கலாதன், ஸலாதன் என வேறும் மூன்றுபுத்திரருளர் எனவறிக. † நெடுமொழி செப்பி னென்றனை முடிக்க. நெடுமொழி — தன்மேம்பாட்டுரை.

துணிவருஞ்சத்திமாயைச்சூழ்ச்சியினமைத்துவேறு
பணிதரமொழித்துப் * பக்கம்பயின்றுடலாதியாகப்
பிணிதரநோக்கியாக்கியழித்தவைபிறங்கவாற்றிக்
கணிதருவிகாரமாற்றிக்கலைகளுய்க்கதியுமாகி. (கசு)

புரந்துலகளிக்குந்தூயபுனிதனேயெனக்கும்போதங்
கரந்திடுமுனக்குமற்றைக்கடவுளர்கதிக்குநாத
விரந்திடினளிக்குமின்றேலெரித்திடுமிருளையீர்ந்து
துரந்திடுமன்பர்க்கல்லார்க்கிருட்டொடர்த்துயக்கமாக்கும். (கஎ)

ஆதியாயமலமாயவரனுளனுகவிணை
லோதினுலாவதென்னென்றுணர்த்தவுமுணரானுநிக்
கோதினுலுருப்பத்தேவர்குழைவதுட்கொண்டுகோதை
பாதியாய்முழுதுமாயபரம்பரன்படிவங்கொள்வான். (கஅ)

எரியொடுகாற்றுங்கூற்றுமிடியுமூண்டெதிர்ந்ததேய்ப்பப்
புரி † நரமிருகப்புட்சார்புணர்ப்பொருங்கியைந்துபூத
மிரிதருசரபமாகியிளம்பிறையிலங்குசோதி
சொரிதருநகத்தெண்கான்மேல்கீழொடுதுலங்கத்தோன்றி. (ககூ)

உருப்பவிர்ந்தொளிரும்பாதத்துகிர்நுலுருமுப்பாயும்
பொருப்புறவகலம்போழ்ந்துபுரட்டிவிண்போகப்போக்கி
நெருப்புறவுரிப்பக்காயநெடியவனயர்ந்துநீடும்
விருப்புடனச்சமாகியகந்தைபோய்வீழ்ந்துபோற்றி. (உ௦)

விழுங்கியமலத்தாற்றூயவிரகறவகந்தைநீக்கத்
தழுங்கியவவலமாற்றியருளுருவாகித்தோற்றித்
தொழுங்கழல்சேர்த்தியாளுஞ்சோதியேசரணந்தோற்று
தொழுங்கழிகாலைத்தோற்றியுய்யக்கொண்டருடியென்றும். (உக)

தேற்றறவமலமாயசிற்பரானந்தமாகி
மாற்றறவொளிருஞ்சோதிவள்ளலேபோற்றிபோற்றி
கூற்றுயிர்குடித்தசீதக்கொழுமடற்கமலப்பொற்று
ளூற்றிருந்தமுதமூறவுளத்தருளொருவபோற்றி. (உஉ)

எனத்தொழுதிரந்துபோற்றவிரங்கியேகருணையீச
னனைத்தவன்முதலோராயவமரரையருளிநோக்கி
மனத்துயரொழிமினம்பால்வழிபடுமன்பர்மேய
வினைத்துமாலுதிகளுமெனத்தெளிந்திகழ்ச்சிமாற்றி. (உங)

---

* பக்கம் பயின்று—பிரவிருத்தியிலிருந்து. † நரத்தன்மை, மிருகத்தன்மை, புட்டன்மைச்சார்பு மூன்றுமொருங்கியைந்து. புணர்ப்பு—உபாயம்.

வழிபடுமென்றுகூறிச்சரபமாம்வடிவமாற்றக்
சழிமகிழ்சிறந்தவானோர்களரத்தடிபரவிப்போற்ற
வழிவருமமலன்மாயனயனயிராணிகேள்வன்
மொழிதருமமரரோடுமறைவனமுன்னிச்சார்ந்தே. (௨௪)

மெல்லியலோடுவேதவனச்சபைவிரும்பிமேவிப்
புல்லியவானோர்தம்மைப்புகன்றறும் * பிரிவுக்கேற்ற
வெல்லியனுனமேவியிலிங்கமாமெம்மைப்போற்றி
யல்லியினமருமென்னவடியிணைபரவிப்போற்றி. (௨௫)

அரியயனமரர்கோமானுருத்திரர்வசுக்களாசைத்
திரி ருமருக்கர்தேவர்சண தவர்சிறந்தயாரும்
பரிவுறவைகிப்போற்றிப்பதிந்தனர்பதிந்தானைக்
தெரிதரவிலிங்கமாற்றியருச்சனைசிறப்பிற்செய்தார். (௨௬)

கடவுளர்சூழ்ந்துநாளுங்கனிவொடுபணிந்துபோற்ற
மடவரலோடுங்கூத்தின் மகிழ்சபைமருவிநாளுங்
கடன்முறை † வானோர்போற்றுங்கவின்பெறுமன்றமாகுஞ்
சுடர்மறைவனத்தைப் [illegible] டார்தோற்றமுந்துயருங்காணார். (௨௭)

அன்றவர்சூழ்ந்துபோற்றுமமர்தலாற்றேவபத்த
மென்றுயர்நாமம்வேதவனத்தினுக்கெய்ந்ததாகு
மொன்றிய‡காலந்தோற்றமுரைத்தனைப்பயனுமோர்தி
குன்றுயர்குவவுத்திண்டோட்குருமணிவயிரப்பூணாய். (௨௮)

மின்னவிர்ந்திலங்குந்தேவர்பணிசபைவிளங்குநாதன்
பொன்னடியொருகாற்போற்றும்புண்ணியர்புனிதராவார்
பின்னையுதரமேவார்பெரும்பெயர்க்கடவுட்போற்ற
நன்னலமளிக்குமோராரனந்தலையுலகத்துள்ளார். (௨௯)

ஆயிடைப்பிரமவீசனடியிணைபணிந்தார்வேதன்
சாய்வறுமுத்திசேர்வார்சசிபதியிலிங்கம்போற்றிப்
பாயசீர்ச்செல்வங், காந்திப்பயன்றரும்§பரிதியீசன்
மேயசாலுலகநாதன்விண்டுமுத்தியிணையீவன். (௩௦)

---

* பிரிவு-வகுப்பு; என்றது, ஈண்டுத் தாரதம்மியத்தின் மேற்று. அகவிதழ்போலச் சமீபித்து நெருங்கியிருமென்று பணித்தருள. † இச்சபை தேவர் போற்றுமன்றம் எனப்பெயர் பெறும். ‡ காலம் [illegible] தோலுரித்தகாலம். § பரிதியீசன் உலகநாதனுடைய விண்டுவினுடைய முத்தியை ஈவன் எனமுடிக்க.

அங்கியினிலிங்கம்போற்றினழலெனப்புனிதமாவர்
தங்கியமருத்துவீசன்றருக்கொடுவலிமைநல்கும்
பொங்கிய*வேதவீசன்மறையெலாம்புரிந்துநல்கு
மிங்கியற்றியநற்றேவர்குறியிருஞ்சீர்த்தியீயும். (௯௧)

புரந்தரன்றீர்த்தமாடிற்புந்திமேம்படுவர்போற்றி
னரந்தையீர்மதியினுளிலட்டமிதன்னிற்†றிங்க
ணிரந்தரஞ்சோமனுற்றுங்குறியினைநெறியிற்போற்ற
வரந்தருந்தீமைமுற்றுமாய்ந்திடுமகிழ்ச்சியுண்டாம். (௯௨)

வளர்பிறைமாசத்திங்கட்சத்தமியயங்கு‡பானுக்
கிளர்தருமிலிங்கம்போற்றிற்செழுமுநோயனைத்துநீங்கி
யுளமகிழ்சிறப்பர்தேவபத்தமென்றொருகாலோதத்
தளர்தருந்தீமையாரேசபைதனிப்பெருமைசொல்வார். (௯௩)

மன்னியமாகத்திங்சண்மகத்துப்பூரணையின்வாரி
மின்னியவேததீர்த்தம்படிந்தவட்பெயர்ந்துவாரோர்
பன்னியதேவபத்தசபைப்பரன்பாதம்போற்றி
னந்நிலைபுத்திமுத்தியனைத்துமாமமலம். (௯௪)

பரிவுறு§மூவாவின்வேதநதியினிற்படிந்துபாவ
மிரிதரத்தேவபத்தத்திலங்கியவிறைஉறபோற்றி
னரியனவில்லையெல்லாமனித்திடுமைந்தொடைந்தாய்ந்
தெரிதலையரக்கனம்பாலறப்பயன்றெரிந்தானங்கண். (௯௫)

முனிசமதக்கினிப்பேர்முன்னவனெனுஞ்சுவற்க
னெனுமிவர்பரமஞானமிதனிடையெய்திவாழ்ந்தார்
கனிவொடு○வாசுதேவன்கருத்தினிற்பூசையாற்றி
யினிதுறயதியினுற்றுனிதற்குநேரிசைப்பதுண்டோ. (௯௬)

தருக்குயரரக்கர்தீயதானவர்தலைழத்தவாற்றன்
முருக்கியத்தலத்தைக்காக்கு‡மோடியென்றேறுஞ்சத்தி
யுருக்கிளர்வேதநாதனருளினுலப்பினமேன்மைத்
திருக்கிளர்தேவபத்தசபையின்சீர்தெரிக்கற்பாற்றே. (௯௭)

---

* வேதவீசன்-வேதங்களியற்றியவீசன்; வேதநாயகரன்று. தேவர்குறி-ஏனைச்சர்வதேவர்களுமிங்கியற்றியசிவலிங்கங்களெல்லாம். † திங்கணிரந்தரம்-மாசக்தோறும். ‡ பானுக்கிளர்தருமிலிங்கம்-பாற்கரலிங்கம். § மாசிமாசத்து மகநக்ஷத்திரத்தமாவாசையாகிய உவாவிலென்க. ○ வாசுதேவன்-விஷ்ணு. யதியினுற்றான்-முனியாகி யாண்டிருந்தனர். ‡ மோடி-துர்க்கை. மோடியென்றேறுஞ்சத்திவேதநாதனருளினுற்காக்குமெனமுடிக்க.

பற்பலவிரித்துக்கூறிற்பயனிலேதேவதத்தத்
தற்புதனடியையெவ்வாறாயினுமடைந்துபோற்றக்
கற்பதேயுணர்ச்சியாகுங்காதத்துறும்புத்திமுத்தி
நற்பயனறீமையெல்லாநடுங்கிவிட்டகலுநன்றே. (சுஅ)

வேறு.

ஆதலின்வேதவனச்சனபயாயுங்
காதலினூறொருழலேகடனாகும
மேதமிலாறகிஃதிமமுறையெனறே
யோதுனனூாத்னூழமுறையானே. (சுகூ)

வேதவனச்சனைத்தோற்றச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,கஎரு.

---

# மணிகன்னிச்சருக்கம்.

---

சுரைபொருதிரைக்குங்கங்கைக்கமழ்புனற்காசிமேய
விரைதருமிழ்வேணிவிசுவநாதன்றாடு
திரைமணிகன்னித்தோற் றருசெபபியப் பதனைச்சிர்முறைறும்
வரைதரவுரைத்தயென்னமலரவனமைநதன சொலவான். (க)

பசையுறுநொடியபாவப்பரப்பினைப்பரியமாற்றி
நசைதருமின்பமாயசத்தியினை நல்குந் தீர்த்தங்
திசைதொழுமறைநசைமேவித்திகழ்மணிகன்னிபோல
விசையுமூவுலகத்துள்ளுமிலையிலையிலங்குவேலோய. (உ)

நெறிதருமொழுக்கங்கல்விதவங்கொடைநீதியாதி
செறியறமிலாக்குலகுர்திகழ்சதிசித்தியியும்
பொறியறுமியோகற்றூர்க்கும்புணர்தகிடுமுத்திபோதக்
குறியுறமுணர்வற்றூர்க்குங்குளிர்மணிகன்னிகூடின். (௩)

சீர்மறைவனத்துமேவித்திகழ்மணிகன்னிமூழ்கி
யேர்தருசித்திமுத்தியெய்தினோரெண்ணிலாதா
ரார்ரவரைப்பிற்பல்குமாதலாற்சிலரையையர்
நீர்தரசசுருக்கியீணுகேச்செப்புதுந்தெளிந்துகோடி. (௪)

சாணவியாதிபாவந்தவிர்த்திட*திரிபுராரி
யாணமை, பேயின்முத்தி, தேவலனயனூர்சார்தல்,
வாணமார்தீர்த்தவுண்மை, யிலிங்கத்தின்வகுப்புச், சோரன்
றேனமர்கயிலைசேர்த, லிந்திரத்துய்முன்செல்வம். (௫)

பிரவரன், வீரசேனன்கவுசிகன்பிறங்குமேன்மை,
சுரருலைதனின்மேவி†யதுவுறல், சுருண்மென்கூந்தல்
வரமுறுமகளிர்தம்மைக்காசிபன்மணந்தன், மைந்தர்
தரவுயரதிதிசேர்தல், காசிபன்சிருட்டிசார்தல். (௬)

சருக்கமிம்முறையிலுருந்தடமணிகன்னிமேன்மைத்
திருக்கிளர்‡பதிகமாகுந்தெரிதரவிரித்துக்கூறக்
கருத்துறத்தெளிதியிந்தமுறையினிற்சாவலோம்புங்
குருக்கிளர்குவவுத்திண்டோட்கொற்றமார்சோனைவேலோய். (௭)

மணிகன்னிசசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧,௪அ௨.

---

# கங்கையாதிபாவமோசனச்சருக்கம்.

அற்றவாவன்பசமுறமெய்யருண
முற்றினூரிற்சுசோடயமூழ்குற
வுற்றுநெஞ்சமுவப்பவுரைத்தலாற்
பற்றினூர்கதைப்பாலுளம்பட்டதால். (௧)

திரையினுன்மணிசிந்தித்தபணியங்
கரையினுன்மணிகன்னிக்கதையினி
யுரைசெய்வாயெனநாரதனூறுதேன்
புரையுமாவரசற்குப்புகலுவான். (௨)

காசிமேவியவீசன்கருதருட்
டேசினூர்மணிகன்னியத்தேவினோ
டேசில்வேதவனத்தினிலயந்ததான்
மூசிவண்டுமுளரிமுரலவே. (௩)

---

* திரிபுராரியாணமை - திரிபுராரி என்னும அந்தணன் காசிக்குப்போய் அநுகூலமாகாது திரும்பி வேதாரணியத்து மணிகன்னி அடைந்தமை. † ய அசுராசன். ‡ பதிகம்-தொகுத்துச்சொல்லுதல்.

வானதிக்குயிராமணிகன்னிமுன்
பானதித்தலத்தாதியிராமனுக்
கூனமாயவிறையருளுற்றநா
ஞானமேவினர்நற்கதியெய்தவே. (௪)

வினைத்திரட்குலைவேரரிந்தேயுட
னனைக்குமுன்னுயர்நற்கதிநல்குமா
னினைக்குநெஞ்சினராயினுநீடிய
கனைக்குமாவினைமாட்டிக்களிப்பரே. (௫)

வேதநாதன்பணிந்தவர்மேற்செயுங்
காதலின்னருள்காட்டும்பெருந்தென
நாதன்முன்னலமார்பயங்கன்னிநன்
கோதவென்னிலுலப்பிலகாலமே. (௬)

வேந்தனுயசவுசிகன்வேதிய
வேந்தலாமிழெழுஞ்சிவவின்பமே
மாந்தியேய்ந்தவபிமணிகன்னிநீர்
தோய்ந்துநாளுந்தொழுதெழுந்துய்கையால். (௭)

வீடுவாய்ப்பிறந்திடுமேன்மையார்
கூடுவார்மணிகன்னிகொடுவினைப்
பீடுசாலவழித்துப்பிறவிவேர்
சாடுமற்றிதுசாமியுருவமே. (௮)

வெள்விதானந்தபஞ்செபம்வேறுறுஞ்
செல்விபாவனைகேடில * சமந்தம
மாள்வினைத்தொகையானையுமனதியே
வாள்வினைத்துயர்வாழ்வினைநல்குமே. (௯)

நற்றவத்தினைநற்றருமத்தினை
முற்றியப்பயன்முன்னுறுங்காலமே
மற்றுநேரின்மணிகன்னிவார்புனல்
பெற்றுமுத்திப்பயனைப்பெறுவரால். (௧௰)

கொடியதீவினைகுன்றெனவீட்டினுங்
கடிதின்மாய்த்துக்கதியினைநல்குமாற
படிகொடீர்த்தம்படிபவரிப்பெயர்
நொடிவராயினொறுங்கும்வினைகளே. (௧௧)

---

* சமம்-மனவடக்கம். தமம் பொறியடக்கம். இவை மேலுங் கூறப்பட்டன.

உலக * பாவனியாயுயர்கங்கையே
விலகுநீர்மணிகன்னியின்மேன்மையை
யிலகவோருமற்றியாவரறிகுவார்
திலகமாமிதுதீர்த்தவரசனே. (சஉ)

அன்னதோணயந்தாசையினுன்மதத்
தன்னமார்ந்தித்தருக்கினிற்கோவதை
பின்னையாற்றிப்பிறங்கு † மிராகவன்
முன்னையப்பதியுற்றிவணுன்செயும். (சங)

பிரமசாரியொர்தீமைபெருங்கதி
ரிரவின்மாற்றியிலங்கருணல்கியே
வரமதீயுமணிகன்னிவண்புகழ்
பரவவல்லன்கொலாம்பரமேட்டியே. (சச)

நன்பகற்படிந்தாடிநயந்தவர்
வன்புறச்செயும்வல்வினையாவையு
மென்புமுற்றியதேனுமெரித்தரன்
றன்புரத்தினிற்சாரவளிக்குமே. (சரு)

ஆதிவாரமமையொடுகூடினி
னீதினஞ்செழுத்தேய்பதினாயிர
மோதினார்நின்றுலப்பறுதீவினை
ணாதிகாதனுலகிற்களிப்பரே. (சசு)

அயனமாதப்பிறப்பருத்தோதய
நயமகோதயநல் ‡ லுபராகமார்
பயனுவாவிதிபாதமற்றின்னமு
முயருநாளினிலாடினரும்பரே. (சஎ)

தெளியுநீர்மணிகன்னியிற்றென்புலத்
துளியினார்க்குச்சிராத்தமுதவினோர்
களியினுலவர்காய்கதிர்மாமதி
யொளிசெய்காறுமின்புற்றுறைவார்களே. (சஅ)

அஞ்சமார்மணிகன்னியதன்கரைத்
துஞ்சுவார்செவியிற்பரன்றூமறை
நெஞ்சமாமஞ்செழுத்துநிகழ்த்திமா
லெஞ்சமுத்தியுமீவனிரங்கியே. (சகூ)

---

* உலகபாவனி உலகைச்சுத்தஞ்செய்பவள். பாவனம்-சுத்தம். † இராகவன்பதி-இராமசந்திரபுரம். ‡ உபராகம்-கிரகணம்.

பல்லுயிர்க்கிரங்கிப்பரஞ்சோதிதா
னெல்லைதீரருளாலிகதீவினை
யல்லறீர்தரவாதியுணித்ததா
மல்லலார்மலர்சூழ்மணிகன்னியே. (உ0)

வெய்யதீவினைவீட்டுங்கருத்தினே
ரையநீர்மணிகன்னியடைதலே
செய்யநல்லறமாயிதிற்சேர்கதை
யுய்யநல்குவனோர்ந்துணர்விரேய். (உக)

கங்கையாதிநதிகடூர்தீவினைச்
சங்கையாற்றவஞ்சார்ந்துகயிலையின்
மங்கைபாகனைநாமலரடி
யங்கையாற்றொழுதன்பினைறையுமால். (உஉ)

மாற்றில்வெவ்வினைமார்தர்களெம்மிடை
யாற்றமூழ்கியவைவிடுதேசுவா
ரூற்றமார்வினைக்குள்ளுருநாவகை
யேற்றதோர்பரிகாரமியம்பென. (உ௩)

ஆக்கமன்றுயிர்க்கன்பினருளுவீர்
வாக்கினனமைவழங்குதுகேணமினீர்
தேகதென்டிரைநதெனைட்டறநீரமமற
ராக்குயேதவனப்பதமோனரும்பய. (உ௪)

தீங்குதீர்கமலாலயத்தென்றிசை
யோங்குநம்முருவாயுயரப்பதி
தாங்குமேன்மையுஞ்சாற்றரிதாகுமா
லாங்குநன்மணிகனனியலநதுமே. (உ௫)

பாவகானகம்பற்றியெரித்திடுந்
தாவமாமணிகன்னியிறசார்நதுநீர்
மேவவுல்வினைவோறும்மிண்ணைவர்த்
காவலாஞ்சிவராத்திரியாடவே. (உ௬)

மாகமார்சிவராத்திரிமான்முதன்
மாகமார்தருவானவருச்சியிற்
றூகமாயதிற்சார்ந்துபடிவர்தந்
தாகமார்தமதாக்கந்தழைக்கவே. (உ௭)

தன்மையார்சிவராத்திரிகாதினீர்
புன்மைதீரப்புணர்ந்துபடிந்துநீங்
கின்மையாநல்லலக்குமினென்றுபூம்
பொன்மையார்சடைப்புண்ணியன்போயினான். (உ௮)

தெய்வநாயகன்செப்பியவாய்மொழி
யுய்வதாமெனவோகையொடேகியே
சைவமாமணர்தங்குமறைவனஞ்
செய்வதோர்ந்துடன்சென்றநதிக்ளே. (௨௯)

மணித்தொகைச்சுடர்மாளிகைவானமு
மணித்தெனப்படர்ந்தங்கவர்க்கேணியாய்ப்
பிணித்தகட்டினராய்ப்பெருமானடிக்
கெணித்தருத்துணரீயவிலங்குமே. (௩௦)

வளத்தினார்ந்தமறைவனங்கண்ணுற்
றுளத்தினார்களியுற்றுலகோம்பிநங்
களத்தினார்விடக்கண்ணுதன்முன்மலர்த்
தளத்தினார்மணிகன்னியைச்சார்ந்தவே. (௩௧)

சிவநிசிப்பகற்சேர்ந்துயர்தீவினை
பவமறப்படிந்தாடிப்பரமனை
நவமலர்க்கழல்போற்றிநயந்துசூழ்ந்
தவமகற்றியலங்கியடைந்தவே. (௩௨)

அம்பிகாபதியாற்றுமகநாண்முத
னம்பினார்சிவராத்திரிநாடொறுந்
தும்பிசூழ்மணிகன்னிதுளைந்துபூங்
கொம்பினோடரற்போற்றிக்குலவுமே. (௩௩)

நாவிநாறுநனைமணிகன்னியா
மாவிமேன்மையறிந்துயர்கங்கையு
மேவிநாடொறுமூழ்கிவினையெலா
மோவியுச்சியுலகம்புரக்குமே. (௩௪)

அடுக்குமூவுலகாவியளித்தருள்
கொடுக்குமேன்மை*க்குலநதிதீவினை
விடுக்குமாறுவிழைந்தனவேலதன்
னெடுக்குமேன்மைசொலற்கெளிதாகுமோ. (௩௫)

தானயோகந்தவமுதலாயின
வூனமித்தடம்போலவொழித்திடா
வானமேன்மையறிந்தவரம்புயத்
தேனனாமணிகன்னியைச்சேர்கவே. (௩௬)

---

* குலநதி-கங்கை, யமுனை முதலிய நதிகள்.

மறைவனத்தமகிழ்ந்தவரதனு
மிறைவன்முன்மணிகன்னியினேய்ந்திடார்
நறைசெய்கங்கைநயந்துபடியினுங்
கறையறார்பயன்கண்டுகளியுறார். (௩௭)

ஆகையான்மணிகன்னிமுன்னாடியே
தோகைபாகற்றொழுதபின்கங்கையி
னோசையாறவுறநிடுநற்பயன்
வாகைவேற்கைமதிக்குடைமன்னனே. (௩௮)

வாசமார்மணிகன்னியில்வாயிதி
சாசமொன்றிலன்கௌண்டின்னியம்
பேசுகோத்திரம்பெற்றவன்*கேரள
தேசமன்னியருமறைதேர்ந்துளான். (௩௯)

திரிபுராரியெனப்பெயர்சேர்ந்தவ
னரியகங்கையடைவதற்கெண்ணியே
புரியுஞ்சாரும்பொருப்புநதிகளுஞ்
சரியும்போய்ப்†புருடோத்தமஞ்சார்ந்தனன். (௪0)

ஆங்குமேவுமளக்கரின்மூழ்கியே
தாங்குமாழியினடிசார்ந்துபோ
யோங்குகாசியுறப்படர்வானொரு
வாங்குநுண்ணிடைவஞ்சியைக்கண்டனன். (௪௧)

கண்டனோர்ந்துகனங்குழையாரைநீ
யெண்ணியேகுவதெங்கெனவீர்ந்திருண்
மண்ணியார்மணிகன்னிமறைசையி
னண்ணியாடயமுனையென்றுமே. (௪௨)

அன்னவாறறியந்தணயாரைநீ
யென்னகாரணமேகுவதென்னவென்
‡ முன்னமார்தருகங்கையின்மூழ்கிவான்
மன்னவென்னமறுத்துவழங்குவாள். (௪௩)

தெள்ளுநீர்ச்செழுங்கங்கையைத்தேடியே
யுள்ளுநீயுணரோங்குமறைவன
நள்ளுமாமணிகன்னிநயந்தருட்
கொள்ளுமாறுகுறித்§தவளேகினாள். (௪௪)

---

* கேரளதேசம்-சேரதேசம். † புருடோத்தமம்-ஓர் விஷ்ணுதலம். அது சகநாதம் எனவும் பெயர்பெறும். ‡ முன்னம்-குறிப்பு. § அவளென்றது கங்கையை.

நீயுமேகிநிறைமணிகன்னியிற்
றோயுமாறுசெயிற்றுயர்தீர்த்தருள்
வாயுமின்பமுமற்றுயிக்கங்கையி
னேயுமன்புளதேற்பின்னெழுதியால். (௪௫)

அன்றியேகினையேலவட்கண்டிடா
யென்றுகூறவுமேகினன்காசியிற்
சென்றுசங்கையைத்தேடியுங்காண்கிலன்
கன்றுநெஞ்சினனுட்கழிகாலமே. (௪௬)

தேடியல்லற்செறிந்துபன்னுட்செல
வாடியோர்தருநீழலின்வைகியே
யூடியூழ்வினையோர்ந்தொருகாவுள
நாடியின்னனவிற்றுகின்றனரோ. (௪௭)

செறியுமூன்றெழித்தாவிதிகைத்தற
மறியுமாறுமலைகளுங்கானமு
மெறியுநீர்நதியெங்கணுநீந்தியும்
பொறியிலேன்றிருக்கங்கைபொருந்திலேன். (௪௮)

கூற்றமன்னகொடுவினைமுற்பிறப்
பாற்றலாலறிவற்றவளியனே
னேற்றசானகியெய்துகிலேனெனுந்
தேற்றமோவித்திரிந்துளந்தேம்பலும். (௪௯)

வெளியினின்றொருவானரிவிரகிலா
யெளிய*வெங்கையமுனையிசைத்தசொற்
றெளிவிலாதுமறுத்தவட்சேர்ந்தவெங்
களியிற்கங்கையைக்காண்கிலைகண்ணினே. (௫௦)

பாரமீர்தருகங்கையும்பல்வினை
யீரவேமணிகன்னியினேகுவாள்
வாரமாகவவ்வாவியுற்றோர்க்கலா
தாரவேபயன்கங்கையளித்திடாள். (௫௧)

ஈதுகொண்டுமனறவனமெய்தியே
போதருசூழ்மணிகன்னிப்புனல்படிந்
தோதுமாமறையும்பர்கடம்பிரான்
மாதுபாகனைவாழ்த்திவணங்கியே. (௫௨)

---

* எங்கை-என்றங்கை. கங்கையே வாணியாய் வந்தமையின, யமுனை யை எங்கை என்றதென்க. ஈண்டுக் கங்கை தன்னைப் பிறள்போல வைத்துக் கூறுதலின், இது தன்மைக்கட்படர்க்கை வந்து மயங்கிய இடவழுவமைதி

மீண்டுவந்தவிரும்புதிகங்கையேற்
காண்டியென் றுகரந்ததானென்றென
வாண்டுநின் றுமெழுந்துயரந்தணன்
றூண்டுசோதிமறைவனந்துன்னினான். (ருக)

உருவெலாமறையாயுயர்ந்தோங்கியே
பருவமார்பொருளென் றும்பரப்பிய
திருவமார்பிரண்டுதிளைத்தபின்
மருவினான்மலர்வாய்மணிகன்னியே. (ருச)

சாற்றுநூன்முறையாடிந்தணந்தவர்ப்
போற்றுமாறுசிராத்தம்புரிந்துபி
னேற்றுவார்கொடியெம்பெருமானிரு
சேற்றுருமலர்ச்சேவடிபோற்றினான். (ருரு)

தூயவப்பதிவைகியுட்டேய்மையராய்ப்
பாயவேதநதிபடர்கோடிநன்
காயவேதவமிர்தமவைபடிந்
தேயவேகினனுத்தாதெண்ணியே. (ருசு)

ஞானமேதருகாசியினண்ணியின்
பானசானவிகண்டதிலாடினான்
வானமாமணிகன்னிமறைவனத
தானநேர்வதுசாற்றுதற்கில்லையே. (ருஎ)

வேறு.

என்னப்புகழ்ந்தேகினனுதலினெய்தவேண்டிற்
றன்னெப்பறுசானவிமுன்மணிகன்னிசாரின்
முன்னப்பயனெய்துவ * ரன்றினர்மோகவாற்ரு
லின்னற்படுமாவியிதன்பயனீறுருதே. (ருஅ)

பேயுந்திருவாகியபேறுறப்பெய்துமுத்தி
வாயுமணிகன்னியினெண்புகழ்வாயினவா
லேயுந்திறமோகசைகொண்டிசைவண்டுகிண்டிப்
பாயும்பணிமாலைகிடந்துபடர்ந்ததோளாய். (ருக)

கங்கையாதிபாவமோசனச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,உசக.

* அன்றினர்-(இதற்கு) மறுதலைப்பட்டவர்.

# பிசாசமோசனச்சருக்கம்.

ஊறுதீங்கனியூற்றியதேறலினிலவாம்
பேறுசால்கதைகுழைதரப்பேசியபெரியோய்
வீறுபேய்கதிமேவியதுரையெனவிளம்ப
மாறுதீர்கதைகேளெனவழங்குவன்மறையோன். (க)

பெருமையாலுயர்ந்தோங்கியபேற்றினைப்பெறுவா
னொருமையாலுறுங்குறுமுனியிட்டனைவேறுணர்க்கு
மருமையார்வளனாயதென்னாட்டிடையமர்வோன்
கருணைமேவியகௌசிகன்மறையெலாங்கற்றோன். (உ)

புடவிதாங்கராமணிவளைமுத்தொடும்புரட்டுந்
தடவுநீர்த்திரைச்சானவிபடிவதற்கெழுந்தே
யடவிமாமலையருஞ்சடங்கடந்தவிழ்செழும்பூ
மடலினூறியதேன்பொழிகாசியின்மருவி. (௩)

கற்பொருந்திரைக்கங்கையிற்படிந்தரன்கமலப்
பொற்பதம்பணிந்தெழுந்துதென்புலத்தவர்பொலிய
வெற்பகக்கயைச்சிராத்தமுமளித்து * வீவதநீ
ரற்புறத்தழீஇயகன்றனன்விந்தியமடைந்தான். (௪)

நாவடித்திடவஞ்செழுத்தமலனன்னாமங்
காவடித்தடந்தோளுறக்காசியிற்பரமன்
சேவடித்துணைசிந்தையிற்றிகழ்தரச்செல்வான்
றூவடித்தலந்தளர்ந்திடவதிர்த்தனதடுத்தே. (௫)

அழிபசிக்கயர்பேயிரண்டவனுயிருந்த
விழிசுழற்றுபுமேவினவிமலனன்னாமம்
பழியறப்பயில்பண்பினாற்பனவனதருகே
யுழிதரப்படராதுசேணிடையிடத்தற்றே. (௬)

ஆய்ந்தநூனெறியந்தணகேளிஃ † தமலன்
வாய்ந்தநாமநீயுரைப்பனநின்னையாம்வலிதல்
காய்ந்தகற்றினகடற்றிடையாமுணக்கரைந்து
மாய்ந்தவந்தணரெண்ணிலார்க்கீபெருவரத்தாய். (௭)

* வீவுதம-காவடி. † நீயுரைப்பனவாகிய அமலன்னாமங்களே நின்னை யாம்வலிதலைக்காய்ந்தகற்றின. வலிதல்-வலாற்காரஞ் செய்தல்.

நின்னடித்தலஞ்சரணமாயடைந்தனநீயே
யின்னலுற்றிடும்பேய்ப்பிறப்பகற்றியேயின்ப
நன்னர்நற்சநிவழங்குதிகருணையார்கல்லோர்
தன்னையுற்றவர்க்கின்பலாற்றுன்புறத்தகுமோ. (அ)

திருகுவெஞ்சினப்பேயிவைகூறலுந்தெரிந்தே
யுருகுநெஞ்சினனாய்த்துயரொழிப்பதற்கூறிப்
பருகுதேனனமென்மொழியாலறம்பயிலாத்
திருவிலீரியான்செய்வதென்செப்புவீரெனலும். (கூ)

வருந்துமெங்களுக்கிரங்கிநீயூர்செலன்மாற்றிப்
பொருந்துகாசியேமுதலியபதியினெம்பொருட்டாத்
திருந்துதானமுஞ்சிராத்தமுமுதலியசெய்தே
மருந்துபோற்றுயர்மாற்றுதியெனவருள்வழுக்கால். (௧0)

நீதியாயிதுவென்றுநீரலகையாய்நிகழ்தற்
காதிகாரணமேதுரையாடுமினென்ன
*வோதிமேவலுமொன்றியான்காமரூபத்துச்
சோதிவேதியர்குலத்திடைத்தோன்றிமுற்றொடக்கால். (கக)

† ஓர்த்தொழிற்குலத்தரசனையடைந்தவனீந்த
கூர்த்தவெவ்வினைப்பொருண்மறைவிலையினாற்குடும்ப
மார்த்திமாய்ந்தபினலகையாய்ப்பல்லுயிரழித்தே
மூர்த்தமுற்றவர்நடுக்குறவெங்கணுமுனிந்தே. (௧௨)

திரிந்தயர்ந்தனன்சரணநின்னடியெனத்தெளிவாற்
பரிந்துசாற்றலுமற்றதியானொருபார்ப்பான்
விரிந்தவேதமுமுணர்ந்தனன்கலிங்கத்துயிறைவாற்
புரிந்துவேசையர்போகமார்புணர்ச்சியேபொருளாய். (௧௩)

‡ அடிகளாக்கியபொருளெலாமழித்தபின்னகமுங்
குடிவழிப்படுநிலைமையும்விலைசெய்துகொடுத்தே
மிடியுறங்கிழக்குரவரைத்துயருறவிடுத்துப்
படியின்மிக்கநற்காசியிற்பயிக்கமேற்றயின்றேன். (௧௪)

---

* பஞ்சாக்ஷரசிரவணத்தினாலே பூர்வஞானமுண்டாதலும். காமரூபம் ஓர் தேயம். † ஓர்சூத்திரராசாவையடைந்து நான்பெற்றுக்கொண்ட துர்த்தானப்பொருளினாலும், வேதத்தை விலைக்குவிற்றமையினாலும், வேதத்தை வேதனத்தின்பொருட்டுச்சொன்னமையினாலும்,குடும்பசவாக்ஷணைபண்ணி ‡ அடிகளாக்கியபொருள் என்றது பிராயச்சித்தமாகிய இயங்கியற்பொருளை. அகமுங்குடிவழிப்படுநிலைமையும் என்றது பிராயச்சித்தமாகிய நிலையியற்பொருளை. பயிக்கம்-பிச்சை.

தஞ்சகல்லிடமளித்தவன் றன்மனைத்துயின்று
வஞ்சமாயிரவனைவருந்துயிலுறமகிழ்ந்தே
கஞ்சமாமெனவிலவிடையர்தணனூசத்
தெஞ்சவோர்சிலைதலையினிட்டில்லிடைநுழைந்தேன். (கரு)

இல்லினன் ளுறு மணிபணியிரணியந்துக
புல்லிமெல்லெனப்புறப்படவந்நகர்புரப்பா
ரெல்லியிற்கவர்கள்வனென்றடிதுரந்தெதிர்ந்தே
வல்லியிற்பிணித்தரிந்தனர்சிரத்தினைவாளால். (கசு)

வேதியக்கொலைபொருட்களவாயவெவ்வினையாற்
கோதியற்றிடுமலகையாயுலகெலாங்குலைந்தே
னேதியற்றியுமருளுதிசரணுனக்கென்னத்
தாதியற்றபூங்காசியிற்சானவிசார்ந்தான். (கஎ)

தறுகணூர்கடிப்பிறப்பற*மனத்தொழில்சாற்றி
மறுகுதெண்டிரைப்படிந்துநீர்ச்சிராத்தமும்வழங்கிக்
குறுகிவிச்சுவநாதனைப்பணிந்துபோய்க்கொடுமை
தெறுகவென்னவப்படிபிரயாகையிற்செய்தே. (கஅ)

சேமமாகியகயையினிற்சென்றுமுத்தினத்திற்
காமருபதேசத்துறுங்† கணங்கதியுறவே
காமமார்தருசிராத்தமதளித்திடநவைதீர்ந்
தேமமார்தருதேவனுய்ப்பணிபலவேய்ந்தே. (ககூ)

நோற்றுமேம்படுங்கோசிகனருகுறீஇநொடிநீ
யாற்றுநல்வினையாற்கடிப்பிறப்பறவமரத்
தோற்றமாயிருந்துறக்கத்துப்புகுவனின்றூய்மை
சாற்றுமாறதே ‡ யென்செய்கேன்றழையெனச்சார்ந்தான். (உ0)

மற்றநாட்கலங்கத்துறுமமேயுயர்வாழ்வு
பெற்றமர்ந்திடவாற்றினன்சிராத்தமும்பின்னு
மற்றதில்லையப்பிறப்பெனவயர்வுறவவன்பா
லுற்றுநீயிதுகேளெனப்பேய்கனிந்துரைக்கும். (உக)

மறையுணர்ந்தவன்கொலைபொருட்களவுவல்வதையாங்
கறைவலிந்தனகயையிடைக்கழிந்திடாகமலத்
திறைபணிந்திடுமறைவனந்தென்றிசையிலையந்தே
யுறையுமன்னதன்பெருமையோவுலப்பிலவாமால். (உஉ)

* மனத்தொழில்-சங்கற்பம். † கணம்-பிசாசம். ஏமம்-பொன். அஃது ஈண்டாகுபெயராய்ப் பொன்னுலாகிய தேவலோகத்தை யுணர்த்திற்று.
‡ என்ன பிரதியுபகாரஞ்செய்வேன், க்ஷேமமாயிருவென்று.

மாளாதுயரப்பதிபீசன்முன் வணங்கி
மூளிவன்டெழுப்பொலிமணிகள் விழின்மூழ்கி
யாளியார்தருசிராத்தகீயளித்திடினன்றே
கூளிவெவ்வினைக்குழாமெலாமழிக்குமென்குலைந்தே. (உங)

ஆய்ந்தகூறியதிதனைனுமலகைதன்மொழிகொண்
டேய்ந்துமாமறைவனத்தினையிறைஞ்சியேயளிகள்
பாய்ந்துசூழ்தரப்பருமுகையவிழ்மணிசன்னி
தோய்ந்துபேய்க்கெனச்சிராத்தமுமியற்றினன்றொல்லோன். (உச)

ஆற்றியேயெழுந்தமலனதடிமலரன்பிற்
போற்றிமாமறைப்புனிதனிபேயுறும்புன்மை
மாற்றிநற்கதிவழங்குதியென்றுமுன்வணங்கப்
பாற்றினன்கடிக்கதியினைப்பண்ணவர்பெருமான். (உரு)

வெய்யபேய்க்கதியொழிதலும்விமானமேன்மகுடம்
பையராமணிப்பணிபலபரித்போலவயங்கத்
தையலார்மணிக்கவரிசூழ்நீழலிற்றயங்கி
யையனாகியகௌசிகன்றனடியடைந்தே. (உசு)

பிரிவருந்துயர்ப்பிறப்பினைநீக்கியேபெறுதற்
கரியநற்பதமளித்தனையதற்கியானாற்றும்
பரிசதொன்றுளதோவுலவாத்திருப்படைத்திங்
குரியநின்கிளைசூழ்தரப்பொலிதியாலுயர்ந்தோய். (உஎ)

ஈறிலின்பமார்கயிலையினெய்துதற்கீசன்
கூறிநற்கணத்தவர்விரைவுற்றனர்கொடித்தே
ரேறியேகுவனெனப்பணிந்திடர்ப்பிறப்பின்ன
லாறியேகியேகயிலையிலின்பமுற்றமர்ந்தான். (உஅ)

வணங்கியன்னவன்போயபின்கௌசிகன்மகிழ்ந்தே
யணங்குறாறியவேததீர்த்தத்திடையாடி
மணங்கொள்கோடியிற்படிந்தபின்மணிசன்னிமகிழ்ந்தே
யிணங்குமல்லல்வேதாவயிர்தத்தினுமெய்தி. (உகூ)

ஈரவன்பினுன்மறைவனத்தீசனைப்போற்றி
வாரமார்தரவாழ்த்தியேகௌசிகன்மனத்துச்
சாரமெய்யருள்விடைகொண்டுதன்பதிசார்ந்தா
னாரமார்மணிசன்னிதன்பெருமைசெஞ்சடைத்தே. (கூ0)

* நிணக்கொழுஞ்சேறு, வாண்மீ, னறுமயிர்பாசி, நெற்றி
வணக்குவெண்கலிங்கப்பேன, மலிந்தெழுகவந்தம்வன்மீன்,
சணைக்கிறேராணை,ஈங்கம்பாகம்புட்,கறையேநீராய்,
பிணக்கரை,பொருமாவேகப்பெருநதிபெருகிற்றன்றே. (உ௯)

வேறு.

மாய்ந்தவெம்படைமயக்கிணைக்காண்டலுமருண்டே
காந்துவெஞ்சினங்கதுவியேகட்பொறிகளுல
வேய்ந்துகாலனுமிருதருவுமிருஞ்சிலைகோலிந்
தேய்ந்துறுங்கணைசிதறினர்துவையெலாமறைய. (௩0)

வெங்கணற்றிரட்சொரிவனயிடைந்தெதிரடையார்
பங்கமுற்றிடப்படர்வனபற்பலவாய
கங்கபத்திரக்கணைசொரிந்தடர்த்திடக்கணையிற்
பொங்கனற்பொறிபூத்தனபூதங்கள்புழுங்க. (௩௧)

இரவிவெங்கதிரறவிருளொங்கணுமிடையப்
பரவுறுங்கணைப்பரப்பையுஞ்சேனையின்பரிவு
மரவவொண்கழற்கணைத்தொடுசாயமாகாளன்
மரபினுய்ந்தெழுங்குறுநகைமலர்தரமதித்தே. (௩௨)

பெருகனற்படுவைவெனப்பிறங்குகோலனேறு
மொருகணைத்தினிற்கரித்தவையொழித்தயருலகத்
திருளகற்றிடவிலகியதிருவருமுனைந்தே
செருவிளைப்பதற்கெதிர்ந்துமாகாளன்மேற்செயிர்த்தே. (௩௩)

கடுவுயிர்த்திடுங்காற்கணைவாசவன்கணையும்
வடுவுறத்தொடவுங்கரித்தவனவைமாற்றத்
தொடுகடற்கிடந்தவன்கணையயன்கணைதுரப்ப
முடுகமற்றவையங்கையாற்பற்றினன்முறித்தான். (௩௪)

---

* நிணஞ்சேறாகவும், படைக்கலங்கள் மறசங்களாகவும், அற்றமயிர் பாசியாகவும, வீரர் நெற்றியிற்சுற்றிய வெண்மையாகிய தலைப்பாகை நுரையாகவும், உடற்குறைகள் முதலைகளாகவும், தேர்கள் நீராணைகளாகவும், பருந்துகளும் காகங்களும் வண்டுகளாகவும், இரத்தம் நீராகவும், பிணமாகிய கரையோடு மோதும் மிக்கவேகத்தையுடைய பெரியநதியானது பிரவாகித்ததென்க. நிணங்கொழுஞ்சேறு எனற்பாலது நிணக்கொழுஞ்சேறென விகாரமாயிற்று. வாள்-படைக்கலப்பொது. அறுமயிர் வினைத்தொகை. நெற்றி-உச்சி. கலிங்கம்-வஸ்திரம். பேனம்-நுரை. நீராணை-நீரில்வாழும்யானை. இதனை ஹ்ங்கில் என இக்காலத்தார்கூறுப. புள்-வண்டு. கறை-இரத்தம்.

நடுங்கியேயுலைகடற்கிடைவருத்திரனமத்
தொடுங்*துணைப்பாசுபதாத்திரந்தொடவே
யொடுங்கிமெய்ப்பரிவோடென்வணங்கியேயுரவோ
னெடுங்கையாற்றரிக்கமைந்தானுருவெனநின்றான். (௩௫)

திருந்தமார்†விளையாட்டலமென்றெதிர்நின்று
மிருந்தவோடுயர்காலனென்றிவர்தமைவெற்பிற்
பெருத்ததோள்களாற்பிடித்தணிபிறங்குதோர்பீடத்
வருத்தமார்தரப்பிணித்தடனே‡மறலியைமதித்தே. (௩௬)

கடிதினேகிடக்கலந்தெதிர்நடுவனுங்கலங்கிப்
படியின்மேற்பணிந்தருந்தவிர்யாடுளமபதைத்தே
யடியனேன்பிழைபொறுத்தியுய்பொருத்தவராறவங்
கொடியசெய்கையுஞ்சமியெனத்துதியொடுங்குழைந்தான். (௩௭)

தருமனன்பினைநாடியேசார்ந்தமாகாளன்
வெருவலோம்புதிபொறுத்தனமின்றெருழின்மேயார்
கருமமாற்றுதல்கடனெனவிட்டிவர்கட்டுப்
பெருமதிக்கெனவிடுத்தவர்தமையருட்பெரியோன். (௩௮)

ஏதகிங்கினைபோரனையீர்ந்தருளென்னைப்
பாததாமரையணிந்தவன்பரிவொடும்பார்வா
ருதவாங்கவனவிற்றருந்தொடியவெம்பாயக்
கோதினுனுறுவாயிருமறநிலைதறிபானை. (௩௯)

எரிவிரிக்கெனைத்தெறுநரகிறுத்திறைவெய்தற்
குரியனிவ்விதுவொதிராதந்தமுறைத்தா
னரியயன்றொழுமாறுருவாயகீயமைதுப்
பரிவுறுந்தரமிலனெனப்பன்னவனுரையபானை. (௪௦)

கருணையேயுருவாகியசண்முகற்பெருமா
னருணயந்தனமொழியிடந்திதிபணைத்தே
னிருணெருங்கியதீவினைக்கொடியனேயெனினும்
பொருணிரம்பியவறம்புரிந்தானதுபுரிசீ. (௪௧)

வடவைவனையெனத்தீவினைத்திரளெலாமாய்க்குஞ்
சடன்மலிந்தொளிர்மறைவணங்கமழ்மணிகண்ணித்
தடமழூர்த்தியேபடிந்தனன்றடிந்தனன்றவரு
யுடன்மிலைந்தனசித்திரகுத்தனீதுணைரான். (௪௨)

---

* துணைப்பாசுபதாத்திரம்-இரண்டுசிவப்படைக்கலம். † விளையாட்டலமென்று-விளையாட்டினியமையுமென்று. அலம்-போதும். ‡ மறலியை மதித்தே கடிதினேகிட, என வருஞ்செய்யுண்முதலோடுகூட்டி - யமனைத் தேடி யமபுரத்தினுள்ளே விரைந்துசெல்ல எனப் பொருள்கொள்க.

ஆயபேரறமவர்க்குளதனைத்திநீயெனனு
மாயமீதெனச்சித்திரகுத்தனோர்வகுப்பான்
மேயவெம்புலிவெருட்சியாலுயிர்பெறவேண்டித்
தோயமூழ்கினன்றீர்த்தமீதென்றனந்துணியான். (௪௩)

புந்தியுற்றவாதரவினாற்புண்ணியதீர்த்த
முந்துமற்பொடுபடிந்தவர்க்குயருலகுளசாஞ்
சிந்துமுற்படுதீவினையென்றுசீர்போற்றி
வந்துசொற்றிடநமனெதிர்வழங்குமாகாளன். (௪௪)

ஆற்றுநற்றவமகங்கொடைமுதலியவறங்க
டேற்றமற்றவேற்பயன்படாவென்பதுதெளிவே
தோற்றமாரறிவுண்மையாலின்மையாற்றுயர்தீ
ரேற்றவாதரவுற்றவரற்றவரேனும். (௪௫)

தத்துநீர்மணிகன்னியிற்படிந்தவர்தமைத்தே
முத்தராவதுநிச்சயமிற்றைநான்முதலாப்
பத்தியான்மையலால்வினையாட்டினாற்படிந்தா
லெத்திறத்தினுமணிகன்னியிலங்குநீர்படிந்தார். (௪௬)

கொடியபாதகங்கூடினராயினுங்குழான்
வடிவமாவதற்கையமின்றெனவுளமதித்தே
நொடியினுங்கவற்கொணர்கெனநோக்கியேநடுவன்
கடியசோரனைமுன்றரக்கண்டுமாகாளன். (௪௭)

வேய்ந்தபொன்மணிவிளங்கொளிவிமானமீதேற்றி
வாய்ந்தசாமரைவயங்குறவைத்தனனேக
வேய்ந்தபின்பணிந்திரந்திடுநடுவனுக்கிரங்கி
மாய்ந்தவெம்படையுய்ந்திடநல்வரம்வழங்கி. (௪௮)

வேறு.

பெருவிருப்பானெடுந்தூரம்பின்னேகுமறலியைநீபெயர்ந்துநீங்கி
வெருவுறவேயுறைதியெனவிடைகொடுபோய்மணியிடைமேவிமேன்மை
மருவுமணிகன்னியினைவாழ்த்தியதன்புகழ்பரவிமகிழ்ந்தான்வாசத்
திருவுலவுகயிலையினைச்சேர்ந்துதிறன்மாகாளன்சேனையோடும். (௪௯)

ஊற்றிருந்தபெருங்கருணையொழுக்கியநோக்கருளியுமையோடுகூட
வீற்றிருந்தபெருமானையடைந்தமலவிவண்சோரன்மேயானென்னாப்
போற்றியுரைசெயக்கருணைபுரிந்துபரஞானமுறப்பொழிந்தஞ்ஞான
மாற்றியருளுருவளித்துவரம்பறுமின்புறுவாழ்வுவழங்கினனே. (௫0)

மழைவருத்தங்களிவறுமைமடிமுதற்றீக்குணஞ்சிறிதுமன்றாகித், தீமையறத்தின்மலிந்தொழுக்கஞ்சால்புதலைவிருந்துபுறந்தருதலாதி,விழைவுறுத்துங்குணம்பொலிந்துவெறுக்கையிரப்பவர்முகப்பமேவிப்பாவக், குழைவகற்றிக்கொலையொழித்துக்குலவுதிருப்பெருகுவளங்கொழித்துமேவும்.

மனைகடொறும்புனைவேள்விமதலைமகார்மணந்துறக்கமானவேய்ந்து
நினைதருமின்புறத்தருமநிறைந்தமைச்சர்முறைலாயநெறியோர்சூழக்
கனைதருநீர்க்கடற்புடவிகளிபொங்கக்குளிர்ந்தாங்கதிர்கள்சூழ்ந்து
வனையுமரியணைமீதுவசிட்டன்முதற்றவர்சூழவைகுநாளில். (அ)

திருந்தியநூற்றுறைபடிந்துதெளியுமவர்புறஞ்சூழத்திருவார்வேந்தன்
பொருந்தியபேரவையினிடைப்புகுந்தொருபூசுரனொருநாட்புகழான்மிக்
கோய்,பெருந்தகையாகியநகுடன்பேசுமொழியினைக்குறைப்பப்பெரிதுதூர
ம் பொருந்தியநின்பாலடைந்தேன்வகுத்தமுறைகேட்டியெனுவழங்கலுற்றான்
இறவுநீக்கியுலகளித்தபுரூரவாவெனும்புகழோன்புதல்வன்பூந்தேன்
மதுவூற்றுந்தொடையாயுரத்தவனித்தோனகுடனெனவயங்குமேலோன்
விதுவாற்றுநிழற்கவிகைவிறல்வேந்தனறந்தழையுமிக்கதேரா
னதுமாற்றமிதுவாக்குமாறுமெனவறிந்தெனுவருள்வானன்றே. (௯)

அலர்தலைமாநிலமளிக்கமகனுயயாதிதனையமைந்தத்தேவர்
மலர்தருவானளிப்பனெனமனந்தமைந்துப்பரிமேதமகமோர்நூறு
நலமலையாதியற்றவுயர்நானிலத்துவேந்தர்*கரநாடிவேந்தர்
புலநிலையாரிடைத்தூதுபோக்கவியானினைக்குறைப்பான்புகுந்தேனன்றே. ()

வயப்பரிமாமகமியற்றமணிமாழைமுதற்பொருளும்வழங்கிநீயு, நயப்பொடுமாங்கெழுதியெனநவின்றனனென்றுரையாடநகைமீக்கூரப், பயப்பறுமிவ்வுரைநகுடன்வெளிற்றைவெளிப்படுத்தவன்பணித்தமாற்றம், வியப்புறுமாறிறும்பூதுவிளைக்குமெனப்பெருநகையால்விளம்புகின்றான். (௧0)

மின்னுமெனதழற்கதிர்வேலுளதாகத்தன்மகனைவேலைசூழ்ந்த
விந்நிலமாளுவதொன்றோவிந்திரனுமுளனுதயாக்கையோடும்
பொன்னுலகந்தாளுளும்புரிவொன்றோவதுகிடக்கப்புரியும்வேள்விக்
கென்னதுபாற்கரங்கேட்குமிதுசாலவிம்மிதத்தையிழைக்குமன்றே. (௧௧)

போதமறும்பூசுரனீயாதலினுலகந்தையுறப்புகன்றமாற்றத்
தேதமுணராதுரைத்தாய்யாகமுநானுளனுகவியலாதும்பர்
மீதுலகுமுறுதுறினும்வீழ்த்திடுவன்சதமகத்தால்விண்ணமானிற்
பூதலமீதாயிரமும்புரிந்தாரேனுறுநரதியாப்புன்மைபூண்டான். (௧௨)

---

* கரம்-திறைப்பொருள். வேந்தர்-நெடுநிலவரசர். புலநிலையார்-குறுநிலவரசர்.

முன்னியலுநந்தகனைமுகநோக்கினனைக்கோறன்முறையன்றாகும்
பன்னியவுதாகையினாற்பயிலரசப்போலியிடைப்பரிவினேகித்
தன்னியனாட்டினைத்திறைநீதந்திலையேற்கவர்வனெனச்சாற்றுவேத
மின்னிலையாம்பிரமாணமெனினிழைத்தேபரிமேதமியம்புமாற்றால். (உ0)

தருநீழற்புரப்பதுவுஞ்சத்தியமேயானரசத்தன்மைமேவி
னொருநீர்மையிதுதானுமுயர்ந்தகுடிப்பிறந்தநலமுண்மையாயிற்
றிருநீர்மைமகமுழுதுஞ்செய்யாதங்கெனைநீக்கித்திகழ்ந்துதேவாய்க்
குருநீலமுடிசூடிக்குலவுகவிங்கிதுவிரதக்கொள்கையென்றே. (உக)

சாற்றிவிடுத்திடத்தூதன்றனேகித்தன்னிறைபாற்சரணமீது
போற்றியுரைத்திடமகிழ்ந்துபுரிவோடும்படவியினைப்புரக்குநாளிற்
கூற்றியல்வெம்படைசூழக்குளிருமிருட்படுமடவிகுறுகிவேட்டை
யாற்றிலங்கினமிரியவரணியத்துமுரணியற்றியமர்ந்துமேவி. (உஉ)

கலபமயிலினமாடக்களிதருவண்டினம்பாடக்கனகங்காசு
நிலவுமலரினந்தருவினிரைதுவமுழவருவிநிகரமேவக்
குலவுமரியினங்கரியின்மத்தகமுத்தினஞ்சிதறச்சுனிந்துதாவப்
பலகரியுமிகவிரியக்கரியநிறப்பல்லமிகப்பகைத்துச்சீற. (உங)

கண்டுமகிழ்ந்திடுமரசனோரிடையிற்களகளவென்றெழுந்தவோசை
கொண்டுசெவிப்புலனோக்கிக்குலவுதிசைப்பாலரொடுங்கூடித்தேவர்
மண்டுகணம்புடவியிடைவானகன்றுவருவதெனமதித்துமேவற்
குண்டொருகாரணமதனையுற்றறிவனெனத்தேறியுவப்பினோடும். (உச)

புங்கவர்தங்குழாத்தைமிகப்போற்றியருந்துதியாற்றிப்புடவிமீதே
யிங்கிவர்நீரனைவீருமெய்துதற்குக்காரணமேதிசையினென்ன
வங்கவரிங்கிவற்குரைப்பாரருட்பிரசாபதித்துவட்டாவளித்தமைந்தன்
றுங்கமறையோன்விசுவரூபனெனுமவனாவிதொலைத்தவாற்றால். (உரு)

பிரமகத்தியிந்திரனைப்பிணித்தலைப்பவவனெடுநாட்பிறங்கிமேவும்
வரமகற்றிமறைந்தனனாமதித்துலகமனைத்துமவன்வரவுகாணு
துரமிகுத்தவவுணர்தமக்குடைந்திடைந்தேமெங்குரவனுணர்ந்துவாடுந்
* தரமிரித்தற்கயமேதஞ்சதமாற்றுநகுடனையேதலைவனாக்கி. (உசா)

தானவரையழிப்பனெனச்சார்குரவனொடுதரணிசார்வாமோர்தி
யானமுறையீதெனவேயழகிதெனவிந்திரத்துய்முனனுமாய்ந்து
வானவர்நீர்வாசவனாயெனையணிக்கினசுரர்தமைவலிந்துசீறி
யூனமறவழித்துமக்கின்புறவளிப்பனாரன்வலியாலுயர்ந்தேனென்ன. (உஎ)

---

* தரம்-அச்சம்.

விற்றொழிலாற்சிறந்தனைநீயாயிடினுமகனூறும்வினைத்தார்க்கன்றிப்
பற்றுமகவானுயரும்பதமரிதாமுறுதியெனப்பணித்துத்தேவ
ருற்றுமகச்சாலையிடையுறைநகுடன்றனைநோக்கியுவர்நீர்வேலி
சுற்றுமுலகிடையுனைநேர்தோற்றமெவர்க்குளதாகுந்துணியினென்றே. ()

சீற்றமிகுந்திறன்மறப்போர்திகழ்மருவாருயிர்பருகுஞ்செருக்கார்செற்ற
மாற்றலடல்கொடையருள்சீர்வேள்வியறநெறியரசர்மாட்சியாதி
யேற்றகுணங்களினுயர்ந்தோயிந்திரனாயெமதுலகுக்கிறைவனாகி
மாற்றலர்தானவராவிமடித்தெமையுமளித்தியெனமகிழ்ந்துசொல்வான். ()

மகவான்றன்பதமெனக்குவழங்குதிரேலுமதருவார்வலியிற்பாதி
யிகவாதின்றளித்திடினீரதுவாய்ந்துபொருவலியாலிகலியேற்று
ருகமாயப்பொருசழித்தேயுமையளிப்பனெனவுரைப்பவுறுதியோடு
தகவாகுமெனத்தேவர்தமவலியிற்பாதிதனித்தனியேயீந்தார். (கூ0)

முழுவலிமுன்புளதோடுந்தேவர்பெருமொய்ம்பமர்ந்துமுருந்தன்போலத்
தழுவியதேசொடுவானத்தருமலருந்துந்துபியுந்தழைத்துச்சூடப்
பழுதறுமிந்திரதிருவிற்பணைத்துவிளங்கியநகுடன்பரிவிற்றேரும்
விழுமியதேவரைநோக்கிவிரைந்திதுநீர்புரிபுமெனவிளம்புகின்றான். (கூக)

இந்திரத்துய்முனனெனப்பெரெய்துமவன்றனைத்தேவிரிகலிச்சூழ்ந்தென்
றந்திரத்தினொடுமடுத்துத்தரணியிடைப்படுத்தவன்சீர்த்தனங்களாய
* மந்திரப்பொன்மணியாதிவாரியிவண்வருதிரெனமகிழ்ந்துபாரி
னந்தரத்தார்பெருஞ்சேனையயோத்தியினைவளைத்திடல்செய்தலைத்தநன்றே.

மூரிநெடுங்களிற்றரசன்விளைந்ததுநன்றெனக்குறியமூரன்மேவிப்
பாரியலுங்கரிபரிதேர்பதாதியெனுஞ்சாதுரங்கப்படையினோடுந்
தேரினெழுந்தமரரொடுஞ்செருவிளைத்தற்கெழுந்திருபாற்சேனைகூடிக்
காரினதிர்ந்திடுமயத்தின்கணஞ்சூழப்பெருஞ்சமர்கைகலந்ததன்றே. (கூச)

பருமவயப்பரிக்கணைப்புமருவியெனமதங்கலுழும்பணைக்கைவேழத்
தருமதிருமுழக்கொடுதேருருட்படுபேரொலியவயவருடற்றுமார்ப்புங்
கருவிமுகிற்கணமுழக்குங்கடலதிர்ப்புமவித்தெழுமேற்கதுவிச்சீறிப்
பொருவிறற்போர்புரிந்தலைப்பப்பூழிதிசையொடுவானம்புதைத்ததன்றே.

போர்த்ததுகள்பொருமறவருடல்பொழியுங்குருதியினாற்போகப்போரிற்
கூர்த்தகடும்பகழியயிற்கொழுங்கனல்சூழ்ந்திடக்கணையாற்குறைத்துமன்ன
ரீர்த்ததலைபலதாலக்கனியெனவிண்ணியங்கிவிழவிழைத்தபோரி
னார்த்தமரர்காராழியவடர்த்துத்தொடர்ந்திடநிலையாதழிந்தாரன்றே. (கூரு)

---

* மந்திரம்-அரசமாளிகை.

## வேறு.

வானவர்க்குடைந்தோடியசேனையின்மடிவுகண்டிடியேற்றிற்
கானகத்தெழுஞ்சிங்கவேறெனச்சிலைக்கமைழருமைழத்ததிர்த்தேய்ந்து
தேனளித்ததாரிந்திரத்தாய்முனன்றேவர்தந்திரட்சேனை
யீனமுற்றழிந்திரிதரவிரிகணையிலக்கறப்பொழிந்திட்டான். (ருசா)

எரியெனத்தெறுங்கொடுங்கணைபலபரந்திமையவரணியாக
மரிவுறத்துரந்தடிமுடிகரஞ்சிரமறுத்தொருறுந்திடவாற்றூர்
பரிபவத்தொடும்படியுறப்படிதரப்பார்த்தெழுதிசைப்பால
ரரியெனத்திகழரசன்மேற்சரம்பலவழுத்தினரடன்மிக்கார். (ரு.எ)

திக்கின்மேவியபாலர்தங்கணையினைச்சிதைத்திடவலன்சீற்ற
மிக்கடர்ந்தவர்தனித்தனியரசன்மேல்வெஞ்சரம்பலதூர்த்தார்
தொக்கவக்கணையனைத்தையுமறுத்தனன்றொடுகணையவர்மேனி
புக்கொளித்திடவநந்தமுமழையெனப்பொழிந்தனன்பொருவில்லான். ()

வெய்யவெங்கணையனைத்துமங்கவருடல்வெறுத்தறக்கிழித்தேகிப்
பையராவெனப்பாதலம்படர்ந்திடப்பனைத்தவர்படராரு
மையன்மேவிடவார்ந்தெழுகுருதியான்மலர்ந்தகிஞ்சுகம்போன்றே
செய்யமார்பொடுகரஞ்சிரந்தணிபடச்சிதைந்தனர்திறன்மிக்கார். (ருகூ)

வீந்தொழிந்தவரல்லவரிரிதரவிறன்மிகவெரின்மேவிக்
காய்ந்தடர்த்திடச்சரணெனநருடனைக்கடவுளருறக்கால
மாய்ந்தவன்சிலையாவமாசுகங்கசையணிந்தடற்கலிவெம்மா
வேய்ந்ததேர்மிசையிந்திரத்துய்முனன்மேலெழுந்தெதிர்த்திட்டான்.

எதிர்ந்தவேந்தர்களிருவருஞ்செருச்சினத்தெரிவிழியிணைதாவ
வதிர்ந்தடர்ந்தெதிர்விருத்திரனிந்திரனுமெனவரியேற்றின்
முதிர்ந்துவெம்புலிமுரட்கரியிரண்டெனமுடுகியசினங்கூர
வுதிர்ந்துதாரகையுறக்கணையுலப்பிலவுருமெனப்பொழிந்தார்த்தார். (சாக)

கறுவியங்கவரொருவரையொருவர்மேற்கதுவியேயுயிர்காய்வான்
குறுகிவெஞ்சமங்குவலயங்குலைந்திடக்கொடுங்கணைமழைதூவி
மறுகவான்றிசைமயங்கிடமறைத்தனர்வயத்திறல்வலியொப்பார்
நிறுவினருடல்கிழித்ததுமுணர்ந்திலர்நெடுஞ்செருநிலைநேர்ந்தே. (சாஉ)

வருணனிந்திரன்மாருதன்சமனிதிமன்னிசாசரன்வான்பே
ருருவவெங்கணைபிரமனாராயணனுயர்பெயர்க்கணையூழிற்
செருமலைந்துறவிடுத்தனர்திகைத்திலர்சிங்கவேறெனச்சீற்றத்
திருவருஞ்சமநிலைபெறவெலற்கரிதிவனையென்றிகல்கூர்ந்தே. (சாங)

நாகவேந்தெனநயந்திடுநருடன்மாநரபதியவன்மீதே
மோகவெஞ்சரணைவிடுத்திடமயங்கியேமூர்ச்சையுற்றவன்மேவ
வேகமோடவன்மகுடமே * கரமெனவிழைந்துகொண்டுதன்வேள்வி
தாகமார்தரமுடித் † தவபிரதமுந்தண்புனற்றுறைதந்தான். (௪௪)

முன்னியாங்கதுமுடிந்தபின்றவன்களிமுதிர்தரப்பெருகார்வந்
துன்னியேயிருந்துஞானொடுவிமானமேற்றுநர்க்குமுற்றயன்வாழ்வே
மன்னியோங்குயவாரொருபராகலமன்னனும்பெறுநர்க்காயும்
பொன்னிறார்தருநிழல்வீற்றிருந்தனன்பொலிவுறப்புகழ்பூண்டே. (௪௫)

மயக்கநீங்கியவிந்திரத்துய்மன்னவனகரிடைமேவி
நயக்குநாளிடைநருடனைதிருமெலாநயந்துவர்வியந்தேத்தத்
துயக்கமெய்தியென்வருங்கனவிரதமுங்கொடுலந்தாவெனச்சோர்ந்தே
கயக்கண்மேவியமலர்முகங்கருகியேகவலையுற்றிடுங்காலை. (௪௬)

கருகிவாண்முகங்கவலையோடழிந்துளங்கலங்கியதிறல்வேந்த
னருகுமேவியேவசிட்டனீண்டரசநீபாருலமிகமேவி
யுருகிவாடுதற்கேதுவேதுமுறையுற்றதேதுணர்வுள்ளார்
பெருகுமாறுவெந்துயருறுர்ப்பதையர்பிழையுற்றயர்வாரே. (௪௭)

துயரகற்றியேமனத்தினைத்திருத்திநீதுளிர்தியேற்றுயர்கூரு
மயரகற்றுயுவுவரையெனக்குரவனையமலரடியிணைபோற்றி
யுயர்வுடைத்தவத்தோங்குநீயெங்குலத்துறந்தவர்க்கிதேயா
மயர்வகற்றினைநீயருள்கூர்ந்திடினரியதொன்றிலையென்றான். (௪௮)

வேறு.

வீறுவெம்பரிமேதநூறியற்றுநல்விபுதர்க்கே
கூறுமிந்திரபதத்தியான்குலவியேநருட
னூறுநற்றருவிழைந்துடநடுக்கிநாயகனும்
பேறுநல்கெனப்பணிந்திடவோர்ந்துளம்பெரியோன். (௪௯)

தாங்குமெய்யுடன்மகந்தினைத்தவிர்ந்துவிண்படரும்
பாங்குவேறிலையாயினுமிராசியம்பகர்வாம
வீங்குதென்கடற்கரைமறைவனம்வியனுலகத்
தோங்குமாங்கதின்மணிகன்னியெனத்தடமொன்றால். (௫0)

---

* கரம்-இறைப்பொருளென்பது மேலுங்காட்டப்பட்டது. † அவபிரதம்-அவபிரதஸ்நானம். அது, மகோற்சவமுடிவிற்றீர்த்தஸ்நானம்போல யாகமுடிவிற்செயப்படும் ஸ்நானமெனவறிக.

எல்லைநீங்கியபெருங்குணமேன்மையாலேயு
மல்லைநீக்கிடுமதனிடைப்படிதியேலாக்கம்
வல்லையீந்திடுமணிகன்னிபடிந்துவான்றிரிசங்
கொல்லைமேவினன் * வருணவெம்பாவநோயொழித்தே. (௫௧)

பேயுமாங்கதிற்சிராத்தமேய்ந்தருங்கதிபெறுமால்
வாயுமாதவத்தேவலனயன்புரிமகிழ்ந்தான்
காயுமாவினைகங்கையேழுதனதிகழித்த
வேயுமாமகப்பயத்தினைப்பிரவரனேய்ந்தான். (௫௨)

காதன்மேவியமாதரைக்காசிபன்கலந்தா
னேதநீங்கினன்சோரனுங்கௌசிகனேய்ந்தே
வேதவிப்பிரனுயினன்மணிகன்னிமேவி
மாதவப்பயனெண்ணிலார்மேவியேமகிழ்ந்தார். (௫௩)

விதியினற்படிந்தெழுதியேல்வேண்டியவிளைக்கு
மதியினுகுலமாற்றிநீமறைவனமேவிப்
பொதியினுறியபூமணிகன்னியைப்போற்றிக்
கதியினுகுதியென்றவற்கருளொடுங்கழற. (௫௪)

தெண்கடற்றருந்தெய்வவாரமுதெனத்திகழ்ந்தே
நண்புறத்தருநன்மொழிமனப்படைாடிப்
பண்புறத்தொழுதவனெடும்பணிக்கதிர்ப்பரப்பால்
விண்பிறக்கிடவிளங்கியமறைவனம்விரைந்தான். (௫௫)

போதவிழ்த்தளிபொம்மெனமுரன்றிடப்பொழிதேன்
மோதலைத்தருதடமணிகன்னியைமுறையா
லாதரத்தொடுபணிந்துசங்கற்பமுமறைந்தே
வேதமுற்றமந்திரத்தொடும்படிந்தனன்விதியால். (௫௬)

நீலமாமணிதுணித்தனநீர்க்கடன்போற்றிக்
காலமாமழைக்கணமெனக்கொடைக்கடனாற்றி
யேலவார்குழலிளங்கொடியிறைவியோடிருந்த
பாலலோசனற்பணிந்தனன்பரிவொடும்பலகால். (௫௭)

அன்பினுற்பணிந்தானந்தநீர்விழியலைப்ப
மின்குலாவியசடையனைவேதநாயகனை
யின்பமாகியவிறைவனையீறிலாமுதலை
முன்பராய்ப்பணிந்தலர்ப்பதத்துதிபலமொழிவான். (௫௮)

---

* வருணவெம்பாவநோயொழித்து-கொடிய பாவத்தைத் தரும் சண்டாளத்துவமாகிய சாதி நோயைத்தவிர்த்து. வருணம்-சாதி. இச்சரித்திரத்தைத் திரிசங்குச்சருக்கத்தானறிக.

வேறு.

பொழியுமமுதக்குழவிநிலாப்புனைந்தாய்போற்றிபுகலாய
மொழியுமனமுமளவாதமுதலேபோற்றிமுதல்வானோர்
கழியுமலைநீர்விடமேவுகளனேபோற்றிகவலையின
லழியுந்தமியேற்கருண்மறைசையரசேபோற்றியரபோற்றி. (௫௧)

அரியுமயனுமுதலாயவமரர்வேதமறிவரிதாய்
விரியுமொளியேசிதானந்தவினைவேவிழைவார்மனமேவிப்
புரியுமருளேயாலாதபுகலேபுவனவுருவாயுந்
தெரியவரிதாம்வேறுவனத்திருவேபோற்றிசிவபோற்றி. (௫0)

போற்றிவேதவனத்துறையும்பொருளேபுகனியலதறியே
னாற்றிபடியேன்மனக்கவலையழிப்பாயென்னவருளாளன்
றோற்றியெதிரேமணிகன்னிதோய்தலாறுந்துதியாலும்
பேற்றிற்பொலியுமவரமருள்வாம்பேசுகெனலும்பேசினனால். (௬௧)

அருளாலுலகமனைத்தினையுமளிப்போயென்பாலருளுண்டேல்
வெருளாதுரைக்கேசனிந்திரனும்மேவிநருடன்றனைவிழைந்து
பொருளாய்த்தேவரெனைப்பரவப்புரிவாயென்னப்புரிந்தருளித்
தெருளார்மறையோர்குறுமுனியையழைத்தேயினையசெப்பினனால். (௬௨)

மலையத்தவநீநம்முரைபால்வன்றவேறும்வானவர்த
நிலையத்தேகிநருடனையமிழ்ந்துவிப்பருச்சருந்தமுழற்றி
மூலவற்றமரவியனையாற்றுறைவாயென்றுமொழிந்திடலுங்
* கலையத்தறவோன்பொன்னுலகிற்கடிதுநருடன்றனைக்கண்டான். (௬௩)

பொன்னங்கொடியாம்புலோமசைதன்பொழியுங்கவினைப்புகழ்ந்திவன்றன்
முன்னம்பரவவவள்மையன்முயக்கமுறுக்கமாமதனன்
றன்னம்பருளச்சிவிகையிசைந்தவந்தோர்தாங்கக்கதருவர்
தென்னந்தெனவென்றிசைபாடத்தேவமகளிர்செறிந்தாட. (௬௪)

செல்லுமளவின்வைசயந்தியென்றுந்திருவார்மாடமிசைப்
புல்லுஞ்சசியுமியன்வரவும்பொலிவுநோக்கப்புதியநிலா
வொல்லுங்கதிரைத்திரையமுதத்தொளியோடமைத்தாங்குவாமதியை
வெல்லுந்தெளிவார்முகங்காணநருடன்விருப்பமிகமேவி. (௬௫)

தாங்குமறவோர்தமைச்†சருப்பசருப்பவென்றேதாளுதைப்ப
வோங்குமுரவோனுயதமிழுறுவன்சீறியுரவோர்பாற்
றீங்குபுரிந்தாய்பெரும்பாந்தட்செறியும்படிவஞ்சேர்தியென
வீங்குமெழுயோசனையளவுவீழ்ந்துமேவிமெலிவுற்றே. (௬௬)

---

* கலயம் கலையமெனப் போலியாயிற்று. கலயத்தறவோன்-கும்ப முனி. † சருப்ப என்பது விரைந்துநடக்க ஏவுதல்.

கும்பயோனிதனையிரப்பக்குழையாதொழிநீயுறும் * தரும
னம்பொன்முகனேயதுகாணவகலுஞ்சாபமெனவாங்குத்
தம்பமாயவிந்திரத்துய்முனனென்வாக்குச்சத்தியமே
யும்பர்நீவிர்கேண்மினெனவுரைத்தேயுவகையுற்றனனால். (கஎ)

புதியமதுவார்தருநீழற்புரப்பாயென்னுப்புரந்தரனும்
முதிருமுவகையிந்திரத்துய்முனனைத்தேவர்முடிசூட்ட
வதியுறுதியாரிலேவேலோன்வானமளித்தேவரம்பறுநாட்
கதியுமடைந்தான்மணிகன்னிகருதிப்படிந்தகருமத்தால். (கஅ)

வேறு.

பூமருவுமணிகன்னிபடிந்தவர்க்குக்கிடையாதபொருளுமுண்டோ
நாமருவுமுறையதனாலதன்பெருமையெவர்நவில்வர்நாமவேலோய்
பாமருவுமறைகூறிப்பகர்ந்தமசமனைத்தினையும்பரிவினூற்றித்
தாமருவுபயனையதனிடைப்படிந்தேயொருபனவனசார்ந்தானன்றே. (கக)

வேறு.

இரவிதன்குலத்திந்திரத்துய்முனன்
பரவுகாதைபடிப்பவர்கேட்பவர்
விரவுசெல்வமிருந்தருண்மேவியே
பரவுநீக்கியளிந்துக்களிப்பரே. (உ0)

இந்திரத்துய்முனச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩, ௫௫௭.

---

# பிரவரச்சருக்கம்.

அருட்கதிராற்பிறப்பிருளையரியு † மரியமனுயவறவோயகிலத்தருமுழு
லாரிமயமலைத்தோகையிடத்தரனேபோற்சுடருஞ்சோதிப், பொருட்கலை
யார்மணிகன்னிப்புகழினருநலைசயகிலம்புணர்ந்தவேள்வியிற், பெருட்பயனை
மறைப்பனவன்சேர்ந்தநெறிநெரித்தியெனத்தெரித்தல்செய்வாய். (க)

‡ இதிகாசமிதுசாலவிரும்பூதாம்பவமகற்றுமிலங்குந்தூய
மதிவாயுங்கதியாயமணிகன்னிவண்புகழாமதித்துக்கேணீ
விதிதூயமகனுகுங்காசிபற்குத்தனுவினிடைமேவுமைந்த
§ னதிகாயனெதிர்சாயவடருமுழுவலியுடையானுற்றன்மிக்கான். (உ)

---

* தருமன்-தருமபுத்திரன். † அரியமன்-சூரியன். ‡ இதிகாசம்-புராண சரித்திரம். § இராவணன்மகனுகிய அதிகாயனுமெதிர்சாயும்படி.

வடிவழிந்துகுறைந்தபடைவந்தகிராதனைச்சரணமருவச்சீறிக்
கடிதெதிர்ந்திந்திரன்மீதுகணையிலக்கஞ்சமற்கயுதங்கனலிமீது
வடிநெடுங்கோலயுதமுய்யார்மாருதமீதொருகோடிவழங்கவன்பா [செய்தார்.
லொடிவறுங்கோலவைசரத்தாலொழித்தவனைச்சூழ்ந்தரும்போரொருங்கு

சாற்றவன்கைச்சிலையாவநாழிநிதிக்கோன்வசுக்கள்கடியபாய்மா
நாற்றியகேதனம்வருணனடவியசாரதிநிருதியந்துபாலிற்
போற்றியசாரதிகடமைப்ருந்துவர்கடனிர்ரணியேபொடிப்பவேந்த
னேற்றிடியிற்குலிசமவனுரத்தழுத்தத்தடியின்முடியியமன்மோத. (௧௨)

வன்னியவனெற்றியுறச்சத்தியினைப்பதிப்பமற்றைவானோர்சீறி
மின்னியலும்படைகள்விடுத்தலைத்திடவுங்கிராதன்வடமேருப்போன்று
தன்னிலையிற்றளராதுதரித்தனனப்படைகளவன்சடர்திற்சார்ந்து
பொன்னிமிர்வெம்பொடியாகிப்பூழியுறவச்சிரமெய்பொருந்திநின்றான்.

எறிந்தபடையனைத்தினையுமிரித்தெழுந்துகரத்தினிடியேறநேய்ப்பச்
செறிந்தவிருப்புலக்கையினாற்றேவர்கோன்சிரத்தழுந்தச்சினைத்தின்மோத
மறிந்தவன்வீழ்ந்தெழுங்குருதி*வாயுமிழக்கூற்றையவன்மார்பின்மோத
வறிந்தவ‡னிந்திரனவசத்தாயினன்மற்றையரிரிந்தாரலக்கணுற்றே. (௧௪)

தோற்றமராரம்புலியாற்றுறுடைக்கியமானினத்தோடிச்சுடருமேருத்
தேற்றருங்கந்தரத்தமர்ந்தார்சினங்கொள்கிராதனும்பொலிந்துசிங்கவேற்றி
னேற்றமராவதியையடைந்திந்திரன்போற்பெரும்போகமெய்திச்சேர்ந்து
போற்றுமரமகளிரொடும்புணர்ந்தனிநந்தனமுதலபோகந்துய்ப்பான். (௧௫)

மூன்றுலகுந்தன்வசமாய்முறைநடப்பச்சுரர்க்கிடர்கண்முதிர்த்துப்பூமே
லான்றமறையவர்க்கலக்கணுற்றிடிசாசுரர்தமக்கின்பனைத்துமாக்கித
தேன்றதும்புந்தருநீழற்செறிந்தமர்ந்தான்வருந்துதுயர்சேர்ந்ததேவ
ரீன்றவயன்றனக்கசுரனெறியனையதுயரமெடுத்திசைப்பமேலோன். (௧௬)

எண்ணிறைந்தமறையனைத்துமியம்புமகமியற்றிமறையீறுபன்னு
முண்ணிறைந்தானெறுரத்திடுவனுன்னையெனவரமளித்தோம்பர்பூவின்
கண்ணிறைந்ததன்மையினன்கலந்தனனேலவற்குரைத்துக்கருமங்காண்மின்
விண்ணிறைந்திரெனவிடுப்பமேதினியந்தணர்க்கூவிவிளம்புகின்றார். (௧௭)

கொடியதுயரமக்காகநமக்குறுமின்பேறுளதாங்குறித்துக்காணிற்
படிமிசையத்துகைமறையோனுளனாயினவனொடியாம்பரிந்துபோகி
மடியவழித்தசுரனுயிர்மாய்த்திடுவமெனவுரைப்பவசிட்டன்வானோர்
கொடியதனுக்கெதிரநந்தமகமியற்றிமறைமுதனூனுவன்றூர்யாரே. (௧௮)

---

* வாய் என்றது ஈண்டு நவத்துவாரங்களையும். ‡ அறிந்தவன் இந்திர னவசத்தாயினன் - தன்வசமாய்நின்ற யமன் இந்திரன்போலப் பரவசமாயி னன்.

விரிதருமாநிலமீதுதீர்த்தயாத்திரைத்தொழிலேமேவித்தென்பாற்
றிரிதருவேன்கடலருகிற்சிறந்துயரவுருவாகித்தேசினோங்கிச்
சரிதருவாரிருட்கனகத்தகடுமணியொடுமிழைத்துத்தாமநாற்றிப்
புரிதருமாளிகைசூழ்ந்துபுடவியினிற்சிவபுரிபோற்பொலிந்துதோன்றும். ( )

மறைவனவீதியிற்புகுந்துவருமளவிற்புராணமெனவகுத்துக்கூறக்
கறையறுமாங்கதினிரண்டுசுலோகமுமென்செவிப்புலத்துக்கலந்தவாமென்
றறைதரவங்கவர்கூடியாச்சரியத்தொடுமேவி*யச்சுலோகங் [வான்.
குறைவறநீயுரைத்தியெனக்கூறியதன்பொருள்விரித்துக்குறித்துச்சொல்

உலவுமறைவனமேவிமணிகன்னியதிற்படிந்தோனொருகாலேனு
மலகறுமாமறையுணர்ந்தோனவனேயாமகமுழுதுமாற்றினோனு
மிலகுமறைச்சிரத்தினொடுமியம்பியசாத்திரமுணர்ந்தோனிறைவனொரு
நலமுடையனவன்சீவன்முத்தனுமாமென்றுரைத்துநயந்திடுவான். (௨௬)

---

* அவ்விருசுலோகங்களும் வருமாறு:—

வேதாரண்யே ஸக்ருத் ஸ்நாயாத்
மணிகர்ண்யாஞ்ச யோ நர: |
ஸர்வயஜ்ஞேஷு
தீக்ஷிதஸ்ஸ்யாந்ந ஸம்ஶய: || ௧ ||. (1)

வேதாந்தவித்ஸர்வவித்யாஸ்
ஜீவந்முக்தஸ்ஸ ஸர்வவித் |
ஸர்வவச்சிவோ லோகாநாம்
ரக்ஷாஸம்ஹாரயுக்தயா || ௨ ||. (2)

இவையிரண்டும் யதுவுக்குக் காசிபமுனிவர் கூறிய கூற்றாக முன்னூலிற் கூறப்பட்டுள்ளன.

இவற்றின் பிண்டப்பொழிப்பு வருமாறு:—

வேதாரணியத்திலே மணிகன்னிகையில் எவன் ஒருதரம் ஸ்நானஞ் செய்தானோ அவனே எல்லாயாகங்களும் செய்தவன்; அவனே வேதாந்தங்களை அறிந்தவன்; அவனே சீவன் முத்தன்; அவனே சிவன் போல லோகரக்ஷகன் என்பதாம்.

இவ்விருசுலோகங்களையும் ஆசிரியர் மொழிபெயர்த்த செய்யுள், முன் வரும் யதுச்சருக்கத்து நாற்பத்துநான்காவது செய்யுள்; அதனை ஆங்குக்கண்டுணர்க.

வடித்தவெங்கணைபிரவரன்ருெமொடுவழங்க
வெடித்தெழுந்தவன்விடும்படையனைத்தையும்விழுங்கித்
துடித்தயர்ந்திடக்கிராதன்வெஞ்சிரந்துணித்தாவி
குடித்தகன்றதுதானவர்வழிஇக்குலகுலைந்தார். (௫௫)

நஞ்சொனத்தெறுந்தானவன்மடிதலுநயந்தே
யெஞ்சலற்றனமினியெனக்கடவுளரீண்டி
வஞ்சமற்றிடும்பிரவரன்றெளிவினைவாழ்த்தி
யஞ்சமுற்றவளுமெனவளித்தனையென்றே. (௫௬)

இனியநன்மொழியோடெலிரண்டறத்தழுவிக்
கனியுமிந்திரனவனெடுந்தன்பதிகலந்தே
துனியகன்றனன்றன்னினன்கடவுளர்சூழ்ந்த
முனிவர்தம்மொடும்பிரவரன்றன்னெடுமுயன்றே. (௫௭)

மற்றைநாடனின்மறைவனமேவியேமயக்கப்
பற்றையிர்மயங்கசன்னியைப்பணிந்துபின்படிந்தே
சுற்றைவார்சடைக்கடவுளைப்பணிந்துசாரவிரு
லிற்றைநாளுடலெடுத்தநற்பயனெனவிசைத்தே. (௫௮)

தொழுதுமாடுறச்சூழ்ந்துமும்முறைபினுந்தொழுதே
முழுதுமாகியமுதல்வனைமுக்கணுயனைப்
பழுதிலாவுமைபங்கனைப்பரரபரமாகிக்
கழுதுசூழ்தரநடித்திடுங்கடவுளைக்கண்டார். (௫௯)

தாழ்ந்துமண்மிசைத்தாமரைத்தளிரடிமுடிமேற்
சூழ்ந்தமூண்டிடுநறயரொடுமிருவினைத்துகளைப்
போழ்ந்துமெய்ம்மயிர்ப்புளகமோடளவிலிலன்புருவாய்
வாழ்ந்துபோயினமினியெனத்தோத்திரம்வகுப்பார். (௬0)

நெடியமால்முதற்றேவருநிகிலமுமொடுங்கிப்
படியுமாயையும்பகர்வறுங்காலையிற்பரமா
யடிகணீரமர்நமலமாயிச்சையினளவா
வடிவமாக்கினைமகத்தவியெமக்குறவகுத்தே. (௬௧)

நிறைசராசரமனைத்திறுநீங்கிடாநிலையாற்
குறைவிலாதவைகுலவிடுந்தொழிலொடுகுணமா
யிறையுநீயலதில்லையானின்னிலையேய்ந்து
மறையுமாற்றறுமெனிலெவர்நின்புகழ்வகுப்பார். (௬உ)

போற்றியானந்தவுருவமாம்புராதனபோற்றி
போற்றிமான்முதற்புங்கவர்க்கறிவரும்பொருளே
போற்றிநீபுகலென்றவர்க்கின்னருள்புரப்பாய்
போற்றிமாமறைவனத்துறைபுனிதனேபோற்றி. (௬௩)

இன்பமாகியேயின்னணம்புகழ்ந்தவர்க்கிரங்கிப்
பொன்குலாஞ்சடைப்புண்ணியனெதிர்ந்திதுபகல்வான்
மின்குலாமணிகன்னியின்மேன்மையுமதன்றி
ரன்பனாகியபிரவரனுற்றதுமறிதிர். (௪௪)

வாய்மைசொற்றிடும்புராணநூற்றெளிவிசுவாசந்
தூய்மையுற்றவர்க்கல்லதுதோய்ந்திடாதோயிற்
றீமைபற்றவரெண்ணியபயனெலாஞ்சேர்வார்
பாய்மணிக்கதிர்பரப்பியமணிகன்னிபடிந்தோர். (௪௫)

மாமனோக்கையும்வருத்தவப்பயனுறவாழ்வ
ராமகிழ்ச்சியாம்பிரவரன்கரியதற்காரு
முகவிணைதொகைதினமதினமூழ்கியோர்பெறுவே
ருயுரைத்திதுசாற்றினனிந்துராசனைக்கே. (௪௬)

பரவுசெங்கதிர்படலமின்னரியவணைப்பாதி
பிரவரனறனைக்களிப்பயனறனெனுமிபிரியா
தரவுறுங்கவினட்புறவொங்குமயென்றுக்
கரவறுங்கதிக்கரைகடனைசரந்தனன்கடவுள். (௪௭)

ஆயகன்மொழிகொண்டமராவதியடைந்தே
போயவிந்திரன்பிரவரனைநடைப்புரியாற
பாயவெங்கதிரரியணைப்பாதியுமளிக்க
மேயனைப்பொலிமினாங்கினையின்னமும்விழைந்தே. (௪௮)

நோற்றமேம்படுமுனிவரர்மகமெலாநயன்றே
யாற்றுமேன்மையீந்தருமகமாமணியிருடிப்
போற்றியின்னமும்புரிந்தமர்ந்திலகினர்புகழோய்
தேற்றிபேடிந்திடின்மகப்பயனெலாஞ்சேரும். (௪௯)

ஐயமின்றெனவறிதிமணிகன்னியதன்சீர்
செய்யசெஞ்சடைச்சிவனலாதியாவரேதெளிவா
ருய்யநீயறிதியென்றுயர்வேந்தனுக்குவப்பால்
வையமீன்றவன்மகனகமகிழ்வொடுவகுத்தான். (௫௦)

இராசசூயமென்றியன்மகமியற்றுமாயிரத்திற்
பராசுமாமணிகன்னியிற்படிதலேயதிகந்
தராசிலுமெனுந்தன்மையிற்கௌசிகஞ்சான்றும்
புராசமேவியவீரசேனனுங்கரிபோதும். (௫௧)

வேறு.

பரிதியினிருள்கெடவிலகியகதையிதுபகர்வாரு
* மிருதியினியலுறவிரிதருமிசைசெவிவிழைவாரும்
கருதியபொருள்பலசதியொடுதமையுறுகவின்மேவ
வருதிருமறைவனமகிழரனடியிணைவழுவாரே. (௫உ)

பிரவாசசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,சஉ௩.

---

# வீரசேனகௌசிகச்சருக்கம்.

வாயமாமறைழைச்குறவருத்திமிராச
ரூயமாயிரர்ரும்பயன்மணிகணனிரோயி
னேயவாய்ந்தும்வீரசேனசைரிய்யகு
மேயகௌசிகஞ்சான்றெனுங்கதையினைவிரித்தே. (௧)

கூறுவாயெனுங்கொற்றவற்சருண்முனிருமுவாற்
பேறுசால்கதைபேசினன்பெருவளம்பிறங்கி
யூறுதீங்கனியுடைநறுமலருகுநறுந்தே
றுறுபாய்தலினரும்பொழில்வளார்ந்துசேணளக்கும். (௨)

பல்லுயிர்த்தொகைக்கிரங்கியவின்னருட்பான்மைச்
சொல்லுயர்த்ததென்னாட்டிடைத்தொடைக்கடற்புவியி
னல்லுடைத்தெழுங்கதிரெனக்கலியுறுதனிப்போ
னல்லொழுக்குடையந்தணர்க்கினிமைசெய்சலத்தோன். (௩)

நூற்கடற்றுறைபடிந்துசொல்வன்மையிறுனித்தோன
பாற்கதிர்க்குடைநீழலிற்பார்புரந்தருள்வோன
† சாற்கிலச்கெனச்சத்தியம்பொறைமுதற்றரும்
தேற்குநற்குணமெல்லையற்றனவுடையியவுள். ()

வீரசேனனென்றோதியவிறன்மிருவேந்த
னூரமீர்தருகாவிரியவிர்மணிக்கரைமேல்
வாரமாகியேராசசூயப்பெயர்மகஞ்சேர்
சேரவாயிரமறைக்கருத்தொழுக்குறச்செய்தான். (௫)

வறுமைவெங்கனன்மடிதரத்தக்கிணைமழைதூஉய்ப
பெறுதிறென்றனித்தமரருண்டகட்டிடம்பெருக
நறுநெயாகுதிகரிக்கையிஞெழுக்கிடநகையான்
முறுகுதாசனன்களியுறவெவியர்போன்முகப்ப. (௬)

---

* மிருதி-ஞாபகம். † சாற்கு-சால்புக்கு. இயவுள்-மிகுபுகழாளன.

ஏழிரண்டெனுமிந்திரரிறந்தபின்னேர்ந்த
வூழினுற்றியமகப்பயனுலந்திடவொழிந்தே
யாழிசூழ்தரையடைந்தனன்பறவையின்றளவும்
வாழி*யிந்திரராயிரர்மடிவரைவதியும். (௧௫)

வேந்தனாரியனையினிற்பாதியின்மேவி
மாந்தியின்பினைமகிழ்ந்தது†கண்டியான்மதியா
லேந்தியாயிரமிராசசூயப்பயனென்றே
யாய்ந்துரைத்தனனதிற்பெரும்பயனெலாமளிக்கும். (௧௬)

சரமுராத்தினிற்றங்கிவீழ்பறவைநீர்சார
வரமளித்ததேலத்தடமென்மையார்யாருப்பார்
கரவுமுற்றியகள்வருமரணிடைக்கலந்தே
விரவுநற்கதிமேவினரெனமகிழ்விறலோய். (௧௭)

கள்வர்யாரவர்கலந்ததுகரையெனக்கமலப
புள்வலந்தருகொடியவன்மகனிறைபுகல்வான்
வெள்வலம்புரிமேய்மணிகன்னியின்வியன்சீ
ருள்வலென்றுவந்துரைத்தநீகேளெனவுரைப்பான். (௧௮)

‡தேசமுற்றமர்சூழலிற்செறியிருளடவி
நேசமுற்றவர்படைத்தொழிற்செருக்குறுநிலையார்
நாசமுற்செயுங்கருவிகைவிடாதவர்நடுக்கும்
பாசமுற்றகைநமனுருப்பலபடைத்தனையார். (௧௯)

இரக்கமற்றுயிர்க்கொலைபலகாலமுமிழைப்பார்
கரக்குநெஞ்சினர்கள்ளொடுகொழுந்§தடிகயவூன்
புரக்குமூணினர்புலியழுறேக்கினர்பொலியூர்
பரக்குமாறெரிமடுத்திருட்கூட்டுணல்பயில்வார். (௨௰)

வழிபறித்துயிர்மாய்த்தவர்பொருளெலாம்வழங்கிப
பிழிமடுத்துணும்பிழையினர்தீவினைப்பெருக்கா
றிழிதரத்தொழிலியற்றுவாரிரவிடையெங்கு
முழிதரற்கெழுவாரொருநாளிருளுலர்ந்தே. (௨௧)

---

* இன்னும் ஆயிரமிந்திரர்காலம்வரை அங்கேவதியுமென்க. † அதனை யான்கண்டு புத்தியில் வைத்துச் சீர்தூக்கி ஆயிரமிராசசூயப்பனைத்தருமென்று உனக்கு முன்னர்க்கூறினேன். அது அதினும் பெரும்பயனைவற்றையும் அளிக்கும். யான் என்றது நாரதமுனிவர் தம்மை என்க. ‡ ஓர் தேயத்திற்குச் சமீபத்திலிருக்குஞ்சூழலில். § தடி-தசை. ஊன்-நிணம்.

அண்ணன்மேவியகயிலையைநோக்கியேயகல
வெண்ணமோடெழுந்தனனவர்மறலிபாலேகி
வண்ணமோதிடவலிந்தவன்கணத்தொடுமதியத்
தண்ணமார்திருக்கயிலையைச்சார்ந்தனன்றளர்வால். (௩0)

நீறுதாங்கியநிமலனதுருவமேபோலப்
பேறுசாறிருக்கயிலையினர்தியம்பெருமா
னாறுபூங்கழற்றுணையடிமுடிமிசைசூட்டிட்
டேறுமன்பினூற்றுதித்தருகணைந்தனனுரைப்பான். (௩௧)

துன்புறக்கொலைத்தொழிலுயிர்க்கியற்றியசோரர்
வன்புறத்தெறுநரகினுக்குரியராம்வழக்கா
லின்புறத்திவரியற்றியதருமமொன்றிலையா
னின்புறத்திவர்நிகழ்வதெவ்வகையெனவிடுத்த. (௩௨)

நந்திவானவனடிவணங்கியந்தனைநாடிச்
சிந்தியாதுரைசெய்தனைதேர்மறையனத்தி
னுந்தியார்மணிகன்னியினோங்கியமாகம்
புந்தியார்துயிற்றனைமீட்டனைப்புரந்தான். (௩௩)

ஆயபுண்ணியப்பெருக்கினாலரனுமதியான்
மேயதீங்கெனவிளம்பிடமறலியும்வெருளார்
மாயமாமிதுமறையவன்றுகிலினைவௌவி
வேயவீர்தனைவிரந்திடவேதியன்விழைந்தே. (௩௪)

காலமோடுயர்தேசமுங்கருதுபாத்திரமு
மேலதாகியேதன்பொருளின்சொலோடுதல்
சாலநற்பயன்றருமிதுபோல்வனதராவா
ஞாலமீதெனநந்தியெம்பெருந்தகைநவில்வான். (௩௫)

மாற்றமுண்மையேயாயினும்வழிபறிமறவர்க்
கேற்றதந்தொழிலத்தொழிலாலியற்றியதுடந்
தேற்றமங்கவன்பொருளதுவழங்கலாற்சேர்ந்து
தோற்றமேயினன்கயிலையிற்புண்ணியத்தொடர்பால். (௩௬)

திருந்துசீர்மறைவனத்தொளிசேர்மணிகன்னி
மருந்துவல்வினைப்பிணிக்கதன்பெருமையார்வகுப்பார்
பொருந்துமங்கதன்கரையணுவாயினும்பொருப்பா
யருந்துமின்பினையளித்திடுமந்தணர்க்களிக்கின். (௩௭)

பனவனுக்கலைபறித்தவற்கிந்தவப்பயனே
யனகவிப்பதமளித்ததேற்றம்பொருளளித்தார்க்
கினமதாம்பயனிதுவெனவெனக்கியம்பரிதான்
மனமழுத்தனைவழங்கிடமறலியும்வழங்கும். (௩௮)

தேமீர்தரச்சிறையிர்தவனிவண்சேர்க
வாதர்மற்றவர்க்கென்னெனவவனுமெம்பயில்வா
னேதநீங்கினர்மணிகன்னியிரம்புனலேந்தும்
வாதமேவினர் * பூசுரர்கள்துகில்வாய்ந்தார். (௩௯)

புனிதராயினர்போவெனப்போய்மணிகன்னிப்
பணிதருந்தடம்பரவியேயமணிபிற்பதிந்தான்
வனிதைபங்கனுஞ்சோமருக்குயர்கதியுதங்க
வினிதருந்தியேயவின்பினைமகிழ்ச்சியினிருந்தார். (௪0)

ஓவியப்புறமணிகன்னிகோங்கியபெருந்தீ
ரோவியப்புறமறைபவனத்தோணசசாந்தமனமை
யாவியத்தடத்துறைவளவாயிறுமளர்ந்தோர்
மேவியப்பரனுலகிடையின்பமேவியுறைவார். (௪௧)

வேறு.

கிருபனும்வீரசேனன்கௌசிகிலயுமேன்மை
வெருவருஞ்சோரர்போய்வெறுக்கைகள்விரிந்துகூறும்
பொருவருங்காதைகேட்பார்சொற்றவர்புனிதராகி
மருவருங்குழலியங்கன்மலர்ச்சுழலடைவர்மன்றே. (௪௨)

வார்மணிகன்னிமேன்மைவளரிளமதியிறேறு
மார்புனையமலனல்லாதாரளந்தறிபவல்லார்
தீர்வருநங்கைசாபந்தீர்தரப்பறவுஞ்சேர்ந்தே
பூர்பரிமேதமாமாயிரத்தினுமுயர்பேறுற்றான். (௪௩)

வேறு.

காரணிக்கதை, யோரவுரைத்தன
னீரமனத்தொடு, தோரசற்கே. (௪௪)

வீரசேனகௌசிகச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧,௯௭.

---

## யதுச்சருக்கம்.

சூலுற்றுளைந்துகுடவளைகள்சொரியுந்தரளச்சுடர்ச்சோதி
பாலுற்றரிந்துபனிங்கடுத்தபடியிற்றிகழப்பார்ப்பெடினை
மாலுற்றுகளுமணிகன்னிவாயுமேன்மைமதுத்தாரை
போலுற்றினியசுவைசெயலாற்புலராவேட்கைபொருந்தியதே. (௧)

---

* பூசுரர்களது நனைந்த வஸ்திரங்கள் பரிசிக்கப் பெற்றார்கள்.

தியசாபம்யயாதிமசற்றீர்ந்தவாறுஞ்செயிர்ச்சாபம்
போயவாறும்பரிமேதம்புகலாயிரத்திற்பொருவில்பய
ஞயவாறுமணிகன்னியாடி, யதுவானடைந்ததுவும்
வாயவுரைப்பாயெனவேந்தன்மகிழவறவோன்வழங்கிடுவான். (உ)

தோற்றுந்தனதுகுலமதிபோற்றொல்லையுலகங்குளிர்தூங்க
வாற்றுநகுடன்விரசைபெறுமணங்கோடனங்கனகமேவ
ஆற்றுமமுதந்தீங்கலவியுருகிப்பருகியுயர்தேவர்
போற்றுமகவானென * வறுவர்ப்பயந்தான்புகழ்சால்புதல்வரைமே.

இயதி, யயாதி, சம்யாதி, யெழில்சேரயாதி, யியம்புமறை
நியதிவாயுங்கிருதியொ, டுத்தவனே, யென்னநிகழ்த்துமிய
ரியதி † கருத்தன்மகள்காவினிலைத்தோணயந்தின்பிலையென்றே
நயOதியாகமுறநீத்துப்பிரமசொரூபநண்ணினனே. (ச)

பற்றற்றகன்றயதிக்கிளையனுகும்யயாதிபணிவேலை
முற்றக்கிடந்தநிலமுழுதுமுறையினடாத்திமுழுமதியக்
கொற்றக்கவிகைநிழற்குளிர்வித்தளிக்குநாளிற்குலிசமெனும்
வெற்றிப்படையோன்கடுங்காலின்விரையுஞ்சலினப்பரித் ‡ தேரும்.

---

* புதல்வராறுவராவார்:—இயதி, யயாதி, சம்யாதி, அயாதி, கிருதி, உத்தவன் என்பவர்களாம். † கருத்தன்மகள்கா - கருத்தன்மகளாகிய கா. கருத்தன்மகளுக்குக் கா என்பது பெயர். O தியாகமுறநீந்து-சர்வசங்கபரித்தியாகமுறத்துறந்து. ‡ இவ்விரதம் மகாவிசேடமுடையது. இது, நெடுங்காலத்தின் பின பாண்டவரை அடைந்து, முடிவிற் கிருஷ்ணனுடையதாயிற்று. எங்ஙனமெனின், யயாதியின் வழித்தோன்றலாகிய குரு என்பவனிடத்துப் பாரிடதன் என்பவன் அவதரித்துக் கர்க்கமுனிமகனாகிய அக்ரூரனைக் கொன்றான். அதனால் அவனைப் பிரமகத்திதொடர்ந்து பீடிக்கப், பாரம்பரியக்கிரமத்தாற்கிடைத்த இவ்விரதமும் அவனை விட்டுநீங்கிற்று. அதன்பின்னர் அவன்இந்திரன், சௌனகமுனி என்னும் இருவர் வாயிலாகஅசுவமேதயாகஞ்செயப்பெற்றுப் பிரமகத்திதோஷநிவிர்த்தி யடைந்தான். இதற்குமுன் தன்னையடைந்த இவ்விரதம் இந்திரனாற் சேதிராசனாகிய வசு என்பவனுக்குக் கொடுக்கப்பட்டது. அதனால் அவ்வசுவுக்குப் பிரகத்தரதன் என்னும் காரணக்குறி உண்டாயிற்று. (பிரகத்தரதன்-பெரியரதத்தையுடையவன்) அவ்வசு புதல்வன் சராசந்தன். அதனாற் சராசந்தனுக்குப் பாருகத்ரதன் என்னும் ஏதுப்பெயர் சித்தித்தது. (பிரகத்தரதன் மகன். பாருகத்ரதன்) அவனைக் கிருட்டிணசகாயததால் வீமன் கொன்று, அந்நன்றி மறவாதவனாய் இவ்விரதத்தைக் கிருட்டிணனுக்கு உபகரித்தான் என்க.

* ஆவநாழிதானென்றுமருளவடைந்தேயடன்மேவுங்
காவலாகியாதிரவிற்கடிதிறைசைப்புறத்தளவு
மேவலாரற்றிடச்செயித்துவெற்றிமேவியன்ஞாலத்
தேவனேயாம்யயாதியெனத்திறைதந்திறைஞ்சத்திகழ்காலை. (௬)

சுங்கற்கினியமகளாயதுகிர்ச்செங்கனிவாய்த்துணைவேற்கட்
டிங்கட்குறுமென்முகைமூரற்றேவயானிதனையவுணர்
தங்கட்கரசாம்விடப்பன்மன்மகளாகுஞ்சன்மிட்டையெனும்
வெங்கட்குவிமென்முலைத்தனையும்விழைந்துவேட்டான்விதிதகவே. (௭)

வேயார்பசுந்தோட்கரும்பனைய † தேவயானிவிறன்மேய
சேயாய்யதுவைத்,துருவசுவைச்,சிறப்பினீன்றுள்சன்மிட்டை
காயாமலர்போற்றுருகு, வநு, சவினூர்பூரு, வெனக்காதற்
றுயாயுலகந்தனைக்காக்குந்தனையர்மூவர்த்தந்தனளால். (௮)

அரிவெங்குருளையெனத்திறலாரைவர்யயாதியளித்தவர்தாழ்
புரியும்பிறையின்வளர்ந்துமறைப்பொருணூன்முதலபுகரறவே
தெரியும்பரிசாய்ந்தயங்கரிதேர்திருவினடாவித்திகழ்ந்தனரா
லெரியுஞ்சினவேற்களியானையயாதியிலங்கும்பொலந்தேரான். (௯)

போரிற்கடியசினத்தவுணர்புலவோர்புடவிப்பொலிவேந்தர்
நேரற்றபரவிறன்மேவிநிறைந்தவளத்தானிலநேமி
யோரிற்றுறச்சமெனவோம்பியுலவாநிதியாலுரவோர்பாற்
காரிற்பொலிபுங்கொடைக்கடலுங்சழித்துப்போகக்கடன்மேவி. (௧௦)

பரிமாமேதமாயிரமும்பரசுவாசபேயமெனப்
புரிமாமகநூறேனையவும்புரிந்துநானம்பூசுரர்க்குச்
சொரிமாமுகிலினளித்தலைசேர்சூழுமுலகந்தனியாளு
மரிமாவனையான்புவியினையைந்தாகமகாருக்கமைத்தனனே. (௧௧)

தென்கிழ்த்திசைக்குத்துருவசுவுந், திசழுமேற்குத்துருகு, வனுப்
பொன்சூழ்வடக்கு, வடகிழக்குப்பொருந்தயதுவும், பூருவெனு
மின்சேரயிலோனடுப்புவிக்கும், வேந்தராகமுடிசூட்டி
யன்பாலமைக்கவவர்புவியையறத்தின்வழுவாதளித்தனரால். (௧௨)

வேறு.

திருந்துமைந்தர்மேற்றிரைக்கடற்புவிவருடேற்றம்
பொருந்துமாசெய்துபொறையொழித்தடையலர்ப்புலிபோ
லருந்துவெங்கணைதனுவொழித்தடங்கிடும்யயாதி
வருந்துமாநரைதிரையுடல்வளைத்ததுவலிந்தே. (௧௩)

---

* ஆவநாழி-அம்புக்கூடு. † தேவயானி யது, துருவசு, என்னுமிருவரை
ப்பெற்றுள். சன்மிட்டை துருகு, அநு, பூரு என்னும் மூவரைப்பெற்றுள்.

வலியழிந்திடவருந்திரைகரையொடுமேடங்கிப்
பொலிவகற்றியேபுரியிடைநாட்சிலபோக
வொலிசடற்புவிநோக்கி * வாயுணர்வுறும்போகக்
கலியுடைக்கடுங்காமமுட்குளித்திடக்கவன்றான். (௧௪)

தோன்றறன்னிடைத்துன்பமார்மூப்பினைத்தொடக்கி
யேன்றுமற்றவனிளமையையழகுறவேய்ந்து
வான்றருஞ்சுவையமுதனமங்கையரோடு
மான்றபோகமேயார்வனென்றுளத்திடையமைத்தான். (௧௫)

முந்துமைந்தனேயாகியயதுமுகநோக்கிக்
கந்துசீறுமாலியானையாய்கழியுமென்மூப்பு
வந்துகொண்டுனதிளமையைத்தருதியேன்மகிழ்ந்துண்
ணந்துமாறெழும்போகமாந்துவலெனநவில. (௧௬)

† மறைவழக்கிடையந்தணர்க்கல்லதுவழங்க
லிறையவர்க்கிலையன்றியுந்தோடமெண்ணிலவாய்ச்
சிறையுடற்குறுமூப்பினைச்சொள்கவேன்சிந்தை
நிறைதரத்திகழ்மைந்தர்பாலியெனநிகழ்த்த. (௧௭)

குரவனுகியதாதையென்சொற்குறிக்கொள்ளாக்
கரவினுய்க்கறக்கதியெதுவெல்லறக்கனன்றே
‡ யரவினுளரசுரிமையுமாற்றிடுமகழும்
விரவுமின்பமார்துறக்கமுமேவலையென்றே. (௧௮)

கொடியசாபமீந்தேனையமைந்தரைக்கூவி
வடிவமாற்றுமினென்றிடவவர்களுமாற்றாந்
தடியவங்கவர்தம்மையுஞ்சபித்துடன்றீங்கின்
மடியமாற்றியேபூருவாமைந்தனைமகிழ்வால். (௧௯)

அருகழைத்தெனையாப்புறுமூப்பைநீயடைந்து
முருகளிக்குநின்னிளமையைத்தருதியேன்மோகம்
பெருகவுய்த்திடும்போகமுற்றுவனெனப்பேசத்
திருவகற்றியேயிளமையீந்தவனரைசேர்ந்தான். (௨௦)

தேங்குவெங்களியிளமையைச்செறிந்துபூருவின்பால்
வாங்குதெண்டிரையைமீதுலாவியேவேட்கை
நீங்குமாறுணர்ந்தியன்றவனிரையிதழ்க்கருங்கண்
வாங்குறுண்ணிடைமயில் § விசுவாசியைமணந்தான். (௨௧)

* வாயுணர்வு-இந்திரியவுணர்வு. † ஓர்பிராமணனுக்கு ஓர்நிமித்தத்தினால் ஓர்வாக்குத்தானஞ் செய்தேன். அது முற்றுப்பெறுந்துணையும் நான் என்னிளமையைத் தரமாட்டேன் என்றான் என முதனூலிற்கூறப்பட்டது. ‡ அரவினான்-பூமிதேவி. § விசுவாசி- ஓர் தேவப்பெண்.

சூழ்ந்தவண்டினமதத்தளிபருகியதுணர்ப்பூப்
போழ்ந்துதென்றலங்குழவிசூழ் * சயித்திரப்பொழிலின்
வீழ்ந்துவெம்முலைத்தடத்திடைவேட்கையால்வேளம்
பாழ்ந்தழுந்திடவவசமார்கலவியினமர்ந்தான். (௨௨)

அரவினுண்ணிடையஞ்சனையாம்பல்வாயமுதந்
தரவிருந்தெதிர்நகைநெடுங்குழல்சரிந்தலைய
விரவுநன்பகலெனவிடைவிடாதணைந்தையந்து
மரபழிந்திடவளர்ந்ததுகாமநீர்வளமே. (௨௩)

ஊழியாயிரமொருங்குறட்புணர்ச்சியையுறினுஞ்
சூழிமாமுகக்கரியனவிந்தியத்தொடக்காற
காழிணார்தருகாமமேனமேற்செலக்கன்றி
யாழியாகுவதல்லதுகருங்கலோவரிதே. (௨௪)

என்றுதானுவர்த்திகழ்ந்தவன்பூருவினிடத்தேய்ந்
தொன்றுகாதலாலிளமையீந்தவனிடையுவப்பா
லன்றுமூப்பினைக்கொண்டனனயிடையாக்கந்
துன்றுபேருணர்வுதித்திடவுளத்தொடுஞ்சொல்வான். (௨௫)

எச்சமுற்றிடுமிளையனயங்குநாண்முதலாக்
கச்சபத்துறக்கயிற்றெழுமிருந்திடக்காமத்
தச்சமுற்றுடனைந்தையுமடக்கிடுமறிவோன்
விச்சைபெற்றவனல்லவர் † பசுத்தறமேயார். (௨௬)

கலங்குகாமநோய்காமமார்ந்தொழிந்திடச்சருத
விலங்குபேரழலிழுதினலவித்திடறங்கேயும்
புலங்கொள் ‡ வேட்கையிச்சராசரத்துறவறப்போக்கி
னலங்குசோதியாயமர்ந்திடுமனப்பசையறினே. (௨௭)

ஒன்றினூற்பயந்தனக்குறலொழிந்துதன்னுருவாற்
குன்றியார்பயங்குவலயத்துயிருறக்கொடானுய்
நன்றியார்விருப்புவர்ப்பறவேணவாநாமம்
பொன்றிமாயுமேலக்கணம்பிரமமாய்ப்பொலியும். (௨௮)

கற்றமார்ந்தரும்விடுப்பதற்கரியதாய்க்காய
முற்றநாளளவுந்தொடர்ந்துடற்றிடுநோயா
யற்றமாயுடலழியினுமழிவருந்தகைத்தாம்
பற்றுநீக்கினர்க்கேயுளதின்பமாம்பயனே. (௨௯)

---

* சயித்திரரதம் சயித்திரமென வந்தது. இது குபேரனது உய்யானம்.
† பசுத்திறம்-மிருகத்தன்மை. ‡ வேட்கை என்றது பரவேட்கையை.

* கேசமோடுபற்கெழுதருமிளமையேர்கேள்வி
காசமார்விழிசெவிமுதற்பொறியுடல்கரண
நாசமார்தரு † சிரணமுற்றிடுநாடிற்
பாசமாயுறுமாசையோதருணமாய்ப்படரும். (௯௦)

படியெலாமொருகுடைநிழலாற்றியபயனுங்
கடியுலாமலர்க்கற்பகக்காவுறுபயனுங்
கொடியவேட்கைவேரரிந்தவர்கூடியவின்பா
நெடியமால்வரையளவினிலணுவெனநிலவும். (௯௧)

வேறு.

எனவிழிபியற்றுமாசையுவர்த்தலகியற்றுங்சாமங்
கனவெனத்துறந்து ‡ வெற்பிற்கடிகமழ்கானத்துச்சி
மனமுதலடக்கியாக்கமலிதரநோற்றுவானந்
தனதெனவுடலைநீத்துத்தாரமோடேகினானே. (௯௨)

மைந்துடைமைந்தர்வேலைமாநிலம்வழாதுகாத்துக்
கந்துறுகளிறுபோலக்களித்தனர்சடியயாதி
முந்துறுசாபநெஞ்சமுற்றிடமுதிருந்தாப
வெந்துயர்யதவுஞ்சூழ்ச்சியுளத்தொடுமேவியோர்வான். (௯௩)

§ வழிமுறையரிகடாங்கவருமரசுரிமைநீங்கிப்
பழியுறுமெனக்குவேள்விப்பயனெவனுகும்பான்மை
பொழிமகமிழுந்தேற்கின்பம்புரிதருசுவர்க்கமெங்கா
மழிதரிற்சுவர்க்கமோவிநிதியினுலாவதென்னும். (௯௪)

அவமுடற்கின்பமாதியாக்கமென்றனைத்துநீத்துக்
கவலையுற்றடவிமேவிக்காவிரிக்கரையிற்காயுந்
தவமிகச்சரித்துச்செய்யத்தபனனேபோலச்சாரும்
o பவனியற்படிவமாயகாசிபன்பாதஞ்சார்ந்தான். (௯௫)

வற்றுமென்புருகநோற்குமாதவன்றனைப்போற்றி
முற்றுறுஞ்சாபமோதிமுறையரசுரிமைநீங்கிப்
பற்றுறுமகமற்றுவிப்பயனுறுஞ்சுவர்க்கவாழ்வு
மற்றுழன்றிடுவேனின்னையடைந்தனனபயமையா. (௯௬)

---

* கேசம் முதலியன ஓரோர் காலாந்தரத்திற் குன்றிப்பதனழிவடை யும்; ஆசையோ அப்பொழுதும் அங்ஙனமாகாது யௌவனவிருத்தியடை யும் என்பதாம். † சிரணம்-பதனழிதல். ‡ பிருகுவாச்சிரமதது உயர்ந்த ஸ்தானத்துத் தவஞ்செய்தான் எனமுதனூலிற் கூறப்பட்டது. தாரம்-மனைவி; என்றது, பட்டத்தரசியாகியவிரசையை. § வழிமுறையரிகடாங்க வருமரசுரிமை என்றது சிங்காசனத்தை. o பவன்-சிவன்.

எற்படவொழுகிராசவிருடியாமெந்தைகூறுஞ்
சொற்பழுதாகாதேனுஞ்சுருதிநான்மகமுநீங்கி
நற்பதசுவர்க்கமேவுநன்மையுண்டாயினுடி
யற்பகங்குணிரவல்லேயருளுதியென்னவாய்ந்து. (௩௭)

வருத்தநீயொழிதிவேதவழக்குறவொழுக்குவேள்விப்
பொருத்தமுந்தவமும்யோகப்புணர்ச்சியும்பிறவுமாற்றித்
திருத்துறுசுவர்க்கவின்பந்தீர்தராதமருமாறு
கருத்துறவுரைப்பனூறுக்கவலையைக்கடிந்துகேட்டி. (௩௮)

திருமகட்குயிரதாகிச்சிறந்ததென்னாட்டுத்தேவி
னுருவமுற்றிலங்கும்வேதவனப்பதியொன்றுண்டாங்க
ணிருமலன்முன்னநீடிநிகழ்மணிகன்னிநேடிற்
பொருவருந்தீர்த்தராசனெனப்பொலிந்திலங்குமன்றே. (௩௯)

பிள்ளைவெள்ளெகினப்பார்ப்புப்பிணியவிழ்நறும்போதூற்றுங்
கள்ளையுண்டயலிற்சங்கம்பெடையெனக்காதல்கூர
வள்ளைமேறருவப்பாயுமதுமழைவாரிமாந்திக்
கொள்ளைவண்டார்க்குங்கூலமணிகன்னிகுறித்துச்சென்றே. (௪௦)

கூறுமந்தீர்த்தஞ்சாற்றுங்கொள்கையோடாடிற்கூடாப்
பேறுலகத்தினில்லைப்பிறங்கியசுவர்க்கமாகு
நாறுபூம்பொழிலிற்போகநயத்தியேன்ஞாலமுற்று
மீறுறுங்காறுமாளாவின்பமுற்றிடுதியென்றும. (௪௧)

பசுந்துணர்த்துளவமாலைப்பண்ணவன்பதுமமேலோன்
கசிந்துறுபதங்கள்வேண்டிற்காயமோடளிக்குங்காண்பான்
வசிந்துதாழமரர்தூவிவழிபடுமலரிற்செந்தேன்
பொசிந்துசூழ்கயிலையேனுமளித்திடும்புரவுபூண்டோய். (௪௨)

ஆயவித்தடத்துமூழ்கித்தேவலனலரோனூரிற்
காயமோடடைந்தசைகீவ்வியன்சனிப்பச்செய்தான்
மேயவச்சுவர்க்கமேவித்திரிசங்குமேன்மைபெற்றான்
றூயமுற்றுலகஞ்சேர்ந்தார்பலரதிற்சார்ந்துளோரே. (௪௩)

* பருமணிகரையிற்சேர்க்குமணிகன்னிபடிந்தோன்றானே
யருமகமுழுதுஞ்செய்தோனுய்ந்தவனிலநூலுந்
திருவுறுசிவன்முத்தனன்னவன்றெரியிற்சம்பு
குருமணிவயிரப்பூணாய்கோடியீதையங்கொன்றே. (௪௪)

---

* இந் நாற்பத்துநான்காஞ் செய்யுளே மேற்போந்த பிரவாஹலோக ங்களிரண்டின் மொழிபெயர்ப்பென வறிக.

தெய்வமேயுருவமாகுமணிகன்னிதிளைத்துமூழ்கி
யையனைப்பணிந்துபோற்றியமருநற்சுவர்க்கமேவி
மையறீர்த்துறுதிவேள்விவருபயன் * மடியயாதி
வையமீதுறுதல்கண்டேமகிழ்ச்சியின்மலிவாயென்ன. (சரு)

நன்றெனமகிழ்ந்துபோகிநகைமணிவகையிற்சூழ்ந்து
குன்றெனமாடமோங்குமறைவனங்குறுகிப்போற்றி
யன்றவன்மனச்சங்கற்பமாற்றியேயளிகள்சூழு
மன்றனன்மலர்சூழ்வாவிமணிகன்னிமகிழ்ந்துமூழ்கி. (சசு)

புனற்கடனாற்றிச்செம்பொற்பொருட்கடன்புகழத்தாற்றி
யனற்செயுஞ்சடையோனாயவமலனையணைந்துபோற்றி
வினைப்படர்கரியபாசத்திருளறச்செறியக் † கண்போய்
மனப்படுநெறியின்வாழ்வேன்மருந்தருள்வரதவென்றே. (சஎ)

தழைவளர்சடையாய்போற்றிசராசரமனைத்துமீன்ற
விழைவளர்முலையாள்பாகத்தேகநாயகனேபோற்றி
மழைவளர்கண்டமேயவரதனேபோற்றிவாழ்த்தி
விழைபவர்க்கமுதமாயவேதநாயகனேபோற்றி. (சஅ)

அறிவரும்பொருளேபோற்றியமலனேபோற்றிநின்சீர்
நெறிவரம்பறியேனீயேநினைந்தருளென்றுபோற்றக்
குறியினின்றெழுந்துதோன்றிக்குழைந்திடலென்றுகூறிச்
செறிதருமமுதம்போலுமிம்மொழிசெப்பினானே. (சகூ)

விரிசுடரிரவியல்லோன்விளங்குநாளளவும்வெண்மா
வரிபுரியமர்ந்துமேவியளவறுமின்பமார்ந்து
பரிமகத்தருமநீங்கிப்பங்கமாய்யயாதிவானிற்
சரிதரநோக்கிவைகென்றுரைத்தரன்குறியிற்சார்ந்தான். (ருO)

நீங்கியசுடரைப்போற்றிவிடைகொண்டுநெடுநீர்நேமி
பாங்கினிற்பரித்துங்காலம்பலசெலப்பாரிற்காயந்
தீங்கெனக்கிடத்தித்தெய்வவிமானமேற்றேவனாகித்
தூங்கியகவரிநீழற்றுறக்கமேற்றுன்னினானே. (ருக)

உடன்முழுதளவுங்கண்ணனோடுமோரணையின்மேவி
மடலவிழ்தருவினீழன்மகிழ்ந்திடயயாதிநோக்கித்
தொடர்மகமின்றிவானந்தன்னியயதுவினோடும்
படர்தருமின்பமார்ந்திப்பற்பலகாலமுற்றான். (ருஉ)

---

* மடிய என்னும் செயவென் வாய்பாட்டு வினையெச்சம் மடி எனக் கடைக்குறைத்து நின்றது. மடிய, யயாதி வையமீதுறுதலை வானுறும் நீகண்டு, மணிகன்னிமகிழ்ச்சியின் மலிவாயென்று கூற. † கண்-அறிவு.

பரியுயிர்க்கிரரகேசர்பதமிழந்துறவுமாறுத்
தெரியுமின்பருந்திவானஞ்சேர்ந்திடுநாள்யயாதி
புரிமசப்பேறுமாயப்*பூவிழுமளவிற்பூந்தே
னரியணையதுவுங்கண்ணுற்றத்தனையவலமாற்றி. (௫௩)

கேடிலாவரத்தின்மேயமணிகன்னிகெழுமியாடும்
பீடினுற்சுவர்க்கமேவப்பின்னருமணித்துப்பேண
வீடிலாச்சுவர்க்கமேவியிருவரும்வேட்கையோடு
நீடினார்நிமலமாயமணிகன்னிநீர்மையாலே. (௫௪)

நயமுறும்யயாதிவீழ்யதுநலமளித்தலாலே
யயமசம்பத்துநூற்றினதிசமாம்பலனையாக்கு
மியன்மணிகன்னியென்றேயிசைத்தனளிதனைநோக்குங்
கயமிலையுலகமூன்றிற்கதிநரக்கருதிக்காணின். (௫௫)

காசிபனிதனின்மூழ்கிப்பன்னியைக்கலந்தான்காமர்ப்
பாசிழைப்பரவையல்குலத்தியும்பரிவினூடி
யேசிலாமைந்தரீன்றுளின்னமுமனேகர்மூழ்கி
மாசிலாதுயர்ந்தார்மேன்மைமணிகன்னிமகிழ்ந்துமன்றோ. (௫௬)

வேறு.

மல்லலார்மணிகன்னிதன்வாய்மையார்
சொல்லுவார்பரன்சொற்றிடுஞ்சொல்லுமே
லொல்லுமாறிதுவென்னவுரைத்தனன்
புல்லுமாவரசற்குபபுகரிலான். (௫௭)

யதுச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧,௭௨௪.

---

# காசிபச்சருக்கம்.

பன்னிவாஞ்சையாற்காசிபன்பகர்மணிகன்னி
தன்னினுடியேசார்ந்தமைவிளம்பினைதவத்தோன்
முன்னியாடியவண்ணமும்பயனுறுமுறையும்
பன்னிநீயருளென்றிடமுனிவரன்பகர்வான். (௧)

---

* பூமியில் விழுமளவில் அரியணையிலிருக்கும் யதுவுங்கண்டு பிதாவாகிய யயாதியை அவலமாற்றி என்க. யயாதி பூமியில் விழும்போது சிபிமுதலிய எட்டுமுனிவர்முன் வீழ்ந்து, அவர்சகாயத்தால் அவரோடு மீளவும்சுவர்க்கத்தை அடைந்தான் என முதனூலிற்கூறப்பட்டது.

மருக்கிளர்ந்தசெம்முண்டகத்திலங்கிய*மறையோன்
வருக்கமார்தருமுயிரினைத்தனித்தனிவகுப்பா
னருக்கனேர்பிரசாபதியனித்தவிரைவர்
திருக்கிளர்ந்தவரவர்களுட்சேட்டனுமரீசி. (௨)

தூயமாமறைமரீசியாமயன்மகனளிக்க
வாயுமைந்தனுங்காசிபன்கனகமால்வரைப்பாற்
றோயுமிர்தியத்தொடக்கினைமனத்தொடுஞ்சுருக்கிக்
காயுமாதவம்புரிந்தனன்கணிப்பறுகாலம். (௩)

வேறு.

சண்டுயிலகன்றுநோற்குங்காசிபற்கருகுகாமர்
விணடுவந்தெதிர்ந்துசெய்யமென்கரமுச்சிவைப்ப
மண்டுமென்பநீறுணிலமலரியணிவண்ணன்வாசத்
தண்டுளவணிநதிண்டோட்டலைவனைத்தாழ்ந்துபோற்றி. (௪)

நிறைதருகமஞ்சூன்மேசநிழல்சவர்ந்தொளிருமெய்யும்
பொறையுறுபுவனம்பூத்தவுந்தியும்பொறியார்மார்பு
மறைதருசெய்யவாயுமரையிதழ்புரையுநோக்கு
நறைகமழ்முடியுநெஞ்சத்தழுத்தினனயந்துபோற்ற. (௫)

விழைவனவுரைநீயென்னவிண்டுமாயின்னுச்சேர்ந்த
மழைவளர்சரியமேனிவள்ளலேமருளைமாய்த்துத்
தழைதருமின்பவீடுதருதியென்றுரைத்துத்தாழ்ந்தே
குழைவுறுமன்பிற்போற்றக்குருமணிவண்ணனகூறும். (௬)

உருகருட்பருவஞ்சேர்ந்தவுயிரினையுவந்துமேவிக்
கருகிருட்பிறவியீர்ந்துகாமுறுமுத்தியீதன்
முருகியற்கடுக்கைவேய்ந்தமுழுமுதன்முக்கண்மூர்த்தி
திருமலற்குரியதாகுமற்றையர்க்கெழ்த்தற்பாற்றே. (௭)

மூசிவண்டறைமந்தாரமுருகுகுழ்சுவர்க்கமேயார்
பாசிலைப்பதுமமேலோனயணத்தயானெவரும்பாசம்
வீசிநன்முத்திமேவவிரும்பியேயரும்புமீச
னூசியுமமர்வேம்போற்றினருட்கடலனிக்குமன்றே. (௮)

அனையதுபின்னரீசனருளினுலமைவதாக
முனையுநம்மருளால்வேட்கைமுதிருமில்லறத்தின்மேவி
வினைசராசரங்கடேவர்நிசாசரர்மக்கணீடுந்
தனையரென்றுகத்தந்தையராகெனச்சாற்றிப்போனான். (௯)

* மறையோனாகிய பிரசாபதி எனக்கூட்டுக.

போயமாயவனைப்போற்றிப்புணர்ந்துடன்மகிழ்ந்துமேவற்
காயகாரிகையைத்தேடியகிலமுமலைந்துங்காணான்
காயமார்வருத்தமேவிக்கமலமீதயனைக்காணு
நேயமாதரவுகூரப்பணிந்திதுநிகழ்த்துகின்றான். (௪0)

ஐயயான்புவனமுற்றுமலைந்துமில்லறத்திற்காய
மையுலாநெடுங்கட்செவ்வாய்மங்கையைமதித்துக்காணே
னெய்யவேறுபாயமோர்ந்தேயிசையெனவினிதுநாடிச்
செய்யமாமலரோன்மைந்தன்மகற்கிதுசெப்புகின்றான். (௪௧)

தென்றிசைவேலைப்பாங்கர்த்திருவெலாமொருங்குமேவி
யொன்றியவளத்துவேதவனமெனவோங்குமாநகர்
பொன்றிகழ்கமலப்பூந்தேன்பொழிமணிகன்னிநீசன்
முன்றிகழ்ந்தொளிருந்திருமூர்த்தியாய்*முதலவனாகி. (௪௨)

துனியுறுந்தவங்கள்வேள்விதொடக்கிலையாதிதீர்ந்து
மினிதுறுசுவர்க்கமீயுமிலங்குமெய்யுணர்வற்றோர்க்கும்
புனிதனன்முத்தியீயும்புரிந்தநன்மையையும்போய்ப்
பனிதருதடத்தின்மூழ்கிப்பரமனைப்பணிந்துபோற்றின். (௪௩)

விரும்பியவனைத்துநல்கும்வேண்டிடின்விழைவுகூரு
மரும்பியல்கொங்கைமாதுமளித்திடுமடைந்தயாதுங்
கரும்பியல்வேலிசூழ்ந்தமறைவனம்பெறுதப்போற்றிச்
சுரும்பணிபோதுதூவிச்சிருட்டிசெய்தொழிலுமடைந்தேன். (௪௪)

போதிநீயென்னைப்போற்றிப்புவியினுக்கணியதாகு
மாதிமாமறைசைமேவியருமறைச்சடங்குவாய்ந்த
வேதிசூழ்வேள்வியாற்றும்வேதியரொழுக்குமின்னார்
நீதியார்வருணைச்சால்புநீண்மணிமறுகும்போற்றி. (௪௫).

முடிவிலாவினைகளோடமுழுங்கியேமுருகுநாறுங்
கடியுலாமலர்நீர்வாய்ந்தகரையிற்சங்கற்பமேவிப்
படியுளார்க்கமுதமாயமணிகன்னிபடிந்துநீறு
வடிவெலாமணிந்துவேதநியதியுமரபினாற்றி. (௪௬)

புரிசடையமலன்மேயசினகரம்புகழ்ந்துபோற்றிப்
பரிவொடுமுக்காற்சூழ்ந்துபணிந்துபோய்ப்பவங்கடீர்க்கு
மரியயற்கரியபெம்மானடியிணைப்பணிந்துபோற்றித்
தெரிவருமகிழ்ச்சிகூரத்துதித்தனன்றேசுமிக்கான். (௪௭)

---

* சிவனாகி.

வாக்கொடுமனமூன்றுக்குமதிப்பரும்வாய்மையாகி
யாக்கமுமழிவுமாற்றியமலமாயறிவாயார்வந்
தேக்கியவுளத்தினூறுஞ்சிற்பரத்தெளிவேதேசார்
பூக்கமழ்மறைசைமேயபுராதனபோற்றிபோற்றி. (கஅ)

காயமுமுலகுமற்றுங்கரணமுஞ்சருத்துங்காண்பு
மாயமென்றுணர்ந்துசிவவழக்கமுமாற்றியெல்லாம்
பாயநின்னறிவானந்தப்பரப்பெனப்பரியு*மேலோர்
மேயமேமறைசைமேயவேதநாயகனேபோற்றி. (கக)

தெரிவரும்பரமானந்தசிற்பரமுதலேபோற்றி
வரிபரந்தொழுகுநீலமதர்விழிவாழ்வேபோற்றி
கரியுரிமகிழ்ந்தசோதிக்கருணைபங்கடலேபோற்றி
விரிமறைமுழுறும்போற்றும்வேதநாயகனேபோற்றி. (உ0)

செங்கண்மான்முதலோர்க்காக்கருஞ்செய்திடுந்திருவேயென்று
வங்கமார்புளகம்பூப்பவருவிநீர்விழிகள்சாய்ப்ப
வெங்கணையசனைப்போற்றவெதிர்ந்துளத்தேய்ச்சநிறும்
பங்கமீர்ந்திடுதியென்னப்பணிந்தவன்பரவிக்கூறும். (உக)

வானவரவுணர்மாந்தர்மற்றையபிறவுநல்லாற்
கானமாமடவார்தம்மையருளெனவபரபக்கத்
தானமர்பத்தின்மூன்றுசார்தருந்திதியிற்சார்ந்து
பானலார்தடத்தின்மூழ்கிநம்மையும்பணிந்தவாற்றால். (உஉ)

சில்லரித்தடங்கணல்லார்பத்தொடுதிகழ்மூன்றேயு
மெல்லியற்பணைத்தோண்மாதர்விரமணமேவிச்சேர்வாய்
சொல்லியதினத்திற்றீர்த்தந்தோய்ந்தெமைத்தொழுதோர்யாரு
நல்லியற்பன்னிசேர்வாரெனமறைநாதன்போனான். (உங)

எண்ணியவரத்தையேய்ந்துகாசிபனில்லிற்போனான்
கண்ணியகாலந்தன்னிற்கடற்புவியளிக்கவேண்டும்
புண்ணியத்தக்க†னெம்மாற்புருடர்தஞ்சிருட்டிமாற்றிப்
பண்ணியல்பனைச்செவ்வாய்ப்பாவையர்‡பலரையீன்றான். (உச)

எனமுனியியம்பவேந்தனேதுநீசெய்ததேதான்
மனமகிழ்புருடத்தோற்றமாற்றினனென்னவாயு
மனமிசையமர்வோன்மைந்தனுயதக்கனேநீயாக்கத்
தினமிகுசிருட்டியாற்றியிலக்குதியுலகையென்ன. (உரு)

---

* மேலோர் என்றது சிவோகம்பாவனை செய்வோரை. மேயம்-பிரமேயம்; அளவிடப்பட்டது. † எம் என்றது நாரதமுனிவர் தம்மை எங்க. ‡ பலரென்றது அறுபதுமகளிரை.

நன்றெனத்தக்கன்மேவிநயந்தநற்குணங்கண்முற்று
மொன்றவாயிரவர்தம்மையொருங்களித்தவரைநோக்கிச்
சென்றுமாதவத்தின்மேவிச்சிருட்டிசெய்தமர்வீரென்ன
வன்றவரீண்டிமேருத்*தடத்திடையமர்ந்துநோற்றார். (உ௬)

புரிந்தவர்நோற்குஞ்சூழல்புகுந்தியாம்புகருற்றுவி
சரிந்துகநோற்றுவேண்டுங்கருமம்யாதென்னக்காமம்
விரிந்தவர்சிருட்டிக்கென்னவிழைந்திலீர்வேதவாய்மை
தெரிந்திலீரருளிற்றீர்ந்தீர்செறியிருட்சூழல்சேர்ந்தீர். (உ௭)

தோற்றமுமிறப்புமேவித்துயர்க்கடற்சுழியிற்றாழ்ந்தி
ராற்றவெந்துயரமாயிக்காற்றினிராயினூவா
கூற்றகீரலதுவேறுருவலயத்துளநோகோதார்
மாற்றமுமுளத்தைத்திக்குஞ்செய்கையென்வகுப்பதாமே. (உ௮)

களப்பசையுறுஞ்†சஞ்சாரக்கலையினைசன்றுகாம
மனப்பசையரிந்துசாந்திமருவியஞானவின்மேவிச்
சினப்பகைசெற்றமாற்றிச்சிவமசமாகத்தேசார்ந்
தினப்பகல்போலவெல்லாந்தானெனுமின்பமார்ந்தே. (உ௯)

ஆருயிர்க்கச்சமாசையாங்கியபேதமாயை
வேருகவகழ்ந்துவேதசிரத்திடைவிமலமாகும்
பேருணர்வாச்சிக்காலிற்பிணிப்புறவெங்குமேவிப்
பாருயர்பரமானந்தப்பரவையாய்ப்பயிலுமென்ன. (௩௦)

பசையறத்துறந்துதூய‡பகவராய்ப்படரப்பாய
விசையினைத்தக்கன்கேளா§விடருழந்திவரைப்போல
நசையுடன்பின்னுமாங்காயிரவரைநயந்துநல்கி
யசைவறுந்தவத்தினேவவவரையுமனுகிராமே. (௩௧)

தெளிமறைச்சிரத்துச்சித்தாந்தேசினைநல்சத்தேறி
யொளியுறத்துறந்தாரிவ்வாறெழிவற○நூறுவார
மளியுடனுதவத்தீர்த்தேயரும்படைத்தொழிலினீக்கி
வெளிசெயவிமலயோகின்மேவிடவெகுண்டுதக்கன். (௩௨)

---

* தடம்-மானததடாகம். † சமுசாரம் என்பது சனனமரணங்களை எனக்கூறும் வேதாந்தநூல். ‡ பகவர்-யோகிகள். § பிரவிர்த்திமார்க்கம் நிவிர்த்திமார்க்கம் என மார்க்கம் இருவகைப்படும். தக்கன் தான் பிரவிர்த்தி மார்க்கத்தவனாகலின், நிவிர்த்திமார்க்கமடைந்த தன் பிள்ளைகளைக்குறித்து இடருழந்தானென்க. ○ நூறுவாரம்-நூறுதடவை.

* தரித்தொருதலையிற்போதஞ்சாற்றுதறவிர்வானெண்ணி
யுரித்திவற்கோரையொன்றேயோரிடத்தென்றுசாபம்
விரித்தெமக்கியயாமும்வேட்கைதீர்வினைவாமென்றே
பரித்தனஞ்சாபமிப்பாற்றக்கனும்படைத்தன்மேவி. (கக)

என்னிடைவெறுப்பாலாடூச்சிருட்டியையிரங்கிநீக்கிப்
பொன்னவிர்ந்திலங்கும்வெய்யபுணர்முலைப்பொருவேலுண்கண்
மின்னிடைமடவாராறுபத்தெனெண்மேயினுரை
யின்னமுதயிர்க்குஞ்சாயலிர்திரையென்னவின்றுன். (கச)

அளித்தவத்தையலாருக்காகியநுவரனையாய்வான்
றெளித்தநற்றீர்த்தமாயமணிகன்னிதோர்ந்துமூழ்கிக்
களித்தகாசிபற்குத்தீர்த்தமேன்மையைக்சருதித்தானே
விளித்தவனீரைந்தோடூமூவரைவிருப்பினீய்ந்தான். (கரு)

அருந்தவனவறுந்தூயவத்தடமேன்மையாலே
கருந்தடங்கண்ணிமார்கள்பத்தொடுங்காலந்தமூவர்ப்
பொருந்தியேயவுணர்தேவர்புசன்றசந்தருவர்சித்த
ரிருந்திறனிருதர்நாகரியக்கர்மற்றெண்ணுந்தேவர். (கசு)

மன்பதைவிலங்குபுண்மாமரங்கொடிகீடமாதி
யின்புறவீன்றுமேவியில்லறத்தியல்பின்மிக்கான்
பொன்புரைகன்னியார்வங்காசிபன்புணர்ந்தமேன்மை
யன்புறவிசைத்தேம்யாவராயினுமடைந்துமூழ்கின். (கஎ)

காதலிற்கன்னியாதிகாமங்களனைத்துமீயு
மாதலிற்றீர்த்தராசனுமணிகன்னிமேன்மை
யோதலற்றுயருமென்னவுரைத்தனனும்பர்கோனிற்
பூதலத்தரசனுயபூபதிக்சறவோன்போத. (கஅ)

வேறு.

கலையுணர்காசிபன்கலந்துகாரிகை
யுலகினையருள்கதையுணர்ந்தமேலவர்
நிலைபெறுமைந்தருந்திருவுநேயமு
மலைவறுசெல்வமுமடைவராமரோ. (கக)

காசிபச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,எகூரு.

---

* ஓரிடத்து நெடும்போழ்து தங்கியிருந்து ஞானம்போதிக்க வேண்டுத லின், அதனை காக் தவிரும்படி கருதி, ஓர் முகூர்த்தகாலமே ஓரிடத்துத் தங் குதல் இவற்குரித்தென்று தக்கன் சாபம் விரித்தெமக்கிய, நாமும் அச்சாபம் வேட்கைதீர்விஷயத்தில் அநுகூலமாகுமென்று கருதி மேற்கொண்டனமெ ன்க. † வரன்-நாயகன். இது மேலுங்காட்டப்பட்டது.

# அதிதிச்சருக்கம்.

தேற்றுமாரமுதுருவமாய்த்தீஞ்சுவைத்தேன்போற்
சாற்றுமிக்கதைதாங்குடற்பயன்றருந்தகைத்தா
மூற்றுநீர்மணிகன்னியையதிதிசேர்ந்துயர்ந்த
பேற்றுவாய்மைமநீயுரையெனப்பேசினன்பெரியோன். (௧)

சுருதிநாயகனுருவமாமணிகன்னிதேர்ந்த
பெருமையாற் * பதின்மூவரைத்தக்கனாற்பெற்றுக்
கருதுகாசிபன்சாதலாற்கணங்குழையவரைப்
பருகுநாளவர்தங்களுளதிதிபாற்பரிந்தான். (௨)

திருவின்மிக்குயரழகினாற்சாற்பினாற்சிறப்பாற்
பருவமோர்ந்திடுமேவலாலொழுக்கினாற்பரிவாற்
பொருவிலாதுயரதிதிபாற்புரிவொடுந்நயந்தோன்
மருவுநாணிடைக்காசிபன்மலர்முகநோக்கி. (௩)

அணங்குநாறவியாற்றலாலறநெறிவழக்காற்
குணங்களாலுயர்தேவரைப்பயந்தியானுலவ
விணங்குவாயெனவன்பினாலாராத்தியெய்தி
வணங்குமாயிழையதிதியைமகிழ்ந்துவகுப்பான். (௪)

அரியசெய்கையேயாற்றியுமடைவதற்கரிய
பெரியதோர்பயனையினுமறைவனம்பேணி
வரியுலாமணிகன்னியிற்படிந்திடவாயும்
பரிவினாலவண்மேவியபரமனைப்பணிந்தே. (௫)

மிக்கவானவர்க்கன்னையாய்விளங்குதல்வேண்டித்
தக்கசீர்மணிகன்னியிற்சார்ந்து † சங்கற்பம்
புக்கவாய்மையாற்படிந்துபோற்றுதியெனிற்புரக்குஞ்
செக்கர்வார்சடைச்சிவன்கடிதேகெனச்செப்ப. (௬)

காதன்மாதவன்கரைந்திடுஞ்சொற்கொடுகடிது
வேதகானனமேவியேவிரிமணிகன்னிப்
போதருஞ்சூழ்தடமூழ்கியேபுரிசடைப்புனித
நாதனீரடிநாண்மலர்பணிந்திதுநவில்வாள். (௭)

---

* இப்பதின்மூவர்மகளிர் பெயர்களை முன்வரும் காசிபர்சிருட்டிச் சருக்கத்து ஆறுஞ்செய்யுளிற் காண்க. † சங்கற்பம் வேண்டிப்புக்க வாய்மையால் எனமுடிக்க. வேண்டில் எனவும் பாடம்.

பானிலாவிரிபனிமதிக்குழவிதேம்படர்நீர்
மேனிலாவியவிரிசடைவிமலனேபோற்றி
யூனிலாவியவுயிரெலாமொருங்குகாத்தளிக்கும்
வானிலாவிசூழ்மறைவனவரதனேபோற்றி. (௮)

ஆலமார்தருபசுங்களத்தமலனேபோற்றி
யேலவார்குழலிமயமாதெழில்பெறவிளங்குங்
கோலமார்தரக்குலவியகுழகனேபோற்றி
ஞாலமார்புகழ்மறைவனநாதனேபோற்றி. (௯)

ஆழிமான்முதற்றேவரோடெலமுமடங்கு
மூழிநாளினுமுலப்பறுமுண்மையாயோங்கும்
பாழிவாய்தரும் * பராற்பரம்பரித்தசின்மயமாம்
வாழிமாமறைவனத்துறைவரதனேபோற்றி. (௧௦)

சுருதிநாதனேதுகளறுஞ்சோதியேசுடரே
கருதுவாருளங்காதலித்தமுதமாங்கனியே
† மிருதிமாற்றியவிமலவானந்தமாம்விளைவே
தருதிவாழ்வுநின்சரணமேயரணெனத்தாழ்ந்தே. (௧௧)

குழைந்துபோற்றியவதிதியைக்கூர்த்தனெம்பெருமான்
றழைந்தகாதலாலெதிர்ந்துநீமணிகன்னிர்த்தடத்தின்
விழைந்துமூழ்கினையாதலின்வேண்டியதருள
விழைந்துகூறெனவியம்பலுமதிதியுமிரங்கே. (௧௨)

தேவர்தங்களுக்கன்னையாய்ச்சீர்பெறவேண்டு
மாவலின்னதென்றவள்சொலநன்றெனவருளிக்
காவன்மாயனுநின்னிடைக்கான்முளையாநம்
மேவலாலெனவியம்பியேபின்னருமிறைவன். (௧௩)

இன்னநாண்முதலித்தடம்படிந்தவரியார்க்கும்
பொன்னனூர்மகிழ்புத்திரர்பௌத்திரர்பொருந்தி
மன்னவீந்திடுமணிகன்னிநீரெனவழங்கி
நன்னர்வாய்மொழிமறைந்தனன்மறைவனநாதன். (௧௪)

ஆங்ககன்றுபோயதிதியுங்காசிபனமரும்
பாங்கறைந்திதுபரிவொடும்பணிசெயுநாளிற்
றேங்கமழ்ந்தபூங்கோதையுந்தீர்த்தநீர்ச்சிறப்பாற்
றாங்கிர்ச்சுடர்வமந்தரைத்தோமறப்பயந்தாள். (௧௫)

---

* பராற்பரம்பரத்துக்குப்பரம், முதற்கட்பரமென்றது இமூன்ளபரத்தை. † மிருதி-மரணம்.

* அரியமாமுதல்விண்டுவீருயபன்னிருவர்
விரியுமாநிலம்விளக்குதற்களித்துளமேன்மை
பரியுமாமகிழ்வெய்தினள்பண்ணவர்க்கனையாய்க்
கரியவேற்கணிகலந்தமையீதுவெனக்கரைந்தே. (கக)

சோதிமாமணிசன்னியின்சீரெலாஞ்சொற்றற்
காதியேயலாதெம்மனோர்க்கரிதலைடைந்தே
பூதியார்தருசிருட்டியுங்காசிபன்புணர்ந்தா
னீதியாயெனநாரதனிருபனுக்குரைத்தான். (கஎ)

வேறு.

ஈன்றனடேவரையதிதியென்றிநம்
வான்றருமிக்கரைமகிழ்ந்தவாழ்த்துவார்
தேன்றருமழலையருஞ்சிறுவர்ச்செல்வமு
மேன்றவரெய்துவரிணையிலின்பமே. (சஅ)

அதிதிசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ச, எஅக.

---

# காசிபர்சிருட்டிச்சருக்கம்.



கருணையாரின்பக்கடலெனப்பொலிந்தநாரதன்கழலிணைபோற்றி
யருணவேனிருபனுமாந்தாவருமறைபங்கமாகியநூ
ரெரு ‡ ணியாமகளுங்காசிபனிலங்குஞ்சீர்மயாகன்னியின்மேவி
வருணமார்சிருட்டிவகுத்தமைபெரியவாய்வழங்கெனமுனிவரன்வழங்கும்.

அலர்தலையுலகமழிந்தநைமுழுதுமாக்குதற்காதரம்பெருகு
மலர்மிசையுரவோன்காசிபன்றனைநீவழங்குதிசிருட்டியென்றுரைப்பப்
புலர்முகமாகிச்சிருட்டியாற்றுதற்குப்பொருந்தியசத்தியுமறிவு
மிலகிடாதிலகுமுபாயநீயுளதேலிசையெனமறையவனிசைப்பான். (உ)

வலம்புரியினங்கள்வயிறுளைந்தலறச்சலஞ்சலமருங்கணைந்தளிக்கு
மலம்புநீர்மறைசையவிர்மணிசன்னியாவியின்மேவிநீபடியி
னலம்புரிசிருட்டிநயந்திடுமெனக்குநறைமலர்மறைவனந்தோற்றம்
புலம்புரிந்தளித்ததெனவவன்போற்றிப்போயினன்மறைவனம்புகுந்தான்.

---

*அரியுமாமுதல் ஆதித்தர் பன்னிருவரை முன்னர்வரும் காசிபர் சிருட்டிச்சருக்கத்து ஏழாஞ் செய்யுளிற் காண்க. ‡ நியாமகன்-நியமனஞ் செய்பவன்; ஒருசொல்.

நறுமலர்விரிந்தநறைகவிழ்த்தளிகளினமேற்பாய்ந்து * நாகரும்பி
னுறுமணிகன்னியுவப்புடனுடியொளிருமத்தடத்தினைப்போற்றிச்
சிறுமதிக்குழவிச்சிவனுருவாயதீர்த்தமேசிருட்டிசாதுரியம் [வே.
பெறுமுறையளித்தியெனப்பணிந்தேத்தப் ○ பிறங்கியதுளத்திடைப்பெறு

இறப்பதுநிகழ்வுமெதிர்வதுமாகவியற்றுதற்கரியபேரறிவு
சிறப்பொடுதோன்றத்தெளிந்துளமகிழ்ந்துசிற்பரன்பொற்பதம்போற்றி
மறப்பறவேகிமனையிடைச்சிருட்டிமருவினன்மணிகன்னிவரத்தா
லறப்பயனுதவுசுரர்நராவுணராதிடரடைவினியறைவாம். (௬)

அதிதி, சிங்கிகையே, சுரபி, காலகை, சீரநாயுவே, குரோதை, யஞ்சுரசை,
திதி, தனுப், பிரபை, கத்துரு, வினதை, சீர்முனி, வெனப்பதின்மூவர்
மதிநுதன்மடவார்தக்கன்முன்னளித்தமங்கையரவர்தமைமணத்தால்
விதியுறப்புணர்ந்தானவர்கள்பாலுதித்தமேன்மையார்பெயரினிவிரிப்பாம்.

அரியமன், வருணன், மித்திரன், பூடா, வஞ்சனே, புரந்தரன், றுவ
ட்டாப்; பரிபகன், சவிதாப், பருச்சனி, தாதா, விண்டு,வென்பன்னிரண்ட
ருக்கர்; புரிகுழலதிதிகாசிபற்களித்தாள் † பொற்கணனிரணியனென்ன; விரி
தருபுகழார்தமைத்திதியளித்தாள்வீறுசாலருந்தவன்விழைச்சால். (௭)

வேறு.

மேயபுகழிரணியன்பாலுல்வருதித்தார்விளக்கமேன்மையாண்மை
ஆயவறம்பொறைசாந்திதுறவடக்கமிந்தியத்தின்றொடர்ச்சிமாற்றல்
பாயதவஞ்சத்தியமேயாதிபலநற்குணமேவடிவமானார்
தாயனையசங்கரனைத்தற்பரனையற்புதனைச்சரணஞ்சார்ந்தார். (௮)

ஆதியிற்பிரகலாதனவன்பினரனுகலாத
ஞோதியசங்கலாதன் கலாதனென்றுரைக்கும்பேரார்
தீதிலாப்பிரகலாதன்செய்விரோசனனு மற்றந்
நீதியான்மைந்தனாகுமாவலிநிகரிலாதான். (௯)

மாவலிவாணனென்னுமைந்தனையளித்தான்வண்மைத்
தாவறுமனுகலாதன்றனையராநிசும்பன்சும்பன
மேவிரோசனன்றனென்னவிளம்பினர் § விதுவையீரத்
தீவிழியிராகுதன்னைச்சிங்கிகைசிறப்பினீன்றாள். (௧௦)

---

* நாகரும்பினுறும்-இளமையாகிய அரும்புகளிற்றங்கும். ○உளத்திடைப் பெறப்பிறங்கியது-அச்சிருட்டி சாதுரிய அறிவானது மனத்தின்கட் டானே பெறும்படி விளங்கியது. †பொற்கணன்-இரணியாக்கன். இரணியன்-இரணியகசிபு. § விதுவையீரத்தீவிழியிராகுதன்னை-சந்திரனை ஈர்கின்ற அத் தீவிழியை யுடைய ராகுவை. ஈர்தல்-அரிதல்; என்றது, ஈண்டு மறைத்தலாகிய உபத்திரவஞ்செய்தன் மேற்று.

வனங்கடருவல்லிபலவகையிறெடுகடனதிசண்மற்றுமீன்று
ளினங்கடரு*மா, மறையோ, ரமுத, ருருத்திரரெனப்பேரெய்துநான்கு
சனங்கடமைச்சுரபியெனுநந்தையலளித்தனண்முனியாஞ்சாயனல்லா
ளனங்கடருமினியநடையரம்பையரைநிரம்பெழிலாலளித்தாளன்றே. (கஎ)

வேறு.

அலம்புசை, புண்டரீகை, திலோத்தமை, சுரூபை, யாக்க
மிலங்கிலக்கணை, நற்கேமை, யரம்பை, காமியை, சுகேசி,
நலம்பெறுசிதை, சுப்பூரு, மனோரமை, நயச்சுகர்தை,
பொலம்பொலிசுரதையோடு, சமுகி, யேர்பொழியுநீரார். (கஅ)

வேறு.

எழிலார்சரத்துவசி, யின்பப்பிரியை, யியற்சுவிருத்தை,யென
வழியாதொளிருமின்கொடியேயனையார்முனிபரலமர்ந்துதிந்தார்
மொழியார்தக்கனளித்தபதின்மூவர்சும்பாஞ்முதிர்காத
லொழியாதமருங்காசிபனுமுரவோன்சிருட்டியுரைத்தனவே. (கசு)

வரிசூழ்மலரார்மணிகன்னிமருவிப்படிந்தவண்மையினு
லரியார்நீலமலர்த்தடங்கணன்னமனையார்தமைமேவிப்
பரிவாலுலகமுழுதினையும்படைத்தேயறவோர்பலர்போற்றும்
பெரியோனுசிக்காசிபனுமடைந்தானமலப்பேற்றினையே. (உ0)

செங்கண்மாயன்முதலாயதேவர்யதமூர்திரையாழி
யங்கண்ஞாலமுழுதாளுமரசுமழியாப்பெருவாழ்வுந்
திங்கண்முடியோனருள்வாயுஞ்சிறப்புஞ்செழும்போதினமூற்றும்
வெங்கண்மேயமணிகன்னியளிக்கும்படிந்தார்விரும்பினவே. (உக)

வேறு.

மல்லலஞ்செல்வம்பலவளமடவார்மைந்தராரோக்கியமாயுள்
சொல்லருமின்பந்துறவறங்கல்விதூய்மைசீர்வாய்மைசொல்வன்மை
யெல்லையில்பலவுமிம்மையேயளிக்குமியன்மணிகன்னியின்மேன்மை
வல்லவர்யாரேமறையவர்தன்மையிதுகொடுகௌசிகன்வாய்ந்தான். (உஉ)

வேறு.

அளப்பரும்பெருமைத்தாகுமறிந்தனவுரைத்தேனன்ற
வளப்பலமலரிற்சூழுமணிகன்னிவழங்குகாதை
யுளப்படக்கேட்போர்சொல்வோருயர்கதியுலகமேவி
விளக்கமோடமர்ந்துவேண்டும்பயனெலாம்விளைப்பரென்றும். (உங)

காசிபர்சிருட்டிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க, அ0ச.

* வானவரயோர்-வவம். மறையோருமென உம்மைத்தொகை. ஆ-பசு.

ஆய்ந்தமறையோர்கொலையாதியயுதமயுதமாற்றிடினுந்
தோய்ந்துபடியிற்றுகளாகுந்தொலையாவின்பநிலையாவார்
வீய்ந்துபிறந்துமெலிந்துழல்வாரதிநற்கரிதாம்விமலனருள்
வாய்ந்தபுனிதர்க்கெளிதாகுமற்றையவர்க்குமதிப்பரிதால். (௮)

பையாடரவம்பரிகிமகிபருகுநன்ஞான்றுள், விதிபாத,
மையாரமை, பூரணை, கதிர்நாண், மருவுந்திங்கட்பிறப், பயனம்
பொய்யாவருசங்கோதயமே, * மாவுதய, மற்றும்புகனான்குள்
மெய்யார்வேதநதிப்படிந்தார்விமலராவார்வினையறவே. (௯)

பலவுமுரைத்தென்பனுமக்கோன்பகுவாயனந்தானமுதலானோர்
நிலவுமொழியதன்பெருமைசிந்தித்திங்கெடுத்தாய்முடியாதாற்
குலவுந்திருவும்பெருந்தொளியுந்துறையாவுறியுந்தெறிஞான
நலமுமழியாதுயர்விட்டினையுமுமாறுணையர்தம்மே. (௧௦)

வேறு.

† நாவணியும்புகழ், நாமந்,சவுநாகன், கௌசிகன், மேனகை, திலோத்த
மாவனிதை, திரிசங்கு, மறைப்பனயத்தன்மையுபதேசம்,
பாவனையாக்கியவற்ச, முத்தாலன், பசிநாசிகேது, பண்பார்
தாவருணன்புகழ், சூகுமாரன், மணிமாதன், மகாசமச்சன்றுனை. (௧௧)

திருமா, லிந்திரன், பிரமசிருட்டி, யனைத்தருத்சாபந்தீசேடன்றீர்த்த,
லொருவாதவங்கிபற, லிவைசருக்கத்துரைப்பனவாமொழியிலாத
திருவாரும்வேதநதிச்சிறந்தடைந்தார்சிலரதியப்பெரிப்பேயீந்திற்
பெருவாழ்வுற்றவர்முழுதும்பேசவெனின்முடியாதுபெருகுமன்றே. (௧௨)

---

* மாவுதயம்-மகோதயம். † வேதநதியின் புகழ், வேதநதியின் அட்டோத்தரசதநாமம், சவுநாசனசரித்திரம், விசுவாமித்திரர் மேனகைசம்வாதசரித்திரம், திலோத்தமை சரித்திரம், திரிசங்குசரித்திரம், விசுவாமித்திரருக்குத் தருமோபதேசஞ் செய்தசரித்திரம், யாகவற்கியர் சரித்திரம், உத்தாலகநாசிகேது சரித்திரம், நாசிகேது நிரயவருணசரித்திரம், வருணன்சரித்திரம், சூகுமாரன் சரித்திரம், மாணிமாதர் சரித்திரம், மாகாசமச்சியர் சரித்திரம், திருமால்பெருமாறீர்ந்த சரித்திரம், இந்திரன் பாவஞ்சிந்திய சரித்திரம், பிரமாதிசிருட்டிச்சரித்திரம், சேடன்பாவவிமோசனசரித்திரம், அக்கினிதீர்த்த விசேடமாகியஇத்துணையும் வேதநதியின்விசேடத்தையுணர்த்துவனவாம். அவை அவ்வச்சருக்கப்பெயரால் உரைக்கப்படுமென்க. இவற்றுள் வேதநதியின்புகழ், வேதநதியின் அட்டோத்தரசதநாமமாகிய இரண்டும் இவ்வேதநதிச்சருக்கத்துள் அடக்கிக் கூறப்படும். கௌசிகர்மேனகைசம்வாதம் ஓர்சருக்கத்தாற்கூறப்படும். ஏனையதனித்தனி கூறப்படும். அட்டோத்தரசதநாமம் எட்டைப்பின்னுடைய நூறுநாமம். எனவே, நூற்றெட்டுநாமமென்றவாறாயிற்று. சமவாதம் -எதிர்ப்பேச்சு.

வேறு.

பண்ணவர்குழுவிற்கண்ணுதலெனவும்பருப்பதக்கணத்துயர்பசும்பொற்
றிண்வரையெனவுஞ்*சுடருடுக்கணத்திற்றினகரன்செழுமதியெனவும்
பெண்ணியலவரிற்பார்ப்பதியெனவும்பேசுமூவுலகுறுந்தீர்த்தத்
தெண்ணியவேதநதிமிகுமேன்மையேய்ந்திடுமிருமையுமீந்தே. (௧௯)

வேறு.

முற்றுமுலகத்துறுதீர்த்தமுழுதுமுறையாயிரம்படியி
னுற்றபயனும்வேதநதியொருகாற்படிந்தபயத்தினுனுப்
பெற்றதாகாதருமறையிற்பேசுமகமாயிரமியற்றிப்
பற்றுபயனுமாயிரத்தினொன்றுக்கொப்பாம்பண்பிலதே. (௨௦)

சீவன்முத்திச்சிறமீதிற்படிந்தோரெளிதேசேர்ந்தமல
மாவரிதற்குநேருலகத்துளதோவயிராவதப்பாகன்
றேவரிரங்கும்பிரமகத்தியாதிற்றீர்ந்தான்சிவஞானத்
தோவில்பரமாமின்பவுருவுற்றார்யாதிறுரவோரே. (௨௧)

மறிமான்யாதிற்படிந்தமரர்மாதராகிவயங்கியதோர்
குறியார்சாபமேனகையுங்குமைத்தாள்யாதினிற்சோறும்
வெறியார்யாதிற்படிந்துதிசைவென்றானுனைதற்படிந்தே
நெறியார்வசிட்டன்சாபத்தினீங்கிவசுக்கணிலைபெற்றார். (௨௨)

அன்னசாபந்தனிற்சேடனகன்றன்றுருவனரியபதந்
தன்னையடைந்தான்சுதாசன்சாய்ந்தான்வினையைத்தனிஞானம்
†பின்னைகேள்வனடைந்துய்ந்தான்பேசிற்பிறரும்பலருளராற்
புன்னைகமழும்வேதநதிப்படிந்தேபுனிதப்பொருளானார். (௨௩)

அயனும்யாதிற்படிந்துலகமளித்தானகிலத்திடையெவரே
பயனுரிதனிற்படியாதேபகவரானுரித்தகைய
நயனுர்வேதநதிப்பெருமைநம்பனல்லான்மற்றெவரே
வியனுலுரைப்பாரிதனும்விடியவோதின்வீடெளிதே. (௨௪)

சொல்லற்கரியமேன்மையுறுந்துகடீர்வேதநதியிலதே
லல்லற்பிறவித்துயரெதனுலகல்வாரதனிற்றினந்தோயிற்
புல்லற்கரியகிரிச்சிரமெட்‡டொன்றிற்குறுவார்புகல்விதியான்
மெல்லப்படியிற்பரிமேதநூற்றின்பயனைமேவுவரால். (௨௫)

---

* சுடர்க்கணத்திற்றினகரனெனவும், உடுக்கணத்திற் செழுமதி யெனவும் என நிரனிறைப்பொருள்கோள். † பின்னை-இலக்குமி. ‡ ஒன்றிற்குறுவார்- ஒரு ஸ்நானத்தாலடைவார்.

அருக்கன்வாரத்ததற்கிரட்டியாம்,பூரணையினைந்திரண்டாம்
பெருக்கும்பயனுந், * தினக்குறையினிருபான்பிறக்கு,மட்டமிநாட்
குருக்குமுப்பா,னூற்பஃதாங்குலவுமமையி,னைம்பானூந்
திருக்கிர்பயனும்வைதிருதிவிதிபாதங்கடெரித்திடினே. (உசு)

† செவ்வாயபரபக்கத்துச்சேரும்பதினான்கெனுநாளி
லவ்வாப்ப்படியினிருமுப்பா,னைம்பதிரட்டிமதிப்பிறப்பிற்,
றெவ்வாய்வினைச்சுவருந் ‡ திங்கட்சேர்ந்தவுடுவினிருநூ,றொன்
றெவ்வாமுந்நூறெனுங்குணிமுயர்ந்தயுகாதிச்சொனிர்வேலோய். (உஎ)

நூறுநான்காமனுவாதி, § செயந்திமுறையினைந்நூறும்,
பேறுவழங்குசிவநிசியினாறுநூறுமு,பிறங்குமனக்
கூறுமெழுநூ,றெண்ணூறும்விடியவங்,குறிப்பதமதிநாளிற்
றேறுமமையொன்பதுநூ,றுயிரமாமருக்கன்றினத்துறினே. (உஅ)

அரவுமதியம்பருகுநாளயுத,மிலக்கமருக்கனையேற்,
பரவுமருத்தோதயத்திலக்கம்பத்துக், கோடிமகோதயமேல்
விரவுமாகமகத்தனந்தமேவும்பயனு,மத்தினத்திற்
பரவும்வேதநதிப்படிந்தார்பரமனுவர்படிமிசையே. (உகூ)

மாகமகத்திற்றேவரொடுமாலுமயனுமற்றையரும்
வேகமிகுத்துவேதநதிவீழ்ந்துபடிவரந்நாளிற்
றுசமுறச்சென்றதிற்படியுந் ○ தக்கோர்முத்திதலமளித்தற்
கோகையுறுத்துமபிடேகமுற்றார்பரமனுருப்பெற்றார். (௩௦)

வானம்பரவும்வேதநதிமாகமகத்தின்மகிழ்ந்தாட
லூனம்பயிலுஞ்சி + சமுசாரவுழவோயாரோக்கியநான
மானமயராமிருக்குருப்பமருவுங்கதிராம்,வரும்பிறவிக்
கானங்கனற்றுந்தாவ, = முயர்கதியிற்கமழுங்கடிவிளக்கே. (௩௧)

---

* தினக்குறை-தினச்சித்திரமென்பது மேலுங்காட்டப்பட்டது. † செவ்வாயபரபக்கத்துச்சேரும்பதினான்கெனுநாள் - கிருட்டிணங்காரகசதுர்த்தசித்தினம். யுகாதி என்றது சதுர்யுகாதிகளையும். ‡ திங்கட்சேர்ந்தவுடு-மாதநக்ஷத்திரங்கள். அவைமேலே அந்தர்க்கிரகயாத்திரைச்சருக்கத்து இரண்டாஞ்செய்யுட்குறிப்புரையிற் காட்டப்பட்டன. § செயந்தி-கிருஷ்ண செயந்தி; கிருட்டிணனது பிறப்பு. செயந்தி-பிறப்பு. ○ தக்கோரே மோக்ஷராச்சியத்தைப்பாதுகாத்தற்கு அபிஷேகிக்கப்பட்டவர் என்பதாம். + சமுசாரமாகிய உழவுநோய்நீக்கத்துச்செய்யப்படும் ஆரோக்கிய ஸ்நானமாம். = உயர்கதியிற் கமழுங்கடிவிளக்கு - மோக்ஷமாகிய வீட்டு வாய்தலிற் [illegible]

வேதநதியிற்படிந்தார்க்கேமேலாமுலகம்வீட்டின்ப
மோதவுளவாமதிற்படியாருலவாப்பிறப்பிறெழியாத
* வாதரவர்க்குக்சதியெவணுமமலமாகுமத்தீர்த்தம்
போதமளிக்குமுயர்சீவன்முத்தராகப்புணர்த்திடுமே. (௧௨)

ஏற்றந்திகழும்வேதநதியம்புநாமநூற்றெட்டுந்
தேற்றந்தரவுச்சரித்ததனாற்சுகுமாரன்சிவப்பெற்று
ஞற்றுமணிமாதனுமின்னுமனேகர்பெற்றாரியானுமருண்
மாற்றமதனாற்சிவஞானவாழ்வுற்றனன்மாவடிவேலோய். (௧௩)

என்னவுரைப்பமார்தாதாவெழுந்துபோற்றியிலங்குயறை
முன்னமுணர்ந்தோய்வேதநதிமொழியுநாமநூற்றெட்டுஞ்
சொன்னமுறையும்பெறுஞானத்தொடர்வுமுரைத்தியெனப்போற்றம்
மன்னனுரைப்பநாரதனும்வாய்மையினிதுவகுத்துரைப்பான். (௧௪)

ஐந்துமடக்கிச்சிந்தைவெளியாக்கியமலத்தரியதவ
நந்தவியற்றுமெனக்கருளாநளினப்பொருட்டினயந்துறையு
மெந்தையெதிர்வந்தனைச்சருள்வரேதென்றிசைப்பவிரங்கிவனையேற்
பந்தமறுக்குமெய்ஞ்ஞானம்பணியென்றுரைப்பப்பரனருள்யான். (௧௫)

அரியமறையின்சிரப்பொருளையாய்ந்துஞ்சார்திமுதலேயந்தந்
திரிவுகவற்சியகன்றமலஞ்சேர்வதரிதாந்திகழுமறை
புரியுமமலவேதநதிபுரிந்துநாமநூற்றெட்டுந்
தெரியநவிற்றினுறுஞானஞ்சீவன்முத்திதெளிவெளிதே. (௧௬)

இனியநாமநூற்றெட்டுமிசைத்தேயானுமிருணீங்கிப்
புனிதனுனேனென்னவசலப்புணரியணவும்வேதநதி
யுனியானடைந்துபடிந்தமலமுற்றநாமமியமமுன்
பனியார்கூலமமர்ந்துரைக்கும்பணியானுளுமபகர்ந்தனனே (௧௭)

திங்களிரண்டுநியமத்திற்செல்லத்திகழுமொருவாணி
யங்கணெழுந்துநீயியற்றுமறத்திற்றுதியானிசமகிழ்ந்தேம்
பங்கமகற்றும்பரஞானம்பணித்தேஞ்சீவன்முத்தியினற்
கெங்களுதன்றனைப்பரவியேத்திச்சமியினிடத்தேய்ந்தே. (௧௮)

கணமங்குறையிற்சனற்குமரன்கலந்தன்கருத்திற்கதிர்ஞானக்
குணமொன்றிமொறருளுமெனக்கூறிமறையக்கோதிலருண்
மணமென்றில்கும்வாய்மையினைமகிழ்ந்துவேதநதியாடி
யிணர்கொண்டிறைஞ்சித்திருநாமமேத்தியிறைவன்றனைப்போற்றி. (௧௯)
நன்

மார்க்கண்டேயனந்தியிவர்வரம்பிலாயுட்பெறுகையினு
லேற்குமாயுட்காம், பிரபுவெனும்பேர்பிரபுத்துவமளித்தே
நோற்குமவர்க்குச், சேட்டமெனநுவல்வருலசத்துறுந்திர்த்தப்
பாற்குக்கழியாவிணையகற்றிச, சிரேட்டமுயரும் * பதமளித்தே. (சஅ)

வேறு.

தருவனற்பரத்திரீஇப்பரம்பாரமாந், சேரய்ந்தார்
பெருவிகற்பறவுலகுO சனமாத்திரம்பெறலான்
மருவுஞ்சத்துவம், படிந்தவர்சுத்தராய்வயங்குந்
† திருவளித்தலாற்சுத்தமென்றிப்பெயர்திகழும். (சகூ)

அதிமசத்துவஞ்சனற்குமாரற்களித்ததனுற்
றுதிமகத்தெனச்சொறபெறுந், துணையில்பேர்ப்பூர்த்தி
மதியளித்தலாற்குகை, மனவாக்ககன்மகிமைக்
கதிதரித்ததல்வியத்தமாங்காரணங்கலந்தே. (ருO)

நோயினுற்பவமுதலியதறுமலாற் ‡ பகுதி,
மேயசுக்கிலஞ்சுத்தசத்துவத்திணைவிளக்கப்,
பாயதிச்செலாம்படிந்தவருருவவெற்பகிரா
யேயநல்கலால்விராட்டெனுந்தருப்பெயரெய்தும். (ருக)

தாரமாம்பவங்கடத்தலாற், சமாதிசமிராக
மீரலாற்,சௌக்கியதம்டாக்கியற்குரனீந்தே,
யோரினித்தியமின்பறிவானந்தவுருவஞ்
சாரநல்கலாற்சச்சிதானந்தமாந் § தனியே. (ருஉ)

பேதமற்றுமுக்காலமுஞ்சாசுவதம், பெருவான்
மீதமர்த்தலாற்சுவர்க்கதம், வேதநாயகனைபாற்
காதலுய்த்தலாற்பத்திதர, O மாசமச்சியனுக்
கீதளித்தலான்மந்திரசித்திதமினிதே. (ருஙூ)

ஓல்கறீருணர்வுதவிவைகுண்டத, மயனூர்
கல்கலாலிதுசத்தியலோகதநாமம்
புல்லு, மாடினருளத்தருட்சோதியைப்புணர்த்தே
‡ யெல்லையீர்சுயஞ்சோதியென்றிதன்பெயரிலங்கும். (ருச)

---

* பதம்-பக்குவம். † சத்மாத்திரம் சன்மாத்திரம். சத்து எனறது, ஈசுரனை. திரு - ஞானம். ‡ பிரகிருதி தமிழிற் பகுதி யென்றாயிற்று. § ஈண்டுத் தனி என்றது சமானுதிகரணிதமாகிய வேதநதியை. O மாகாசமச்சியன் எனற்பாலது மகரவீற் றுகரமிற்று. ‡ எல்-இருள்.

ஏகமாமுணர்வளித்தலான்மேதைத, மிலங்கும்
போகமாப்பெறவளித்தலாற்றிருவென்பர், பொலிமான்
பாகனூர்நாலாற்சிவலோகதம், பதும
ஞாகமீந்திஃதிரணியகருப்பதமாமே. (ருரு)

வறுமைநீக்கலாற்றரித்திராரமெனவாயுஞ்,
செறுமசந்தையையொழித்தொருதெளிவுறச்சேர்த்திப்
பெறுவதவ்வியாகிருதமென்பெயரினைப், பழிச்ச
லுறுதல்காண்டலாற*றுரிதமீர்த்தரியெனவோங்கும். (ருசு)

துன்பநோயொடுதுடைத்தருத்திரனென்பர், தொருத்தே
யின்பமார்தருவியாபகமவிட்டிறையென்பர்,
வன்பதாம்பிறப்பிறப்பவமாற்றலினரனு
மென்ப, ரஞ்சமென்றிலங்குமாவுலகிலக்கிடலால். (ருஎ)

பாயசங்கையேமுதலியநதியுறும்பாவந்
தியநல்லியங்கவற்றிருக்குயிரெனச்சிறந்தே
யாயகுத்திரான்மாவென்ப, சிவத்துவ † மகிசந்
தோயநல்கலாற்சதாசிவமெனப்பெயர்துன்றும். (ருஅ)

புவனிமேற்பொலியுயிர்த்தொகைமுழுதியிற்பொருந்தப்
பவமகற்றிவைசுவாநரப்பெயர், படிந்துயிரு
ளவமியற்றுமஞ்ஞானமீர்ந்தந்தரியாமி,
தவமிருந்திருநல்லியீச்சுரப்பெயர்சாரும். (ருகூ)

மாணுமாதருக்கிதனிடைப்பரசிவனைவழங்கிப்
பேணிவாய்ந்ததுதேவபூடணமெனும்பெயரே,
பாணியாதுறுஞ்சனசமுக்கிலமமேபயிற்றிக
‡ காணிமேயதுசங்கரமெனும்பெயர்கலந்தே. (சுO)

தோற்றமார்தொழிற்சுயம்புவேதுணியவாற்றுதலா
லேற்றசுப்பிரகாசமாம், பரசிவற்கிமையோர்க்
சாற்றலார்நிலையளித்தலாற்றேவராவாச
மாற்றமேயது, சிவாலயஞ்சிவனுமைவாழ்ந்தே. (சுக)

உழைநடுக்கினீருற்றரமகளுருவாகித்
தழையநல்கலாற்றிரியக்குமுத்திதந்தானும்,
விழையுமேனகைகௌசிகன்சாபவெந்துயரக்
குழைவுதீர்த்திதுவாந்துக்ககரமெனுங்குறியே. (சுஉ)

---

* துரிதம்-பாவம். † அகிசம்-சதாகாலம். ‡ காணி-உரிமை.

குட்டநோயறவசிட்டனுக்குதவலாற்குறியுந்
தொட்டமர்ந்தரோகாபகஞ், சொற்றதாய்சாபம்
விட்டனந்தனுதியர்சுபமேவலாற்சுபதந்,
* தட்டவாரெருரீஇத்திலோத்தமைசாபமோசனமாம். (சுக)

அளவிறீவினைகனற்றலினங்கியாம், பிறவிக்
களையகற்றலிற்சன்மகந், கடனெனுமூன்று
முளமலிந்தகான்முனைமகமாதியையொழித்தே
தளைவிடுத்தலாலிரணமோசனப்பெயர்சாரும். (சுச)

ஞானமின்றியேபிராசினயோக்கியனவையா
யீனமாம்பிறப்பிரிக்துமேல்வீட்டினையிமையத்தற்
கானதாற்கருப்பாசயகரமென்ப, ரழியா
வூனமீர்தலிற்றீர்த்தாதிராசனுமுதுவே. (சுரு)

பாசவல்லிவேர்பறித்தலாற்பாசக, மிருளீர்ந்
தாசில்சத்துவமளித்தலால்விரசற்சமாகு,
மூசலாமுயிர்ச்சோகத்தையொழித்தலால்விசோகந்,
தேசினூர்மறையளித்தலாற்றிருமறையுருவாம். (சுசு)

ஆரணப்பொருளாக்கலாற்பராண்மக, மமரோங்
காரமாம்பிரணவப்பயன்காட்டலா, னமிர்தம்
பூரணத்தொடுசிவன்முத்திப்பயன்புணர்த்தி,
வாரமுற்றறம்வளர்த்தலாற்றருமவர்த்தனமே. (சுஎ)

பரவையோடுறலால்வருணாலயம், பயில்பாற்
கரமதாந்தனிச்†சிற்புரணத்தினைக்காட்டி,
யிரணியஞ்சாலிகோத்திரற்கீதலாற்றனதம்,
விரவுபல்வினைவீட்டலாற்கருமநாசகமே. (சுஅ)

சிவன்முத்திதம்வருணனுக்கஃதருள்சிறப்பா,
லாவலானித்தியளகையாற்களித்தலானிதிதந்,
தேவிவைகலாற்சருவமங்களப்பெயர்சேரு,
மேவுபந்தத்தைவீழ்த்தலால்விக்கினகாரி. (சுகூ)

வேறு.

பொன்னிவினைமாற்றுதலாற்கலிதோடகரமாகும், புகர்தீர்வித்தை
தன்னையளித்தேசாரசுவதமாம், வியாதன்முதற்றலைவர்க்கெல்லா
மந்நிலையிற்றிரியாதஞானமளித்தச்சுதமா,மதனுக்கொப்பொன்
றின்மையினுலத்துவிதம், வசுச்சாபவெரியீர்ந்துசமனமீதாம். (எ0)

---

* தட்டல் (தேவத்தன்மையைத்) தடுத்தல்; ஈண்டுச் செயப்பாட்டு வினைப்பெயர். மறையுரு - வேதமூர்த்தம். † சித் - ஞானம். புரணம் - பிர[illegible]காசத்தை உதிப்பித்து.

பாவதாவாக்கினியாமிந்திரற்குப்பிரமகத்திபாற்றலாலே,
* யோவநீள்பிறவிவினையுதவுதலான்மருந்தாகு,மொழித்தஞ்ஞானஞ்
சாவலாய்மலாபசமா, மறைத்தெளிவுகேகயற்குக்காட்டலாலே
தேவபூடணமதுதான்வேதாந்தவேத்தியமாய்ச்சிறந்ததன்றே. (௭௧)

சொற்றகௌசிகன்சரையைத்துடைத்தலினூற்சராபகமாஞ், சுசுமாரன்
பற்றுசனியளித்தலிற்சாயுச்சியமேயநவியொடுபட்டதாகும்,
வெற்றியுறுசாரகனேமுதலசுரர்கிளைகுமரனைவீழ்ப்பாகல்கிப்
பெற்றபிரபஞ்சனமாஞ்,சகற்குருவாமரிஞானம்பெறுதலாலே. (௭௨)

பார்த்தனிதிற்படிந்தமரர்ப்பயமுறுத்துநிவாதகவசாதிபாவங்
கூர்த்தகிளையரித்தலினனமகாசித்தசர,மூழ்குனிறுங்குன்ற
நீர்த்தலினலவ்வியபய,மவித்தியாசத்துருவாங்கொள்வியேகல்கி,
யார்த்தலினற், றேவாதிபூசிதமாமமரார்த்தனிச்சைசெய்தே. (௭௩)

சருப்பிரமசாயகரஞ்சவுதாசனிருதவுருத்தணத்தலாலே,
வரும்பவனிமாவலிக்கிமையோர்வானளக்க†புலத்தியன்றன்மகனுக்கிந்தே
விருப்பியவிந்திரனிதிவிபூஜகமா, நந்திவிநாயகனுக்கெட்டெட்
டருப்புகலையளிக்கையினற்கலாநிதியாம்,வசிட்டன்முதலாயமேலோர். ( )

வேறு.

புகழ்தலினலநற்குமுனிதுத்தியந், சாருப்பியத்தைப்பொருந்தியின்பாற்
றிகழ்தலின்முன்முசுகுந்தன்றீர்த்தஞ்சாருப்பியதாயக, மஞ்ஞான
மகற்றலினலஞ்ஞானமோசனமாஞ்,சுகர்வாமதேவராதி
யிகமுமலமிரித்தான்மஞானமகோதயமாகுமினபமீந்தே. (௭௫)

எச்சமறுயாக்கியவற்கன்சனகனுதிசுகனேனையோரும்
விச்சையொடுசீவன்முத்திநிலைமேவியானந்தவேலையாகி
யச்சமகன்றமர்தலினலவ்வப்பேர்மிடிபாவமாதியீர்ந்தே
கச்சமில்காரணநாமங்கவினீந்துந்தேவர்கணங்கலந்துமாதோ. (௭௬)

பெரியபயன்றருநாமநூற்றெட்டும்பயனுணர்ந்துபேசுமேலோர்க்
கரியனவொன்றிலையாக்கம்புகழாயுக்கவின்பேற்றமருள்சீர்ஞானந்
தெரியவருசீவன்முத்தித்தெளிவுகதிதிருப்பலவுஞ்சேர்ந்துவேதம்
பரியுமறைவனநாதன்பங்கயத்தாளிணையின்பப்பரவைசேர்வார். (௭௭)

---

* நீள்பிறவிவினையோவவுதவுதலான் எனக்கொண்டு கூட்டுக. பிறவிவினை - பிறவியும்,வினையுமென உம்மைத் தொகை. † ஈண்டுப்புலத்தியனென்றது பௌலத்தியனாகிய விச்சிரவாகுவை; புலத்தியசம்பந்தமுள்ளவன் பௌலத்தியன். இச்சம்பந்தப்பொருள்பற்றி இராவணனையும் பௌலத்தியனெனக்கூறும்.

வேறு.

சூசுமாரன்றுதித்துக்கதிமாணிமாநனெனத்துன்னிவாழ்ந்தா
ஞசுநீர்த்தியாக்கியவற்கன்முதலோரிதுநவிற்றியமலமாஞர்
பேசின்மூவுலகினிடைப்பெறற்கரியபெருகும்பிறங்கும்வேத
மாசிலாமணியருளின்வடிவாகுமிந்நாமம்வயங்கும்வேலோய். (எஅ)

வேறு.

அறவோனுரையாரமுதாமெனவே
பிறவாநெறியீடொடுபேணியநா
னறவார்தருநாரதனுண்மலரோ
நிறவாகியபாதமொராய்மனனே. (எக)

வேதநதிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,அஅங.

---

வேதநதியின் அட்டோத்தரசத நாமமும்,

அர்த்தமும் வருமாறு:—

க. வேததீர்த்தம்:—வேதங்களுக்குச் சுத்தத்தைக் கொடுத்தது. தீர்த்தம்-சுத்தம்.

உ. சத்தியநதி:—சத்தியகிரியிலிருந்து உற்பத்தியானது. சத்தியகிரி-வேதாரணியம்.

ஙூ. பாவநாசம்:—கோலாசனது மாதிருகமன பாவத்தை நாசஞ்செய்தது. நாசமெனினும், நாசனமெனினுமொக்கும்.

ச. பிரமம்:—சர்வலோகங்களினும் சதாகாலமும் சொல்லப்படுவது. பிரமம்-சொல்லப்படுதல்.

ரு. புத்திரதம்:—அதிதிக்குப் புத்திரர்களைக் கொடுத்தது. தம்-கொடுத்தல்.

சு. காமதம்:—மயித்திரேயி, கார்க்கி, என்னும் இருபெண்களுக்கும் அவர் விரும்பியவைகளைக் கொடுத்தது. காமம்-விருப்பம்.

எ. இராச்சியதம்:—பாண்டவர்களுக்கு இராச்சியத்தைக் கொடுத்தது.

அ. உருபௌதரியதம்:—மேனகைக்கு உருபத்தையும்; விசுவாமித்திருக்கு ஔதாரியத்தையும் கொடுத்தது. ஔதாரியம்-கொடை.

கூ. வேதநதி:—வேதங்கள் தம்பெயரால் இத்தீர்த்தம்வழங்கப்படுக எனச் சிவபெருமானை வேண்டிக்கொண்டபிரகாரம், அப்பெருமானால் வேதநதிஎனப் பெயர்கொடுக்கப்பட்டது.

௧0. மூத்திதம்:—சுவேதகேதுவுக்கு முத்தியைக் கொடுத்தது.

௧௧. விபு:—பிரமம் எங்கும் வியாபகம் என்று முணர்வை,ஸ்நானஞ்செய்த சர்வமனிதரும் விளங்கிக்கொள்ளும்படி செய்தது.

௧௨. கீர்த்தியாரோக்கியப்பிரதம்:—கீர்த்தியையும், ஆரோக்கியத்தையும், மிகவும் கொடுத்தது.

௧௩. தாபகாரி:—திலோத்தமைக்குச் சாபமுதலிய தாபங்களை அரித்தது. தாபம்-துக்கம்.

௧௪. ஆயுட்கரம்:—மார்க்கண்டேயர், நந்திதேவராகிய இருவருக்கும் பூரணாயுளைச் செய்தது.

௧௫. பிரபு:—சனற்குமாரமுனிவருக்கும், யோகிகளுக்கும், பிரபுத்துவத்தைக் கொடுத்தது. பிரபுத்துவம்-நாயகத்தனமை.

௧௬. சேட்டம்:—திரிலோகதீர்த்தங்களும் நிவிர்த்தி செய்யக்கூடாதபாவங்களை நிவிர்த்திசெய்த முதன்மையையுடையது. சேட்டம்-முதன்மை.

௧௭. சிரேட்டம்:—சண்டாளத்துவமடைந்த திரிசங்கு ஓர் ஸ்நானத்தாலே திரிலோக சிரேட்டத்துவத்தை அடையுமாறு செய்தது.

௧௮. பரம்பாரம்:—துருவனுக்கு அதியுன்னத பதத்தைக் கொடுத்தது.

௧௯. சத்துவம்:—உலகம் பிரமத்தையன்றி வேறில்லையெனச் சுவேதகேதுவுக்கு உண்மை யுணர்த்தினது. சத்துவம-உண்மைததன்மை.

௨0. சுத்தம்:—சனகாதியோகிகளுக்குச் சுத்தசைதன்னிய ரூபமாகிய சிவஞானத்தைக் கொடுத்தது.

௨௧. மகத்து:—சனகமுனிவருக்கு மகாயோகிராசத்தன்மையை உற்பத்தி செய்தது. யோகிராசததன்மை-யோகிகளுக்கு இராசாவாந் தன்மை.

௨௨. குகை:—இருதயத்திலே ஞானம்பிரகாசிக்கச் செய்வது. குகை-இருதயம்.

௨௩. அவ்வியத்தம்:—தன் மகிமையின் அற்பந்தானும் மனவாக்குக்களுக்கு வெளிப்படாதது.

௨௪. பிரகிருதி:—ஸ்நானம் செய்தவர், சிருட்டிமுதலிய முத்தொழிலும் செய்தற்குப் பிரகிருதிபோலக் காரணமாயுள்ளது. பிரகிருதி-பிரபஞ்சமூலமாயை.

௨௫. சுக்கிலம்:—ஸ்நானம்செய்தவர்க்குச் சுத்த சத்துவகுணசுபாவத்தை விளக்குவது. சுக்கிலம்-வெண்மை. சுபாவம்-தன்மை.

௨௬. விராட்டு:—ஸ்நானம் செய்தவர், சகத்தை ஆன்மரூபமென மதிக்கும் புத்தியோடு மிகவும் பிரகாசிக்கச் செய்தது. இனித்தன்னிடத்து ஸ்நானஞ் செய்தவராகிய சரீரகாந்தி பரந்த திக்குக்களினெல்லாம் சூரியனை

ப்போலப் பிரகாசிக்கும்படி செய்வது விராட்டு எனச் செய்யுட் பதப் பிரயோகத்துக்கேற்ப விரித்துரைத்துக்கொள்க.

உ௭. தாரம்:—சனனசாகரக் கரையேற்றுவது. தாரம்-கரையேற்றுதல்.

உ௮. சமாதிதம்:—சமம் முதலியவைகளைக் கொடுத்தது. சமம் முதலியவாவன-சமம், தமம் என்பன. சமம்-மன வடக்கம்- தமம். பொறியடக்கம்.

உ௯. சௌக்கியதம்:—யாக்கியவற்கியமுனிவருக்குப் பிரமஞானத்தைக் கொடுத்தது.

௩0. சச்சிதானந்தம்:—சத்துச் சித் தானந்த ரூபமாயிருப்பது. சத்து-நித்தியத்தன்மை யுள்ளது. சித்து-ஞான ரூபந்தன்மையாயிருப்பது. ஆனந்தம்-சகல இன்பங்களுக்கும் ஆதாரமாந் தன்மையுடையது.

௩௧. சாசுவதம்:—திரிகாலத்திலும் திரிபில்லது. சாசுவதம்-நித்தியம். நித்தியப்பிரமசொருபத்தைக்கொடுப்பதுசாசுவதமெனக்கோடலுமொன்று.

௩உ. சுவர்க்கதம்:—சுவர்க்கத்தைக் கொடுப்பது.

௩௩. பத்திதம்:—அகத்தியமுனிவருக்குச் சிவபத்தியைக் கொடுத்தது.

௩ச. மந்திரசித்திதம்:—மாகாசமச்சியமுனிவருக்கு மந்திரசித்தியைக் கொடுத்தது.

௩௫. வைகுண்டதம்:—கூர்த்தஞானத்தைக் கொடுத்தது. குண்டம்-மழுக்கம். விகுண்டம்-மழுக்கமின்மை. விகுண்டசம்பந்தம்-வைகுண்டம்.

௩௬. சத்தியலோகதம்:—சத்தியலோகத்தைக் கொடுத்தது.

௩௭. சுயஞ்சோதி:—தானேபிரகாசிப்பது. ஸ்நானம்செய்தவர் மனத்தில் அருளாகியசோதியைப் புணரச்செய்து, அஞ்ஞானாந்தகாரத்தைப் போக்குதலினாலே சுயஞ்சோதி எனச் செய்யுட் பிரயோகத்துக்கேற்ப விரித்துரைத்துக்கொள்க.

௩௮. மேதைதம்:—சனந்தனமுனிவருக்கு அத்துவிதவுணர்வைக் கொடுத்

௩௯. ததா. திரு:—சகல ஐசுவரியங்களுக்கும் அதிதெய்வமாந்தன்மையைத் திருமகளுக்குக் கொடுத்தது.

ச0. சிவலோகதம்:— சிவலோகத்தைக் கொடுத்தது.

ச௧. இரணியகர்ப்பதம்:—பிரமாவின்வடிவைச் சோரன் என்பவனுக்குக் கொடுத்தது.

சஉ. தரித்திரகரம்:—வறுமையைப்போக்குவது. கரம்-போக்கல்.

சக. அவ்வியாகிருதம்:—சரீரம்,வாக்குச்,சித்தம், அகந்தையாகிய விகாரங் களை நீக்கித் தெளிவைக் கொடுப்பது. வியாகிருதம்-விகாரம். அவ்வியா கிருதம்-நிர்விகாரம்.

சச. அரி:—தன்னைத்துதித்தல், பரிசித்தல், தரிசித்தல்களாலே பாவத்தை அரிவது.

சரு. உருத்திரன்:—உருத்திரன்போல உரோக,துக்கங்களைத் தீர்த்தது.

சசு. விட்டுணு:—பிரமம் எங்கும் வியாபகமென்பதை யுணரும் ஆன்மஞா னத்தைக் கொடுத்தது.

சஎ. அரன்:—அரன்போலச் சனனமரணங்களை அரித்தது.

சஅ. அஞ்சம்:—சகத்தைவிளக்குவது; அன்னம்போல நிர்மலமாயிருப்பது; அம்பிசமந்திரப்பொருளைக் கொடுத்தது.

சகூ. சூத்திரான்மா:—கங்கைமுதலிய நதிகளாகியமணிகளுக்கு நூலாகிச், சீவான்மாக்களுக்குப்பரமான்மாவாய்ப் பாவங்களைநாசஞ்செய்தது. சூத்திரம்-நூல். நூலென்றது,ஈண்டுச் சீவான்மாவை.

ருo. சதாசிவம்:—எப்போதுஞ் சிவத்தைக் கொடுப்பது. சதா-எப்போதும்

ருக. வைசுவாநரம்:—விசுவத்திலுள்ளநரருக்குத் தடையின்றி முத்தியைக் கொடுப்பது.

ருஉ. அந்தரியாமி:—உயிருக்குள் வியாபித்துஅஞ்ஞானத்தைப்போக்குவது.

ருங. ஈச்சுரம்:—தக்கனுக்குச் சிருட்டித்தொழிலையும், சகதீசுவரத்தன்மை யையும், கொடுத்தது.

ருச. தேவபூடணம்:—இதன்பொருள் மேலே தீர்த்தமுறைமைச்சருக்கத்து அறுபத்துமூன்றுஞ்செய்யுட் குறிப்புரையிற் கூறப்பட்டது.

ருரு. சங்கரம்:—சனகமகாராசாவுக்குச் சீவன்முத்திச்சுகத்தையும், விஷ யானந்தசுகத்தையுங் கொடுத்தது.

ருசு. சுவப்பிரகாசம்:—ஸ்நானஞ்செய்தவுடன் சுவாயம்புமனுவுக்குச் சக சிருட்டித்தொழிற்சத்தி தானேபிரகாசிக்கும்படி செய்தது. ஒருவர் போதியாதிருக்கவே,ஸ்நானத்தால் உளதாயிற்றென்பதுகருத்து.

ருஎ. தேவராவாசம்:—பரசிவனுக்கும்,தேவருக்கும், வாசஸ்தானமாயிருப் பது. ஆவாசம்-உறைவிடம்.

ருஅ. சிவாலயம்:—சிவனும்,உமையும், வாழும் ஆலயமாயுள்ளது.

ருகூ. திரியக்குமுத்திதம்:—பூர்வத்தில் ஓர்மான் வேடனது பாணத்தால் ஊ றுபடுத்தப்பட்டுத் தன்மாட்டுவந்துவிழ, அதற்கு அவ்விலங்குவடிவத்தை நீக்கித் தேவரம்பையாகிய மேனகைவடிவத்தைக் கொடுத்தது. திரியக் கு-விலங்கு. முத்தி-நீக்கம்.

௬0. துக்கஹரம்:—விசுவாமித்திரரும், மேனகையும், ஒருவருக்கொருவர் இட்ட சாபதுக்கத்தை அரித்தது.

௬௧. உரோகாபகம்:—வசிட்டமுனிவருக்குக் குட்டரோகயைப் போக்கினது.

௬௨. சுபதம்:—அனந்தன்முதலியசர்ப்பங்களுக்கு மாதிருசாபத்தை நீக்கிச் சுபத்தைக் கொடுத்தது.

௬௩. சாபமோசனம்:—திலோத்தமைக்குச் சாபநீக்கஞ் செய்தது.

௬௪. அக்கினி:—எல்லாப்பாவங்களையுந் தகிப்பது.

௬௫. சன்மகம்:—சன்மத்தைப்போக்குவது. கம்-போக்குதல். மறுசன்மமில்லாமற் போக்குவதென்பதாம்.

௬௬. இரணமோசனம்:—கடனை நிவிர்த்தி செய்வது. இரணம்-கடன். அது தேவர்கடன், பிதிர்கடன், முனிவர்கடன், எனமுவகைப்படும்.

௬௭. கருப்பாவாசஹரம்:—கருப்பத்தில் வசித்தலை அரிப்பது. கருப்பாவாசஹரமெனினுங் கருப்பாசயஹரமெனினுமொக்கும். ஆவாசம், ஆசயம் என்பன—சுவர்க்கபொருள.

௬௮. தீர்த்தசத்தியமு—ஏனைத்தீர்த்தங்களான் நிவிர்த்திசெய்யக்கூடாத பாவங்களை [illegible] த்தி செய்தலாலே தீர்த்தங்களுக்கெல்லாம் மிகநாயகமாயிருப்பது—மாகா

௬௯. பாசஹரம்:— [illegible] பாசங்களை அரிப்பது. பாசஹரமெனினும், பாசகமெனினுமொக்கும்.

௭0. விரசற்கம்:—விசேஷபாவத்தைப் போக்கிச் சாத்துவிதஞானத்தைக் கொடுப்பது.

௭௧. விசோகம்:—தற்சொருபமறியாத சோகத்தை நீக்குவது. தற்சொருபம்-ஆன்மருபம்.

௭௨. வேதமூர்த்தம்:—வேதத்திற் கூறப்பட்ட பலத்தைக்கொடுத்து, வேத வடிவாயிருப்பது.

௭௩. பரான்மகம்:—வேதத்திற்கூறப்பட்ட பலத்தைக்கொடுத்துப், பரமான்மாவை அறிவிப்பது.

௭௪. ஓங்காரம்:—பிரணவப்பொருளை உணர்த்துவது.

௭௫. அமிர்தம்:—ஆன்மாவைச் சீவன்முத்தியாகியபயனிற் புணர்த்துவது. அமிர்தம்-மோக்ஷம்.

௭௬. புண்ணியவர்த்தனம்:—திரிசங்குவுக்கு அழிவின்றிச் சுவர்க்கத்தில்வசிக்கும் புண்ணியத்தை விருத்தி செய்தது.

௭௭. வருணாலயம்:—சமுத்திரத்துடன்சேர்ந்து சமுத்திரமாயிருப்பது.

எஅ. பாஸ்கரம்:—பிருகுமுனிவருக்கு ஞானம் பிரகாசிக்கச் செய்தது.

எகூ. தனதம்:—சாலிகோத்திரமுனிவருக்குத் திரவியத்தைக் கொடுத்தது.

அ0. கருமநாசம்:—ஞானத்தைக்கொடுத்துக் கன்மத்தை நாசஞ்செய்வது. இந்நாமம் கர்மஹந்திரு என முதனூலிற்கூறப்பட்டது. ஹந்திரு நாசம்பண்ணுவது.

அக. சீவன்முத்திதம்:—வருணனுக்குச் சீவன்முத்தியைக் கொடுத்தது.

அஉ. நிதிதம்:—குபேரனுக்குச் சங்கநிதிபதுமநிதிகளைக் கொடுத்தது. இந்நாமம் முதனூலிற் சௌபாக்கியதாயி எனக் கூறப்பட்டது; நிதியைக் கொடுத்தது என்பது பொருள்.

அரு. சர்வமங்களம்:—சர்வமங்கலையாகிய உமை வீற்றிருக்கப்பட்டது.

அச. விக்கினஹாரி:—முத்திக்குப் பிரதிபந்தமாகிய விக்கினங்களை அரிப்பது. பிரதிபந்தம்-தடை.

அரு. கலிதோஷஹரம்:—கலியுகத்திலே தினந்தோறும் காவேரிநதிக்கு உண்டாகும் பாவத்தை அரிப்பது. கவேரபுத்திரியாகிய காவேரி. இக்காவேரியே தனது அம்சத்தினால் பெண்வடிவாகி, அகத்தியமுனிவர்பத்தினியாகிய லோபாமுத்திரையுமாயிற்று. காவேரி-நீர்வடிவு. விட்டுணுவின் மாயையே காவேரியாகவும்,லோபாமுத்திரையாகவும், கவேரமகாராஜாவின் புத்திரியாகவும் உற்பத்தியாயிற்றெனத் துலாகாவேரிபுராணத்திற் கூறப்பட்டது.

அசு. சாரசுவதம்:—வியாசமுனிவர்முதலிய இருடிகளுக்குச் சர்வவித்தைகளையும் கொடுத்தது. சரஸ்வதிசம்பந்தமுள்ளது-சாரசுவதமெனக.

அஎ. அச்சுதம்:—வியாசமுனிவர்முதலிய இருடிகளுக்கு அழிவற்றஞானத்தைக் கொடுத்துத்,தான்அழியாதிருப்பது.தான் என்றது வேதநதியை.

அஅ. அத்துவிதம்:—தனக்கொப்பில்லாதது.

அகூ. சமனம்:—அட்டவசுக்கள் வசிட்டமுனிவராகிய இவர்கள் சாபாக்கினியைத் தணித்தது. சமனம்-தணித்தல்.

கூ0. பாவதாவாக்கினி:—இந்திரனது பிரமகத்திதோஷமாகிய காட்டுக்கு அக்கினியாயிருப்பது, தாவம்-காடு.

கூக. மருந்து:—சன்மகன்மரோகங்களுக்கு ஔஷதமாயுள்ளது.

கூஉ. மலாபகம்:—துர்வாசமுனிவருக்கு மலகன்மங்களைப் போக்கினது.

கூரு. வேதாந்தவேத்தியம்:—கேகயராசனுக்கு வேதாந்தநிச்சயார்த்தத்தை அறியும்படி செய்தது. வேத்தியம்-அறியத்தக்கது.

கூச. சராபகம்:—கௌசிகனுக்குச் சரையைப் போக்கினது, சரை-தசை கிழத்தன்மை.

கடு. சாயுச்சியபதவி:—சுகுமாரமகாராஜாவுக்குச் சாயுச்சிய பரிபக்குவத்தைக் கொடுத்தது. பதம்-பரிபக்குவம்.

கசு. பிரபஞ்சனம:—சுப்பிரமணியக்கடவுள் தாரகன்முதலிய அசுரர்களைக் கொல்லும்படி செய்தது. பிரபஞ்சனம்-மிகஅழித்தல். பிர என்பது-உபசர்க்கம்; மிக என்னும்பொருளது. பஞ்சனம்-அழித்தல்.

கஎ. சகற்குரு:—சகற்குருவாகியவிட்டுணு ஞானம்பெறுதற்குக் கருவியாயுள்ளது.

கஅ. மகாபீதிஹரம்:—இந்திரன்முதலியதேவர்களுக்கு நிவாதகவசர்காலகேயர்களால் நிகழ்ந்த பேரச்சத்தை அருச்சுனன்வாயிலாக அரித்தது.

கக. அவ்வியயம்:—பிரளயகாலத்திலும் நாசமடையாதது.வியயம்-நாசம். அவ்வியயம்-நாசமில்லாதது.

௬00. அவித்தியாசத்துரு:—யமனது அஞ்ஞானத்துக்குச் சத்துருவாய் ஞானத்தைக் கொடுத்தது.

௬0௧. தேவாதிபூசிதம்:—தேவாதிகளாலே பூசிக்கப்பட்டது.

௬0௨. பிரமசாபஹரம்:—சவுதாசனுக்கு வசிட்டராகியபிரமவிருடியால் நேர்ந்த சாபத்தை அரித்தது.

௬0௩. இந்திராதிவிபூதிதம்:—மாவலிக்கு இந்திராதிபத்தியத்தையும், குபேரனுக்கு அளகாதிபத்தியம் திகாதிபத்தியங்களையும் கொடுத்தது.விபூதி-விசேஷசெல்வம்.

௬0௪. கலாநிதி:—விநாயகர், சுப்பிரமணியர், நந்திதேவராகிய இவர்களை, அறுபத்துநான்குகலைஞானங்களுக்கும் இருப்பிடமாகச்செய்தது. நிதி-ஸ்தானம்.

௬0௫. முனிதுத்தியம்:—வசிட்டமுனிவர்முதலிய மகாரிஷிகளாலே துதிக்கப்பட்டது.

௬0௬. சாரூப்பியதாயகம்:—முசுகுந்தச்சக்கிரவர்த்திக்குச் சிவசாரூப்பியங் கொடுத்தது. தாயகம்-கொடுத்தல்.

௬0௭. அஞ்ஞானமோசனம்:—வசுராசனுக்குஅஞ்ஞானமோசனஞ்செய்தது

௬0௮. ஆன்மஞானமகோதயம்:—சுகர், வாமதேவர், முதலிய இருடிகளது ஆன்மஞானத்துக்குப் பெரிதும் உற்பத்திஸ்தானமாயுள்ளது. ஆன்மஞானம்-ஆன்மருபத்தையறிதல்.

திருச்சிற்றம்பலம்.

உகூஉம் பக்கத்துத் தாபகாரி என்பதைத் தாபஹாரி எனவும், உகூசும் பக்கத்துத்தரித்திரகரம் என்பதைத் தரித்திரஹரம் எனவும், திருத்திப்படித்துக்கொள்க.

# சவுதாசச்சருக்கம்.

---

இலகுமணிப்பூண்மாந்தாதாவென்னுமரசனிமையவரு
மூலகும்புகழ்நாரதனையுருகுமுள்ளத்தொடும்போற்றி
யலகுதவிர்த்தேவேதநதியடையுமேன்மையளவிலநீர்
விலகுமணிசூழ்வேதநதிபடிந்தார்வியனீவிளம்பெனவே. (க)

வடிவேலரசர்பெருந்தவத்தோர்மறையோர்வணிகர்வழிவந்தோர்
கடியார்தீர்த்தமிதிற்படிந்தேகதியிற்கலந்தோர்கணிப்பிலராற்
படியார்பிறந்தைக்கித்தீர்த்தம்படிதலொன்றேபயனுரு
மொழியாவுணர்வோயதிற்பெருஞ்சீருற்றூர்சிலரையுரக்கின்றேன். (உ)

வேந்தனகுஞ்சவுதாசன்வேதநதியின்விழைந்தாடிக்
காந்துகறைக்கணிராக்கதனுங்கயமைநீக்கிக்கவின்பெற்றான்
சாந்தங்கமழுந்தடந்தோளாயென்னமுனிவன்சரண்போற்றி
யேந்தலரக்கனயதுவுந்தீர்ந்தவாறுமியம்பெனவும். (ங)

வேறு.

பத்தியிற்குயிற்றும்பருமணிமாடப்பந்திகள்பரிதியும்பனிக்கு
முத்தொளிகளபமுகிழ்த்தவெண்ணிலவான்மூடியமுருகுலாஞ்சுவர்க்கங்
கைத்தலத்துவசத்தழைத்தெதிர்காட்டுங்கனிவளங்கண்டுடல்விளர்த்தாங்
கத்தகுசெல்வத்தணியறைசிறந்தாங்கலங்கியதயோத்திமாநகரம். (ச)

ஏற்றவர்க்ககல்வானெதிர்ந்திடார்க்கடவியீந்தினிதிழைத்தறக்கடவுள்
பேற்றடந்தோளாற்புவிபுரந்தளிக்கும்பொழிகதிரழலுமிழ்வேலான்
மாற்றலர்வயிரமணிமுடியுழுதவடுப்புனைந்திலங்கியகழற்காற்
சீற்றமாலியானையடற்சவுதாசனங்கர்க்கரசனுந்திறலோன். (ரு)

வான்புகழளிக்கத்தான்புவியளிக்கும்வலிகெழுவிறற்சவுதாசன்
கான்புரிவேட்டைகாமுறீயொருநாட்களிற்றினமொளிற்றிளஞ்சிங்க
மூன்கவர்கரடியுருமெனவதிருமுழுவைமானுடன்றெதிர்மகிடர்
தான்பலவரிந்துசரத்தினுற்றிரிவான்சரிவரைக்கந்தரக்குகையின். (சு)

வேள்பணியியற்றிவிழைந்துடன்புணர்ச்சிமேவியமிருகமுன்னெதிர்த்தே
மான்வரப்பினைமேல்வடிக்கணைதுரப்பவானொயிற்றரக்கியாய்மடிய
வாள்வினைநோக்கிக்கலைவடிவொருவியரக்கனையரசனைநோக்கித் [ன்.
தோள்வலியிகழ்ந்துதன்னியல்போடுதுணிவினைச்சினத்தொடுஞ்சொல்வா

* சங்கருத்தகனுமரக்கர்தங்குலத்துத்தலைவன்யான்றலைவியீங்கிறந்தாள்
வெங்களிக்காமமிக்கிருமே மும்வேண்டுருக்கொண்டுடன்மேவி
யிங்கமர்சாலைக்குறையுளக்கிபற்றுவிவடனைவனைதத்தனையிதனு
லங்கியிற்கரிசொன்றமைக்குவலுனக்கென்றகன்றனனரசனுமகன்றான். ( )

குலக்குருவாயவசிட்டனுக்கயோத்திருறுகினன்கூறலுங்குழைந்தே
கலக்குறையுறுமறவிபற்றமர்தனன்றெனநவின்றனனேகக்
கலக்கமோடமர்ந்தாண்சழிந்தனசிலநாட்கழிதலுங்கடிமகமாற்றற்
கிலக்கியமறைதேர்வசிட்டனுக்கியம்பவினிதெனமுனிவரோடியல்றே.

அங்கமார்பொருள்களனைத்தையுமவிடாயலங்குதற்கதிசயத்தமைத்து
வங்கமார்சரயுவானதியுச்சிமறைநெறிவகுப்பசற்கேகப்
பங்கமாமரக்கன்வசிட்டனதுருவாய்ப்பசுந்தடிமென்சறியபரிவா
லிங்கயில்றிடுவானருளொளவரசற்கியம்பியேமீண்டனனேகி. (௧௦)

அடுமடைப்பள்ளியவனுருவாகியனைதலுமவன்றனையரசன்
படுநிணத்தசையாற்பசுங்கறியமைத்துப்பரிவுடன்றருதியென்றுரைப்பக்
கடுவிசையமைத்துத்தான்கரப்பக்கடும்பசற்காரியமாற்றித்
தொடுகழலரசன்மனைவயின்வசிட்டன்மீண்டிடத்தோன்றலுந்தொழுதே.

அடிமலர்விளக்கியாதனத்திருத்தியலங்கலுமாரமுமாவிக்
கடிகமழ்தூபதீபமுமளித்துக்காஞ்சனப்பாத்திரமிருத்தித்
தடிநறுங்கறியுமன்னமுமளிப்பத்தளர்த்துவெப்பசிக்குணவயில்வான்
படிதரக்கடிதுன்பரப்பினைநோக்கிப்படைத்துடன்சினன்றனவ்பகர்வான்.

கொலையுருவாகிக்கொடுநரகளிக்குங்கொழுந்தசைக்கறியினைக்குரவற்
கலைவறவளித்தாயாதலாலரக்கனுகியேயருந்துதியூனென்
றலைவறவுரைப்பவரசனுநடுங்கியுவர்த்துநீதருதியென்றுரைக்கத்
தலைவயானளித்தேனெனமுனிசமாதிசார்ந்தருந்தவத்திறனுற்றெளிந்தான்.

வஞ்சனையரக்கன்மாயையால்வருத்தமயக்கினைமாட்சியினுணர்ந்தே
நெஞ்சகமழிந்துநிலைபெறுமுணர்ச்சிநெறியிலேனீ † டிருணீர்மை
யெஞ்சியகயமையியற்றியதீமையென்னிடையிறைவனோர்குறையா
‡ னஞ்சிலனஞ்சநடுங்கிடுசாபமளித்தனனட்டமற்றென்றே. (௧௪)

முனிவனிவ்வண்ணமொழிதலுமரசன்முறுகியசினத்தொடுமுதிர்ந்து
பணிதரும்பிழைதிரென்னிடைப்பழங்கட்படர்தருசாபமீந்ததனுற்
றுணியுறநினையுஞ்சபிப்பனென்றகங்கைத்தூயநீரேந்தலுந்தொண்டைக்
கனிதருஞ்செவ்வாய்க்கருங்கயனெடுங்கட்காரிகைமதயந்திகரைந்தே. (௧௫)

---

* சங்கருத்தகனுந்தலைவனெனக் கூட்டுக. † இருள்-அறியாமை. ‡ நஞ்சு-குற்றம்.

வேறு.

இணையவரிரங்குங்காலையெரிதவழ்பசும்பொனேய்ப்ப
நனைமலரிதழிவேய்ந்தநளிர்சடைவேதநாதன்
றனைநிகருருவச்சோதிதழைத்தொளிபழுத்துத்தாம
வனையெனவிருளைச்சீத்துவளர்திசையனைத்தும்போர்ப்ப. (௩௫)

னொடியிடைமுரியவீங்குங்குவிமுலைக்குவளைவாட்கட்
கடிமலர்நறுமுழுங்கூந்தற்காரிகைகதிர்த்தவேவு
நெடியவேற்குழவிகைம்மாநிழன்முகமதலைநேயத்
தடிமலர்பரவுநற்றியாதியகணங்களோடும். (௩௬

நிறைகதிர்மூர்த்தத்திங்கணீரிரண்டனையவேற்றின்
மறைமலிசிரத்தற்போற்றிமான்முதல்வணங்கும்வானோர்
நறைமலருறையிற்றூவிநலமுறுமடியரோடு
மறைகழல்பரவியேத்தநவருந்தவர்பொருந்தியாழ்த்த. (௩௭)

அலங்குவெஞ்சிலையிராமனலர்முகமடைந்துநோக்கிக்
கலங்கிநீபழியலின்னேகடிதுறுங்கருமங்காம
நிலங்கியமறமனைச்சேதுவியற்றலினிடைந்தேயன்பர்
மலங்கினைநீண்டுவேண்டாமற்றறையவயிருமென்ன. (௩௮)

கூறியமறைசையீசன்குரைகழல்வணங்கிப்போற்றி
யாறியவுளத்தனாகியடிகளின்னருளினல்லால்
வேறியல்செய்கையுண்டோவிரைவினையிலச்சேது
தேறியேயியற்றற்காயுஞ்செறிடத்தெரிந்தியென்று. (௩௯)

நெக்குளமுருகிக்கூறநிகழ்த்தினனிருநிலாமுக்
திக்குழிச்சிறிதுதூரஞ்சேர்விட்டணைமென்றோதுந்
தக்குயர்பதியொன்றுண்டாலதனிடைச்சார்ந்துசால்பின்
மிக்குயர்சேதுவாற்றனன்றெனவிளம்பலுற்றான். (௪௦)

வேறு.

கொடியவெங்கூற்றுயிர்குழைந்துநேர்ந்திடின்
மடிதருதிறலினன்யடலைதீர்ந்தற
விடிதருசினத்தினனிமயமால்வரை
பொடிதரப்பிசைந்தறப்பூழிசெய்குவான். (௪௧)

வரைத்திரள்பஞ்சியிற்சிதறபாருத
நிரைத்தெழுமூச்சினனெருப்புக்கான்றகட்
குரைத்தெழுசவரிமாமுகத்துக்கோறல்சா
றரைத்தலைமிடனென்றுரைக்குத்தானவன். (௪௨)

விரிதழற்றிகிரிமான்முதலவிண்ணவர்
னெரிதரஞாட்பிடைநெருக்கிநேர்தரா
திரிதரக்கற்பகத்திலங்குபொன்னகர்
கரிதரக்கடவுளர்ககன*மூழ்கியே. (௪௩)

ஆற்றலர்மறைதரவகிலமூற்றவு
மாற்றறநெடியநாள்வலியினுற்றலுந்
தோற்றயர்கடவுளர்மெலிந்துதுப்பற
நோற்றனர்பார்ப்பதிநோன்மையெண்ணியே; (௪௪)

பல்லுயிருலகெலாமாகிப்பாயசீ
ரெல்லையற்றமலமாமிமயப்பூங்கொடி
சொல்லறச்சராசரந்துன்னுர்நன்வலி
வல்லையிற்கவர்ந்தொருவடிவமாகியே. (௪௫)

கொற்றவையெனப்பெயர்கொண்டுசொலாந்
துற்றனமகிடனைத்தொடர்ந்துபோர்செய
மற்றவன்சமத்திடைவலிந்துவானவர்
பற்றறவெய்யபோர்பணிப்பவாற்றினள். (௪௬)

பொருப்பினம்பொடிதரப்புவனமூழ்கியே
நெருப்பெழவிருவருநெருங்கிவெய்யபோர்
விருப்பொடுமிழைத்திடக்குமரிவெஞ்சின
முருப்புறமகிடனையொறுத்துக்காயவே. (௪௭)

நெடுவரையுருமெனநிருதன்மெய்யெலாம்
வடுவுறக்குருதிநீர்வழியமோதியே
யடுதலுமாற்றலனாகியோடலுங்
கடுவிசையினிற்கடற்கரைக்கடிந்துபோய். (௪௮)

வாய்வழிகுருதிநீர்மகிடன்கான்றிடக்
காய்கனற்படையினாற்கவரிமாமுசஞ்
சாய்வுறவரிந்ததாட்டருக்கினூன்றியே
வீய்தரவவ்விடைவிளைத்துமெல்லியல். (௪௯)

வானவருவப்புறவாழ்வுநல்கியே
தானவர்மாய்ந்தவத்தலத்திற்றன்பெய
ரானமாதேவிபட்டணமென்றாக்கினா
னூனமிலிப்பதியுண்மையீதரோ. (௫0)

* மூழ்கல்-கெடுதல்.

அருளியவத்தலையணையுமாற்றிநீ
சருகியவரக்கரைக்களைந்துகாமர்சீர்
பெருகியதிருவினைப்பெற்றுப்பீழையா
லுருகியமனத்திறமொழிதியோகையால். (௫௧)

மறைவனத்தியற்றிநீமகிழ்ந்தசேதுவாங்
கறையாற்கோடியிற்கரியதீவினைக்
குறையுறக்கொடியவர்கூடியாடினு
நிறைவினையகற்றியேவிமலராவரே. (௫௨)

அருக்கனைமதியினையரவுதீண்டுநாட்
பெருங்கருஞ்சாதயமகோதயப்பெயர்த்
திருந்தினள்பானுவாரத்திங்கண்மேன்மையாற்
றருக்கியநாள்களிற்சார்ந்துமூழ்கினர். (௫௩)

மறையவர்கொலைமதுமாந்தலாதியா
வெருவருபாதகமனைத்துமாற்றியே
யிறையெனமுத்தியினெய்தியின்பமே
பொறையுறக்களியொடுபொருந்திவாழ்வரே. (௫௪)

விருந்தினையெதிர்கொளார்விரதமேன்மையாற்
றிருந்தியசத்தியமாதிசெய்திடார்
பொருந்தியமங்கைதாய்குரவர்பூசனை
யருத்தியுமாற்றிடார்வருத்தஞ்செய்குவார். (௫௫)

அடைந்தவர்கட்டவர்க்கயலாற்றுவா
ரிடைந்தவர்க்கிரங்கிடாரியாவராயினு
மிடையறுவெந்தீவினைவெறுப்பவிட்டிய
முடைந்தநீர்க்கோடியையுயர்ந்துபோற்றியே. (௫௬)

ஆடினராயினுமறைந்திங்கெலாஞ்
சாடியேநம்பனுஞ்சார்ந்தமல்குவார்
கோடியைப்பணிந்தவர்க்குறுகிவாழ்த்தியே
பாடினராயினும்பவத்தினீங்குவார். (௫௭)

தென்புலத்தவர்மகிழ்சிராத்தங்கோடியி
லென்றிழைத்தாற்றினுமுலப்பில்பல்லநா
ளின்புறக்குலத்தவரினிதுவாழ்வரா
னன்புலத்தவர்க்கிதுநயனம்போலுமே. (௫௮)

வார்திரைக்கங்கையின்வருடம்பத்தெனப்
பேர்தருமாயிரம்பிறங்கவாடினார்
சார்பயன்கோடியைச்சார்ந்துமூழ்கினோர்
சேர்வதற்கையமின்றகத்திற்றேர்தியால். (௫௯)

வரும்பரிமேதமேயாதிமாமகந்
தரும்பயன்கோடியிற்றழைத்தமல்குதீ
ரரும்பியகோடியினுடிலுடினார்
விரும்பியபயனெலாமளிக்குமெய்ம்மையே. (௬0)

என்றுரைத்தகன்றனனீசன்கோடியிற்
சென்றறல்படிந்தவர்சேருநற்பயன்
மன்றநம்பரனலான்மற்றியாவரே
யொன்றவுற்றறிகுவருலங்கொடோளினாய். (௬௧)

மொழிதருமறைவனமுதல்வன்கூறிய
பொழிதிரையமுதனபுனிதவாய்மையா
லழிவறுதேவிபட்டணத்திருராமனை
பழியறவாற்றினன்பரிதி*தோன்றலே. (௬௨)

முழுவலியிராவணனுதிமுற்றிய
குழுவினர்கிளையறக்கொன்றுகோளறச்
செழுமலர்க்குழலியைச்சேர்ந்தயோத்தியிற்
றொழுதடியடையலர்மிடைந்ததன்னவே. (௬௩)

வேறு.

தாயாயுலகந்தண்ணளியாற்றழையப்புரந்ததனைச்சாருந்
தீயார்வீரகத்தியினைச்சேர்ந்தமறைசைச்சிவன்றென்பான்
மாயாவிலிங்கமொன்றுற்றிமாற்றிமறையோர்மனமகிழ
† வீயாவிளையுளூரளித்துமீண்டும்புரந்தான்விறல்வெய்யோன். (௬௪)

வேறு.

ஆதிசேதுமுன்னுயதுமாழியா
னீதியாற்பின்னிகழ்த்தியதைந்திரண்
டோதியோசனையுற்றதுமோதினந்
தீதிலாரிக்கதையினைச்செப்புவார். (௬௫)

சேதுசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨,௬௩எ.

---

* தோன்றல் என்றது, சூரியனது வழித்தோன்றலாகிய இராமனை.
† வீயாவிளையுளூர் - இராமசந்திரபுரம். இதனைத் தற்காலத்து ஆயக்காரன் புலம் எனவும் வழங்குப.

# வசுதேவ சுதேவச்சருக்கம்.

முரிதிரைவிரியுங்கோடியிடத்துமுன்னிகழ்ந்ததாகப்
பரிவுறுங்கதையொன்றுண்டாற்பகர்ந்தவர்பாவங்காயு
மரியயன்முதலோர்க்கெல்லாமரனெனவகிலமேவித்
தெரிதருதீர்த்தந்தம்முளதிகமாய்ச்சிறந்ததீதாம். (௧)

நினைந்தவர்பாவந்தீர்க்குநெடுந்திரைக்கோடிநேயம்
புனைந்திடுங்காசியீதுபுகழுறுப்புடவிமுற்றும்
வனைந்துயர்வனப்புமிக்குவளங்கெழுதமிழ்நாட்டின்கண்
முனைந்தசீர்வணிகனேமாங்கதனெனமொழியும்பேரான். (௨)

முழுநிதிக்குவையுநெற்போர்முதலவுமலையினீட்டி
விழுமியகற்பின்மேயமெல்லியலோடும்போகந்
தொழுமினனிளமைநீங்கிக்கிழமுறுகாலைக்கேதந்
தழுவினனபரனையுன்னித்தளர்ந்தனன்சிந்தைசெய்தான். (௩)

கொடியவெவ்வினையைச்சுட்டிக்கொழுநிதிக்குப்பையீட்டிப்
படிமிசையிரந்தோர்க்கன்னம்பசியபொன்னறுவைபானெய்
மிடிகெடவளித்தல்செய்யேன்வினைகெடவிடையினேறு
மடிகடம்பூசைக்காயதளித்திலேனன்புசெய்யேன். (௪)

தீயவரென்னைநேர்வார்தெரிதருவுலகத்தில்லை
மேயதுகாலமென்றேயுளவதென்றிரங்கியங்கி
யாயவப்பொருள்கண்முற்றுமமைதருதனாறுன்குகூறு
வேயவப்புதல்வர்க்கீந்தானிருவருக்கிரண்டுகூறும். (௫)

மற்றையவிரண்டுகூறுங்கொண்டுதன்மனைவியோடும்
புற்றிடங்கொண்டநாதன்புரிதருமாரூர்மேவி
யற்றவரலந்தோரேற்றோரந்தணரறவோர்க்கெல்லாம்
பற்றுடனன்னமாதியளித்தனன்பரிவினோடும். (௬)

சீதநீர்ப்பந்தராதிதிருந்தியவறங்களெல்லாங்
காதலினாற்றியாரூர்க்கடவுடன்பூசைக்காய
வாதரவோடுநல்கியணிமலர்க்காவினோடு
பாதவநெறியினீழல்பரித்திடப்பலவும்வைத்தான். (௭)

திருவுறுபணிகளீசன்சிறப்புறவாற்றிக்கால
மருவலின்மாயத்தீயின்மனைவியுமுடனேமாய்ந்தாள்
பொருவருமாரூர்மேவிப்பொன்றியவதனான்மாய்ந்த
விருவருமுத்திசேர்ந்தேயின்பமிக்கிலங்கினாரே. (௮)

அனையவன்புதல்வராயவசுதேவன்சுதேவனென்பார்
மனையிடைமருவித்தீமைவரம்பிலவாற்றிமாயம்
புனைதருபரத்தைகள்ளுண்போகமாய்த்தூர்த்தரோடு
பினைதருசூதின்மேவியிற்பழிபலவுமாற்றி. (௯)

நாடகக்கணிகைகூத்தர்நயமுறப்புகழுமாந்தர்
பாடகத்தொழிலோர்கோட்டிபயிற்றுவோர்பரத்தைக்கீந்தே
நீடகப்பொருளைவீட்டிநிலையறக்களவிற் * கன்றிக்
காடகம்புக்குவேந்தன்கடிந்திடக்கலக்கமுற்றார். (௪0)

விடம்படுபடையிற்றுயவிலங்குபுட்குலங்கண்மாய்த்துத்
தடம்பெறுவயிறார்த்துத்தழல்வனத்துறையுநாளி
னிடம்படுவனத்திற்பின்னோனேனையொருசாரேசப்
படம்படுமரவுதீண்டப்பதைத்துயிர்பாறினானே. (௪௧)

அற்றைநாண்முன்னோனோர்சாரடற்கரும்பன்றிபாய
வெற்றுடலாகிமாய்ந்தான்வெய்யதூதுவர்களீண்டிப்
பற்றியேபிணித்துப்பாசக்கயிற்றினாற்பதைப்பமோதிக்
கற்றையார் † கதிரோன்மைந்தன்முன்புறக்காட்டினரால். (௪௨)

கருவரையனையகாலன்கணக்கனைக்கலங்கிநின்ற
விருவர்தநன்மைதீமையியம்பெனவினையோனுக்க
மருவருஞ்சுவர்க்கமேவமற்றவனிரயமேயத்
திருவருள்புரிதியென்னச்செய்கெனச்செப்பினானே. (௪௩)

இளையனீசுவர்க்கமேவியிருவெனநமனைப்போற்றித்
தளைதருபிறப்புத்தீமைதழைத்தவெஞ்செய்கைகாம
மளைதலாலொப்போமாகவன்னவனிரயம்யானே
விளைதருசுவர்க்கமேவலென்னெனவிரித்துச்சொல்வான். (௪௪)

போனவிப்பிறப்பினீயேபொருகடற்கோடிசூழ்ந்த
கானகத்துழலுங்காலைக்கதிருமலைமயினோடு
மானதைத்திங்கட்கோடியாடினராறுவைவீச
வானகத்துனிகணின்மேல்வார்ந்ததுவரத்தின்மேவ. (௪௫)

வீழ்ந்தவத்துனியாற்றீமைவீட்டியேமேன்மைமேவி
வாழ்ந்தனைகோடிசூழ்ந்தவயங்குகாலுடனுற்றாருஞ்
சூழ்ந்தவல்வினைகண்முற்றுந்தொலைக்குவர்நிரயமேவி
யாழ்ந்தநின்றலைமையனுய்யவேண்டினொன்றறைதுங்கேட்டி. (௪௬)

---

* கன்றல்-மிகுதல். அது "களவிக்கட் கன்றிய காதலவர்" என்பதனுனுமறிக. † கதிரோன் மைந்தன்-சூரிய குமாரனாகிய யமன்.

துளிப்பயன்பதினாறொன்றையளித்திடிற்சுவர்க்கமேவிக்
களித்திடுநின்றொடென்னக்கசிந்தவன்கலையிரண்டை
யளித்திடவிமானமேவியிருவருமமரர்வைப்பிற்
றெளித்தகல்லின்பமேவித்திளைத்தனர்திருவின்மிக்கோர். (௧௭)

திரைதருங்கோடிதீர்த்தத்தோருறைதினைமட்டிப்
* புரைதருசுவர்க்கமீந்ததென்றிடிற்பொருவற்றோங்கி
யுரைதருமதன்சீர்கூறிமுடிவதேயுமைகோனல்லாற்
கரைபொருங்கோடிமேன்மையாவரேகணிக்கற்பாலார். (௧௮)

வேறு.

அருவினைதுகளுறவமர்கோடி,மருவியபுகழினையடிவேலோ,
யிருளறவருளினமிஃதாய்வார்,கருவழிசுழலுதல்கழிவாரே. (௧௯)

வசுதேவ சுதேவச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨,௯௫௯.

---

# சேதுசிறப்புச்சருக்கம்.

சிறைசெயுங்கொடியபாவத்தினையோரிவருஞ்சேது
வுறைதுளிமேவிமேன்மையுற்றனரென்னவுஞ்சமை
யறைதரச்சேதுமேன்மையாய்வதற்களவில்லாத
னிறைதருங்கோடிமேன்மைநிகழ்த்தெனநிருபன்கூற. (௧)

எறிதிரைச்சேதுமேன்மையியற்றுமுற்றவத்தாலுன்பா
லறிதரற்கெழுந்தவேட்கையகிலமுமமலமாய
நெறியுறற்கெழுந்ததாகுநீதியாலுயர்ந்தோயென்னாச்
செறியுமுக்குறும்புமாய்த்ததிருத்தவன்செப்பலுற்றான். (௨)

† விரிதிரைவேலைமூழ்குங்காலமேவிலக்குங்காலந்
தெரிதருபகலிராவின்மாலையிற்சேதுமேவிப்
பரிவுறுகாலமூழ்கிற்பார்ப்பனக்கொலைகளாதி
யெரிதருங்கொடியபாவமெனைத்தையுமிரித்துமாய்க்கும். (௩)

---

* புரை-உயர்ச்சி. † சேதுவிலே ஸ்நானஞ் செய்யுங்காலம் யாதெனின், அது, நூல்களிலே ஸ்நானத்துக்கு விலக்கிய காலமுமென்க. எனவே, இன்னகாலமென நியதியில்லை என்பது பெறப்பட்டது.

வார்புனற்கங்கையாற்றின்வருடமோரயுதமன்னிச்
ஓர்பெறதானமாற்றும்பயன்றனைச்சேர்வார்பச்சை
யூர்பரியிரவிவாரத்,திரட்டியாமு * வாவி,னுக்கஞ்
சார்விதிபாதமூன்றிற்சதகுணப்பயனைச்சார்வார். (௪)

செழுங்கதிர்மதியம்பாந்தட்சேர்ந்தநாட்சேதுமூழ்கி
யழுந்தினர்க்கயுதமாகும்பயனைநந்தமாகுந்
தொழுந்தகுசிறப்பருத்தோதயமகோதயத்துஞ்சூழ்வா
லெழுந்துபோய்ப்படியுஞ்சேதுயாத்திரைதனினுமென்றார். (௫)

விதியொடுங்கியமங்காலமாதியுமேவலின்றித்
துதிதருமாதிசேதுபடிந்திடிற்றூயராகிக்
கதிகரமுற்றுவாழ்வார்காரிகைகருப்பமேவும்
பதியவன்றனுமூழ்கிற்பரகதிபயக்குமன்றே. (௬)

ஓங்கிராமேச்சுரத்தினுயர்தனுக்கோடிமேவிப்
பாங்குறவருடநூறுபடிந்தவப்பயனையொன்றாம்
தாங்குமாமறைசைமேயதனுக்கோடியொருநாணல்கு
மாங்குளத்துவகையாரப்படிந்தவர்க்கையமின்றே. (௭)

அருந்தவந்தானம்வேள்வியின்றியப்பயனைச்சேர
விரும்பினர்துறவுஞானவிளைவிலார்வீட்டுவேட்கை
பொருந்தினர்காற்றைமாற்றிப்புரிதருயோகமின்றித்
திருந்தியசித்தியாசைசெறிந்தவர்சேதுமேவி. (௮)

கோடியிற்படியினெஞ்சிற்குறித்தமெய்ப்பயன்களெல்லாங்
கூடிநற்பொலிவுசேர்வர்கொள்கையார்சயமேதான
நாடியவேள்வியோகஞானமற்றனையுமோர்கா
ணீடியமறைசைக்கோடிபடிதரினிலையினுமே. (௯)

பார்ப்பனக்கொலைகண்மாந்தல்பசியபொற்களவேயாசான்
வார்ப்பணைமுலைவெங்காமமிவற்றினைமலிந்தார்ச்சேர்வெந்
றூர்ப்படுமஞ்சதாயபாதகமவற்றினோடுங்
கார்ப் † பிரகீரணாதியுபபாதகங்கலத்தல். (௧௦)

ஆதியகொடியபாவமளப்பிலவனைத்துஞ்சேது
மோதியகோடிமூழ்கினக்கணமுரிந்துமாயு
மோதியபஞ்சவேள்வியுபாசனையோங்கியாக
மீதியல்சந்திவேதம்பயிலுதல்விடுத்தபாவம். (௧௧)

---

* ஈண்டு உவா என்றது அமாவாசித்திதியை. மூன்று-இரவிவாரம், உவா, விதிபாதமாகிய மூன்று. † பிரகீரணம்-உபபாதகத்துளொன்று.

பேசியவாதிசேதுகண்ணுறிற்பிரமகத்தி
யாசறுமென்னின்மற்றைவினையறற்கையமுண்டோ
பாசிழைபாகன்மேவும்பதிதருமென்னின்மற்றை
நேசமார்பயனையீதற்கரிதெனநிகழ்த்தலாமோ. (௨௦)

பலமுறையுரைத்தென்வேண்டும்பயனொளாமளிக்கும்பாரி
னிலவினர்க்கமுதமாகுநிகர்க்கருநீர்மைத்தாகு
முலவலப்படையோனாகியரிக்குமுன்னுசித்தமேலோ
னலமரும்பிரமகத்தியிதனிடையகற்றிறுனே. (௨௧)

வேறு.

ஆதிசேதுவின்மேன்மையா, ரோதுமேதகுநீர்மையா
நீதினீடக்கூழ்கினூர், மாதுவாழ்தருபாகரே. (௨௨)

சேதுசிறப்புச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨,௬௭அ.

---

# பலபத்திரச்சருக்கம்.

மாடநீள்கொடிமதியுடன்மாசறத்துடைக்கு
மாடலார்மறைவனத்துயராதிசேதுவினிற்
பாடல்சால்பலபத்திரன்பார்ப்பனக்கொலைபோய்
வீடன்மேயினனென்றனைமுன்புகழ்விரித்தே. (௧)

பரந்தமாநிலங்கலிகெடப்படிவமாயின்பஞ்
சுரந்தநீர்ப்பலபத்திரன்சுருதிநூன்மறையோ
னரந்தையார்கொலையடைந்தநுந்தீர்ந்ததுமருளாற்
புரந்துகூறெனும்பூபதிக்கருந்தவன்புகலும். (௨)

சாற்றுமிக்கதைபுனிதமாய்த்தருமமேதருமாற்
போற்றுநீமுனம்புரந்தரன்றிருவெலாம்பொருந்தித்
தோற்றுமத்தினபுரத்திடைச்சுயோதனன்முதலா
வாற்றுநூற்றுவர்பாண்டவரைவருமமர்ந்தே. (௩)

திருக்கிளர்ந்தொளிர்செல்வராய்த்தேங்கியவின்பப்
பெருக்கினும்பவர்பிரிக்குமூழ்பிணிப்புறச்சூதிற்
றருக்கினேய்ந்தனர்தருமனுஞ்சுயோதனன்றானும்
வருக்கமார்பொருளனைத்தையும்*பணத்திடைமாய்த்தே. (௪)

---

* பணம்-பந்தயம்.

வஞ்சமுற்றியசூதின்மேல்வலிந்தெழுமயலா
னெஞ்சமுற்றிவிப்பன்னிருவருடமுநெருங்கி
நஞ்செனத்தெறுமடவியிற்றிரிந்துளரடங்க
வெஞ்சமத்திறம்பணமெனவொட்டியேவிழைத்தார். (௫)

தருமனவ்வழித்தளர்வுறுதோல்வியாற்சாய்ந்து
பருமவல்குலார்துருபதன்மகளொடும்பின்மா
வருமினின்றதிரடவியிற்றம்பியரோடுந்
தெருமருந்துயர்சேர்ந்தனன்செப்புநாளளவும். (௬)

* வட்டுவீழ்த்தணிவயங்கியவரங்கினைமதித்தே
யொட்டுமெப்பணத்துரைத்தநாளொளிப்புடனொழித்து
மட்டுவீழ்பொழில்விராடன்மாநகரிடைவதிந்தார்
கட்டுவார்குழற்றுருபதன்முதலியோர்கலந்தே. (௭)

சரவுமாற்றியேவிராடமாபுரத்தினிற்கலந்து
விரவுபாண்டவர்தம்மையுநூற்றுவர்மேலா
மரவுவார்கொடியவனையும்பொருத்துதற்கமைந்து
பரவுநாதருங்கண்ணனைமொழியவும்பயப்ப. (௮)

குருதிவெந்தடிகூளிகள்கூட்டுணுங்கொடும்போர்
கருதியித்திறத்திருவரும்போர்த்துணைகாண்பான்
பெருகுநாட்புடையரசரைப்பேணியபின்ன
ரிருபெருந்திறத்தரசருங்கண்ணனையிரப்ப. (௯)

படைகெடுங்கரம்பற்றிடாயானொருபாலும்
முடைகடற்படையெனதொருபாலுமுய்த்தவர்கீ
ரடைவினிற்கொருமென்றிடச்சுயோதனனடைந்தான்
மிடைபெரும்படையரிதனைவிசயனும்விழைந்தான். (௧௦)

வேறு.

அடுந்திறல்விசயன்வேண்டவாழியம்படையோனுதி
தொடுந்திரைக்கலினப்பாய்மாத்துண்டுசாரதியாய்ச்சோதி
விடுந்தடந்தேரின்மேயவேண்டினர்வேந்தர்வேலைப்
படுந்தரையலத்திற்றுங்குநிலவாடையனைப்பல்கால். (௧௧)

வேண்டவக்கவன்முன்மாயன்விரகினைக்கருதிவேகத்
தாண்டகையரசராயநூற்றுவர்தமக்குமாகேன்
பாண்டவர்தமக்குமாகேன்றுணையெனப்பகர்ந்துபான்மை
பூண்டகற்றீர்த்தமேயயாத்திரைபுரிவதானான். (௧௨)

---

* வட்டு-சூதாடுகருவி.

எழுந்தனவேகித்தூய்நீரியல்சரசுவதிமேவித்
தொழுந்தகுதீர்த்தமுற்றூர்தூய்மையிருடிச்சோதிக்
கொழுந்தவிர்மதியங்கீழுங்கொடிக்குருக்கேத்திரஞ்சேர்ந்
தழுந்துகவழுக்கையீருமலங்கொளிக்கங்கைக்கூலம். (௧௩)

விருப்புடனடைந்துகூனல்வெள்வளைவிரித்தமுத்தம்
பொருப்புறுபுளினமார்ந்துபுனிதவானதியப்பூநீர்
திருப்புனரிராமனற்றுய்திரட்டியதேயுஞ்சேதக்
கருப்புரங்கமழுந்தீர்த்தங்கங்கையிற்பலவுமூழ்கி. (௧௪)

துணர்விரிதுளவத்தண்பூத்தொடையணிமாயன்றூய
வுணர்வொடுநரனுநாராயணனுமென்றுவந்தோற்றிப்
புணர்தவமாற்றும்பூவாரிலந்தையங்கானம்போற்றி
வணர்செழுங்கனிசூழ்தீர்த்தமனைத்தினுமகிழ்ந்துமூழ்கி. (௧௫)

உருகுசெம்பசும்பொனீட்டுமுருப்பவிர்ந்தொளிகால்வெள்ளி
நிருமலனமருங்கோயினிறைபெருங்காதல்கூரப்
பருகுமன்பதனுற்போற்றிப்பணிந்தரிபதியுமேவி
யருகுளைமிசத்துமேவிக்கண்டனனூர்வங்கூர்ந்தே. (௧௬)

மனத்துமாசகற்றித்தூய்மைவழங்கியேவலியவேட்கை
யினத்துறவிரித்துஞானத்தெளிவினையிலகவீந்து
சினத்தொடுசெற்றமாய்த்துச்சிந்தையிற்சாந்திசேர்த்தி
முனத்தகுமுதத்தைநல்கிமோகமான்முனிவதாகும். (௧௭)

அரிக்குறுங்குருளைகூர்ந்தன்மடப்பிடியளிக்குந்திம்பாற்
செருக்குறவளரும்பேழ்வாய்ச்சினப்புலிப்பிணவுமானின்
குருக்குழமறியையாக்குங்கொடுஞ்சிறைக்கழுழன்குன்றி
யுருக்கினர்செங்கட்பாம்பினேடுவர்துகளுமன்றே. (௧௮)

பகையொடுவைரமாற்றிப்பயில்வனயாவுமல்க
முகையவிழ்முளரிநீரின்மூழ்கிமாமுனிவர்பூசை
தகைதரக்களபநல்கத்தழற்கடனுற்றத்தக்க
நகையெரிசிறையான்மூட்டுநாகிளவெகினநாளும். (௧௯)

சீதநீர்முகந்துகங்கைச்சீகரத்தோடுந்தென்றற்
போதவிழ்நீழன்மேவிமுனிவரர்பொலிவதாகும்
வேதமும்புராணமாதிவினங்கொலியிடைந்தபுள்ளி
னாதமும்விண்ணவானகதியொலிகலிவதாகும். (௨௦)

இன்பமேயென்றுமென்னவிசைத்துரீரியற்றுவோன்பிற்
றன்பிடையூறுண்டாயிற்சொல்லுமினென்னத்துயோ
ரன்பொடுபேரவமேவுமலப்படையடலோன்சூதன்
முன்புயரிருக்கைமேவக்கண்டறமுனிந்துசொல்வான். (௨௮)

நோற்றமாதவத்தோர்யாருமென்பெருநோன்மைநோக்கி
யாற்றுவேளாண்மையோடுமெரிச்சையுமளித்தாரி[illegible]
தோற்றமாரிவன்மேல்வைகியின்சொலுர்துறந்தெழாது
போற்றிடாதமர்ந்தானந்தோவகந்தையின்புணர்ப்பிதென்றான். ( )

வெஞ்சினங்கூரவோர்ச்சிவிடுத் * தனல்வெறியிற்சூதன்
றுஞ்சிடப்படையினெற்றச்சூதனுமாவிசோர்ந்தா
னஞ்சனப்பிரமகத்திநகையொளிமழுங்கிநாணி
யெஞ்சிடச்சூழநாஞ்சிலிறையலைந்திடுக்கணுற்றான். (௩௦)

மாற்குமுன்னுதித்தோன்செய்கைமாதவத்தலைவர்காணு
வேற்குமீதெவர்க்குச்சாலவிழிந்தவர்செய்கைசெய்தாய்
கோற்குமெங்குரவனுவிரொடியிடைமாய்த்துத்தீமை
யாற்குறையுற்றாய்போதமற்றனையகந்தையுற்றாய். (௩௧)

போதவேரரியுந்தீயவகந்தையிற்புகழைமாற்று
மேதமூவுலகத்தில்லையீதுற்றாணிடுக்கணுய
மோதலைப்பட்டுச்செய்யுமுறைபிறழ்ந்தவசமாகிப்
பாதகமனைத்துந்தானேபயிற்றிவெம்பவத்தின்மாயும். (௩௨)

அழிதருமகந்தைதீயதாதலால்விடுத்தேயாக்கம்
பொழிதருஞ்சாந்திமேவிப்பொறிமனப்பொக்கமாற்றி
னிழிதரும்பிறந்தையுற்றோனுயினுமின்பஞான
விழிதரமேவிக்கீர்த்திமேதகுவிழுப்பஞ்சேர்வான். (௩௩)

பொறையறுங்கொடியோனின்பம்புகழறம்பூதிமேன்மை
நிறைதரான்பொறையேயெல்லாவறம்புகழ்நீதிசீர்த்தி
கறையறுமொழுக்கமாக்குங்கற்றவன்கடவுளோனு
மறைதரும்பொறையிலாதான்றுச்சனுங்கதியுமற்றான். (௩௪)

முழுமகனவனேநீயுமுதிர்பொறையறலான்மோகந்
தழுவியபிரமகத்திமேவினையென்னத்தக்கோன்
றெழுதகுமுனிவீர்மேவுஞ்சூத்திரன்றன்னைக்கொன்றால்
வழுவுறுபிரமகத்திவருவதென்வழங்குமென்ன. (௩௫)

* அனல்வெறி-அக்கினிபோலுங் கோபவெறி.

போற்றும்பலபத்திரனின்றுபுரிந்ததீமை
யாற்றும்பரிகாரமளித்தருளாததவென்னுச்
சாற்றுந்தவர்தம்முகநோக்கியத்தக்கசூத
னாற்றுமமுதாமெனவாய்மையுணர்த்துகிறபான். (௪௪)

வேறு.

பலவளநிறைந்துவானும்பழுதறப்பரிதிக்தோற்ற
நிலவியமறைசைத்தென்பானிலைரமணிகரையிறசேர்க்குங்
கலமலியாதிசேதுகண்ணுறிற்கடிந்துகாயர்து
வலனுயர்பிரமகததியயுசமுமாயுமனறே. (௪௫)

அடுந்திறற்கொற்றவாதியிராமனாலாற்றுஞ்சேது
விடுந்திமிலாதிசேதுவிமலமாமவினைகளீடுங்
கொடுந்துயரகற்றுமங்கட்டனுக்கோடிமூநிர்தமூழ்கிற்
படுந்துகள்பிரமகத்திபகர்வதெனபரிதிவேலோய. (௪௬)

தரைமிசையாவனேனுந்தனிமறைவனத்துமேவிக்
குரைகட * லாதிசேதாங்கோடியைக்குறித்துமூழ்கி
கரையறுகொடியபாவமனைத்தையுங்கழிந்துகசாடசி
யுரையகல்பரமஞானத்துருவமாயுறைவனன்றே. (௪௭)

சேகரத்திவலைசேதுசிந்தியதறிந்துசென்ற
சாகரத்தகன்றுதீமைதகர்த்தருடமைதநுச்சாரின்
பாகரத்துறைவனீயும்படிந்தகமகற்றிவோதர்
சேகரத்திலதமாகெனறுரைததிடததிருமாலசேட்டன். (௪௮)

புனிதமாமுனிவரோடுஞ்சூதனைப்புரிந்துபோற்றி
யனுமதிமேவித்தேசமடவிகளனைத்துநீங்கிப்
பனிவருங்கமலப்போதிற்பார்பயிளவெகினம்பைந்தே
னணிதரமழவண்டாருமறைவனநண்ணித்தென்பால. (௪௯)

முரிதிரைமுழங்குசேதாங்கோடியைமுன்னம்போற்றி
யரிபசுந்தருப்பைசூழ்ந்தபவித்திரமங்கைசேர்த்திப்
பிரிகுகபிரமகத்தியெனமனம்பெறுசங்கற்பம்
பரிவொடும்பண்ணிமூழ்கிச்சிராததமும்பனவற்காற்றி. (௫௰)

தருப்பணம்பிண்டமீந்துதகவினத்தலைதாழ்ந்தேகி
விருப்பொடுவேதநாதன்வின்மணிப்பசும்பொன்வேய்ந்த
பொருப்புயர்கோயில்சூழ்ந்துபுரிவொடுமுக்காற்பூந்தேன்
விருப்புரங்கமழும்வாயிலுட்சென்றுகாதல்கூர்ந்தே. (௫௧)

---

* ஆதிசேதுக்கோடி-ஆதிசேதுவிலுள்ள தனுக்கோடி.

விடைமேவிக்கதைவெம்போர்வீமனொடுஞ்சுயோதனன்றான்விளைத்தல்காண்
ணிடையோவிப்பலபதியுமிலங்குகுருக்கேத்திரத்தினெய்ர்தநாஞ்சிற் [பா
படையோனும்பிரமசத்திபாற்றியதும்பரஞானம்பரித்தவாறுந்
தடைதீரப்பணித்தனனற்றனுக்கோடியுயர்சேதுதன்னிற்சார்ந்தே. (௬௰)

வீறுபுகழ்விநாயகனுஞ்சேதுவினிற்பிரமகத்திவிடுத்தானீது
கூறுபவர்கேட்பவர்தாங்கொடுவினைகள்பலவீட்டிக்குறைவிலாது
பேறுதருஞ்செல்வமொடுபிறங்குவராலெனமலர்சேர்பெரியோன்மைந்த
னூறுமதக்களியானையுலகளிக்குந்திறல்வேந்தற்குரைத்தானன்றே. (௬௧)

வேறு.

பத்திரன்மேவிய, சித்திரமார்சதை,
வத்திரமார்பவர், முத்தியர்தாமே. (௬௨)

பலபத்திரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨,௭௪௰.

---

## விநாயகச்சருக்கம்.

முற்றுமுலகத்திடையூறுமுழுதுமகற்றுங்களிற்றுமுகன்
பற்றும்பிரமகத்தியெனப்பகர்ந்தாய்பரித்ததிறமுமவ
னெற்றுந்திரைச்சேதுவிற்றீர்த்தவியல்புமருள்வாயெனவேத
மற்றுமுணர்ந்தோன்வடிவேற்கைமாந்தாதாவுக்கருள்புரிவான். (௧)

ஒலிநீர்ப்பவளக்கொழுந்தேறியுலவுமாதியுயர்சேது
கலியீர்க்தருளேபெருகுகதிகாட்டுங்காதையிதுகேணீ
வலியேந்தரியபெருந்தவத்தான்மதியக்குழவிவளர்முடிமேற்
பொலிவோனழியாவரமருளப்போந்தானுலகம்*பொதிர்படவே. (௨)

ஊறுங்கரடமதக்கலுழியுருமுச்சினத்தானுவரியனல்
சீறுஞ்சிறுகட்பொறிசிதறுந்திருகுசினத்தான்றிசைக்கரியின்
வீறுந்தவிர்த்தான்கடியமிடல்வேய்ந்தான்கயமுகாசுரனென்
றேறும்பெயரானுளனொருவனிமையோர்க்கொருகூற்றிவனென்ன. (௩)

ஆற்றற்கரியபெருவலியாலாகண்டலனையமரரொடிங்
காற்றிற்கதழுங்களிற்றினெடுங்கரைத்தேகமழும்பொழில்வான
நீற்றிற்பொடித்தமூவுலகுநிலையற்றழியத்துயரமுறீஇக்
கூற்றிற்கொடியோனிரவுபகற்குலைத்தானிருடிகுலத்தினொடும். (௪)

---

* பொதிர்-அச்சம், நடுக்கம்.

ஆற்றாரியமரரிரிந்தயர்ந்தேபலநாளரியினொடு
மாற்றாரேவல்புரிந்தகரிவதனக்கொடியோன்வழிபாடு
மேற்றாராகியினிமுடியாதெனவேயிடர்கூர்ந்திந்திரனோ
டேற்றாருவிக்கரியமணியொளியாளொருபாதுமைகோமான். (௫)

போலப்பொலியுந்திருக்கயிலைபுகுந்தார்வாயிற்புறமேவி
யாலக்களத்தோனீருருவாயமர்ந்தாங்கலங்கியமுனூற்றுங்
கோலக்குளிர்வெண்பிறைமுடியுங்குழவிமதியுமழுவாளு
மேலப்புனைந்தபலகோடியண்டத்திறையோரெழுந்தேத்த. (௬)

பொன்னம்பிரம்புகரமேந்தும்புனிதனாகுமருணந்தி
முன்னம்பணிந்துபுகழ்ந்தேத்திமுதல்வனாகியுலகாளு
மின்னந்தியுமின்குளனுக்கவிடர்கூர்ந்தெனியேயிரங்கியதாய்
தன்னைப்பிழந்தமகவேபோற்றளரந்தகுமோதாங்கெனலும். (௭)

அருளாலுயருப்பெருந்தேவனமலன்வேலையஃதாய்ந்து
தெருள்வானேகித்துயர்முழுதுந்தீர்ப்பேனென்றுமீள்வளவும்
வெருளாதுறைவீரெனவேவிளம்புஞ்சமயமோர்ந்தமலப்
பொருளாமிறைபேபுரந்தரனேமுதலோர்வாயிற்புறம்புக்கார். (௮)

பண்ணாளமையம்பார்த்துறைந்தேபரிவுகூர்ந்தார்பணித்தருளா
லெண்ணுமுன்னமழைத்தபெனவேயிமையப்பாவையவர்தாம்
பொன்னூர்தடையானைசெழுந்தாதுபுலைத்தகமலப்புதத்தாடு
மின்னுதென்னவெழில்காட்டுமியிணைதானிறைஞ்சியேத்தினரே. (௯)

வேறு.

பார்முதலாகிப்பரந்துபல்லுயிராய்ப்பகுதியாய்ப்பரம்பரமாகி
யோர்முதலறிவாய்முப்பொருளாயவிமலனேவேதநாயகனே
நீர்மிசையண்டமளித்துநிறைபுகுந்துநிலைபதினான்களித்தவற்றைச்
சீர்பெறநிறுவியரியயறகளித்தசெல்வமேதேவநாயகனே. (௧௦)

அருமறைச்சிரத்தினளப்பருமொளியாமநகனேயாருயிர்க்கமுதே
பருவமாருயிருட்பரிதருளாகிப்பாசவேர்பறித்திடும்பதியே
பொருவருப்பொருளேபுவனநாயகனேபொங்கிழைவனமுலைப்பொழியே
ரரிவையோடமர்ந்தவாதியேயரனேயமலனேயருளெனப்பணிந்தார். (௧௧)

வீங்குநீர்வேலைமீதெழுவிடத்தால்வீந்திடாதளித்துமுன்காத்தா
யீங்கெமைக்கொடியவிருட்கயமுகனுமெரிவிடத்தெறுவதற்கிரங்காய்
தாங்குபேரருளாலுலகெலாமளிக்குந்தலைவனேசரண்பிறிதறியேந்
தீங்குதீர்த்தருளாய்†செயசெயபரமதேசிகசெயவெனத்துதித்தார். (௧௨)

---

† செய என்பதற்குச்சர்வத்துக்கும் மேன்மையாயிரு என்பதுபொருள்.

சுடியவெந்தறுகட்கரிமுகன்படையாங்கடுஞ்சினத்தவுணர்காய்ந்தருந்த
நெடியசெஞ்சடையாய்முனிவரர்தேவர்நிலையழிந்தாருயிர்நீத்தார்
* மடிவிலேங்குர்திக்குந்திமேலெழுந்துமாறிருகைசெவிமாட்டி
யொடிவிலாக்கூத்துங்குட்டுமுன்னுவப்பவுஞற்றலாலொழிந்தவுஞ்செயலால்

அன்னவனியற்றுமருந்துயரளத்தற்கரியதாமாற்றலேமெனலு
முன்னவனிரங்கிமுகமலர்ந்தருளின்மூத்தமாமுகவனைநோக்கி
யின்னவரோடுமெழுந்துநீயேகியிமையவர்க்கிடுக்கணேயியற்றுங்
கன்னவிறிணிதோட்கயமுகனுயிரைக்காய்ந்திவண்மீள்கெனக்கழற. (௧௪)

செய்யசேவடிகள்பணிந்தெழுந்தமரர்சேனையோடேகிவெஞ்சினத்து
வெய்யதானவன்றிருக்கையைச்சூழ்ந்துவிண்ணவரலைசதிடவிடங்கால்
பையராவென்னக்கயமுகத்தவுணன்படர்தரும்படையொடுமணுக
மையலார்கொடும்போர்வானவரவுணர்மலைத்தனர்வருடங்கள்பலவே. (௧௫)

மலைந்தனர்நெடும்போர்மறங்கிளர்ந்தடர்த்துவழங்குழிவானவர்மாற்றார்க்
குலைந்தறவோடிவிநாயகன்சரணமுறவவனூற்றமாரவுண
ரலைந்துயிர்நீங்கியாற்றலராசவடர்த்ததிர்ந்தகைத்திடவழிந்தே
சலைந்தனரோடக்கயமுகவசுரன்கண்டுவெங்கூற்றெனவெதிர்த்தான். (௧௬)

எதிர்ந்தவன்காலவெரியெனக்கதுவவிருவருமிகலுறுங்கடும்போர்
பிதிர்ந்துடல்கிழியும்§பிறக்சமுமறியார்பெருகுவெஞ்சினச்சமம்பேணி
யதிர்ந்திடவுலகமநந்தனுநெளியவாற்றினரருவரைபலவு
முதிர்ந்தனவூழியுருமெனவெம்போருடற்றினர்வருடநூறுகவே. (௧௭)

வலியழிந்தவுணன்மடங்கிவெங்குருதிவாயுமிழ்ந்தவிந்திடமதமாப்
பொலிமுகப்புனிதன்பொருதடர்ந்தலைப்பப்புரிவுறும்போர்த்திறமறந்த
மெலிவுகண்டிரங்கிவாகனமாகமேவெனவிரகளித்தருளக்
கலியொழிந்தவனேமூடிகமாகிக்கணபதிக்கினியனாய்க்கலந்தான். (௧௮)

செழுந்தருநீழற்றேவர்கள்கூடித்தீர்ந்தனம்பகையெனத்தெளிந்து
கொழுந்தவிர்சடிலக்குழகனன்மகவாங்குஞ்சரமுகவனைப்போற்றித்
தொழுந்தகுபூசைசுவைதருமதுரந்துறுங்கனிமோதகங்கன்ன
லெழுந்துயர்தெங்கினிருங்கனிபொரியோடெள்ளவலேனையபலவும். (௧௯)

தாதவிழ்நறும்பூச்சந்தனமாலைதழன்மணிப்பூண்பலதழையுங்
காதலினளித்துப்போற்றியபின்னர்க்களைகளுய்க்காத்தெமையளித்த
போதகவுருவப்புண்ணியப்பொருளேபுவனமாமூன்றையும்புரந்தா
யாதலினறைவாமருஞதியென்றுவமரர்களனைவருமுரைப்பார். (௨௰)

* உஞற்றலாலொழிந்தவுஞ்செயலால் மடிவிலேம் என முடிக்க. § பிற
க்தம்-வழு.

இக்கொலையதனுக்கிரும்பரிகாரமியம்புமின்னீரெனவிசைப்பத்
தொக்கவர்*தானந்தயர்த்தவம்பலநாட்சோர்வுறவாம்பரிமேத
மிக்கொருங்கியற்றவீயுமென்றிசைப்பவேழமாமுகவனையாத
னக்கணநீங்குமுறுதியொன்றுரைப்பனையகேட்டருளெனவறைவான். (௨௯)

நிறைந்தமாமுனிவர்நிகழ்த்தினவெல்லாநெடுந்துயர்நெடும்பொழுதகற்ற
வறைந்தனவாகுமயர்வறவெளிதாயக்கணமருவினையாவுங்
குறைந்திடுமுபாயங்கூறுவனடிகேள்குறிக்கொடுகோடிநீகுழக
னுறைந்திடுவேதவனமெனத்தென்பாலோங்கிடுமுலகெலாமேத்த. (௩௦)

அப்பதித்தென்பாற்சேதுவிற்கோடியலங்கிடுமங்கதுகாணின்
வெப்புறுவினைகள்விப்பிரக்கொலைகள்விளிந்திடும்விழைந்ததினுடிற்
செப்புவதுளதேசெயும்பரிகாரந்தீர்வருசெறிவினைத்திரளு
மொப்பருஞ்சேதுவொழித்திடுங்கழுவாயுள்ளதற்குரைப்பதுமுளதே. (௩௧)

கோடியிற்பிரமகத்தியோர்கோடிகுருமனைகவர்தலோர்கோடி
மாடியற்பொருளைக்கவர்தலோர்கோடிமதுவினைமாந்தலோர்கோடி
சாடியற்புதமாந்தருமமோர்கோடிதழைத்திடுஞ்சார்ந்தவின்மூழ்கி
†யாடியிற்றிகழுமிலிங்கமொன்றுற்றியரிச்சைசெயுமாற்றினையாயின். (௩௨)

வேதியக்கொலைபோய்விளிந்திடும்பின்னர்வெள்ளியங்கிரியினைமேவி
யாதியைப்பணிந்துசாமிநீயமர்கென்றறைசெயவவனுடுமறயோ
ருதியப்பயனோர்ந்துணர்ந்தனர்சூழவொளிர்தருமறைவனமேவி
நீதியிற்சேதாங்கோடியிற்படிந்துநீக்கிவெவ்வினைத்திறநினைந்தே. (௩௩)

வேறு.

குளகனதருகுமேல்பான்மாருதக்கோணமேவ
வளமுறுமோரைதன்னின்வளரொளியிலிங்கந்தாபித்
தளவறுமுபசாரத்தினருச்சனையாற்றிப்போற்றி
யுளமகிழ்வெய்தியங்கணுறைந்தருந்தவத்தரோடும். (௩௪)

அருந்துயர்ப்பிரமகத்தியகற்றியேயறவரோடும்
வருந்தலற்றேகிமூத்தோன்வளரொளிக்கயிலைமேவிக்
கருந்தடங்கண்ணியோடுங்கண்ணுதல்பாதம்போற்றி
யிருந்தனனுவகையோடுமிமையவர்யாரும்போற்ற. (௩௫)

---

* தானம், தவம், பரிமேதங்கள், செய்யின் நெடுங்காலத்தின் பின்னீங்கு மென்பதுகருத்து. † ஆடியிற்றிகழுமிலிங்கம் என்பதற்குப் படிகலிங்கமென் றுரைப்பாருமுளர். அங்ஙனம் முதனூலிற்கூறப்படாமையானும், படிகலிங் கம் [illegible] யாண்டுமின்மையானும் அது போலியுரையென்றொழிக.

எண்ணறுங்கொடியபாவமியற்றினரேனுமீசன்
புண்ணியமறைநசைமேவிப்பொருசடற்சேதாங்கோடி
நண்ணியேபடியிற்றீமைநாசமாய்நலத்தினெய்ந்து
கண்ணியகயிலைசூழுங்கணத்தொடுங்களிப்பர்கண்டாய். (௧௬)

நூற்பரிகாரமில்லாநுவலரும்வினைகளேனுஞ்
சூற்பணிலங்கள்சூழுஞ்சேதுவிற்றுயிற்றீரும்
பாற்படுமுலகிற்றீர்த்தமியாவினும்பரியாப்பாவ
நீற்கருமுகில்சூழ்கோடிநினையினுநீறுமன்றே. (௧௭)

பொருங்கடற்சேதுமேவிப்புகழ்தனுக்கோடிப்பூரி
ரொருங்குறப்படிந்துகைம்மாவொளிமுகத்தொருவன்பூசை
தருந்தியிலிங்கங்கண்டேதாழ்ந்தவர்தணந்துபார்ப்பா
ரருங்கொலையாதிப்பாவமரன்றிருக்கைலையாள்வார். (௧௮)

கொற்றவில்லிராமன்சேதாக்கோடியிற்படிந்துதூய்மை
யுற்றவர்குலத்தினுள்ளோரியாவருமுவப்பினோங்கி
யற்றமிலின்பமேவியரன்பதியடைவரென்றுன்
மற்றதன்பெருமையாரேவகுத்துரைசெய்யவல்லார். (௧௯)

மகங்கொடையோகநோன்பின்வருந்துதலின்றிவாய்மை
தகும்பதம்வேண்டிற்றெல்லாந்தந்திடுதருமாலகு
மகந்துளிர்ந்தமலமாகவளிற்றிடுமிருளையீரு
மிகம்பரமிரண்டும்வேண்டினெய்துகவிதனபால்யாரும். (௨0)

பற்பலநெறியினும்பணிவுறுமோர்தொகாணு
வெற்புறுதிணிதோண்மேவுசிகுரவிரிபனுப்வேந்தன்
பொற்புறுபுதல்வனுரப்பொருந்திறலாழியானை
யற்பொடுசேதுமூழ்கியடைந்தனனரசரேறே. (௨௧)

வேறு.

உலகுயிரின்புறவுதவிராகவ
னலர்தனுக்கோடியின்மேன்மையாவையுஞ்
சொலவரிதிச்திருச்சேதுதோய்ந்தவர்
மலரடிகாணினுமாயும்பாவமே. (௨௨)

எனமுனியரசனுக்கேற்பவோதினன்
மனமகிழிக்கதைவழுத்துவார்கடாங்
கனவெனக்கடுவினைகழிப்பர்காமுறும்
புனமயிலுமையொடும்புணர்ந்த * பூதனே. (௨௩)

விநாயகச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨,௭௮௩.

* பூதன்-பரிசுத்தன்.

# கிருதவீரியச்சருக்கம்.

காயமேவியநற்பயன்காணுமா
வாயவோதினைவார்கடற்சேதுவின்
பாயமேன்மையரியவன்பாலனே
யாயவண்ணமருளெனக்கூறுவான். (௧)

கொம்மைவெம்முலைக்கோதையர்சிந்திய
செம்மையார்தருகுங்குமச்சேற்றிடை
வெம்மைநீங்கவிடுத்தபணிசெறிந்
தம்மைவாரணினவணியலங்குமே. (௨)

கூனலம்பொரச்சாய்ந்துகொழுமடற்
பானலம்பணைப்பன்மலர்சிந்திய
தேனலம்பறற்செம்பொன்வரன்றியே
கானலம்பெறக்காசொடுகாலுமே. (௩)

முகந்துகொண்டமுழுநிதியார்வல
ரிகந்துதாங்கரிதென்னவியல்வள
முகந்துசெல்வமுறுங்குடிமல்கியே
திகழ்ந்துகேகயதேசஞ்சிறக்குமே. (௪)

நிகழ்ந்தசெல்வநிறைத்தபயனெனப்
புகழ்ந்த * மாகிண்மதிநகர்ப்பொன்னெயி
லகழ்ந்துவானகடப்புறத்தந்நல
மிகழ்ந்துசென்றதுகீழ்ப்படவெண்ணியே. (௫)

வேற்றுமன்னர்விறற்படைவீய்ந்துக
வாற்றுபல்கருவித்திரளான்றது
போற்றுமப்புரிகாவலன்போரிடைக்
கூற்றுமுட்குங்கொடுந்திறற்கோமகன். (௬)

ஏயவெண்கலையொண்கலையாயியல்
வாயவான்சுரர்பூசுரர்வாழ்வரு
டாயமொப்பிறுத்தாங்குங்களங்கமா
மாயவெள்ளிமதிக்குலமன்னினான். (௭)

கருதலார்முடிக்காசுழக்காய்கழற்
கிருதவீரியனென்றுயர்கீர்த்தியான்
பொரு * திரேவதிப்பூம்புனல்சூழ்புர
மருதுபோழ்ந்தவனென்னவயங்கியே. (அ)

ஆக்கந்தன்னினுமன்னுயிர்க்காக்கியே
நீக்கமின்றிநிலமகடன்னொடும
† பூக்கொணமாதரையும்புணர்ந்தேபுவி
காக்குநாளிற்கவலையிற்கன்றினன். (கூ)

மழலையின்மொழிவார்மதுரச்சுவைக்
குழலிசைசெவிப்புலங்கொள்கிலா
ரழகுமாண்மையுமாயுளுஞ்செல்வமு
முழுதுமாறுமுறுதியிலரென்பயே. (௧0)

‡ வழியிழந்தவராக்கமருவிடார்
குழியில்வீழ்வரெனத்துயர்கூர்ந்தரன்
மொழியுமாரணமுற்றி § முதுக்குறை
விழியின்மேயவிரதரைக்கூவியே. (கக)

இருமையார்தருமின்பமுமீந்திடு
முரிமைமைந்தனுறுதற்குபாயநீ
ரருமையாயினுங்கூறுமினென்றவன்
பெருமையீரெனமாதவர்பேசினார். (கஉ)

இழுகினுகுதியீந்திடுவேள்வியாற்
பழுதிர்மகவென்றனாபற்பல
ரெழுதுபாவையெனப்பொலியோகமே
விழுதுபோன்மகமேவவென்றார்சிலர். (கங)

பற்றகற்றியதானநற்பாலனை
முற்றநல்குமென்றார்சிலர்மோனிகள்
கற்றவாறுகரைந்தனயாவையு
மற்றமீர்ந்தவனேற்றினனன்பொடும். (கச)

---

* இரேவதி ஓர்நதி. அது சூழ்புரமென்றது மேற்கூறிய மாகிஷ்மதி புரத்தை. † பூக்கொண் மாதரென்றது வெண்டாமரை செந்தாமரை யாசனிகளாகிய சரசுவதியையும், இலக்குமியையும்; புணர்ந்தெனவே கல்வி செல்வங்களையுடையனுயினன் என்பது கருத்து. கன்றல் மிகுதலென்பது மேலுங்கூறினும். ‡ வழி-மகன். குழி நிரயக்குழி. § முதுக்குறை-பேரறிவு.

இழைத்துமைந்தனின்றாகியிரங்கியே
யுழைத்துமில்லதுபாயமுணர்ச்சியாற்
றழைத்துமல்குதலின்றெனத்தாதளி
குழைத்தபைந்தொடைக்கோவுளங்கொண்டரோ. (௧௫)

பரந்தமாநிலமுற்றும்பகையொரீஇ
யரந்தைதீரவளித்திடுமாயிடை
நிரந்தகானகவேட்டையினேயமாய்ப்
புரந்தகாதலிற்போக்குளங்கொண்டவன். (௧௬)

வேறு.

வெஞ்சரந்தூணிசாபம்விசித்தவாள்பலகைமேனிப்
பஞ்சரந்தாங்கிச்செம்பொற்பணிக்குழைபலவும்பெய்ந்து
நஞ்சரங்காய்ந்தவெள்வேனரபதிநகையாரம்பொன்
மஞ்சரணுபதேரின்மாசதர்வாழ்த்தச்சென்றான். (௧௭)

பெய்மதக்கலுழியூற்றும்பிளிறுவெங்குரற்போர்க்கைம்மாக்
கொய்யுளைக்கலினப்பாய்மாக்கூவிரச்சொடிஞ்சிகூற்றின்
வெய்துறும்பதாதிசூழ்ந்துமிடைந்துறவிளைஞர்சூழப்ப
வெய்தினனிரவிக்கஞ்சியிருளபடிநதெழாதகானம். (௧௮)

பருமரந்துவன்றிவீசும்பசுந்தழைபொதுளிப்பாய
கருமுகிற்கணததிற்கார்செய்திடியெனகசடியபன்மா
வெருவொலிமிடைநதிர்றவிறற்கரியரிமாவேங்கை
கருமயிர்க்கரடிசெங்கட்கோலமாக்கடியவாமா. (௧௯)

செறிந்திருளடவிமேவித்திருகுவெஞ்சினத்துப்பன்மா
மறிந்துசோர்ந்தயர்ந்துவீழவடிக்கணைவழங்கிவாளா
லெறிந்துவெங்களியிருடலேயினனிணர்ப்பூவாவி
நறுந்தடங்குளிர்ந்தகான்யாற்றடைகரைநயந்துநண்ணி. (௨௦)

நெஞ்சகங்களித்துத்தண்பூவணமெலாநினைந்துநீடி
மஞ்சணிபுனிதமாயசையமால்வரையின்சாரற்
குஞ்சரப்படைவிநோதக்குறிவிசித்திரமுஞ்சோல
வஞ்சனநெடியவாட்கணணங்கவராடன்மற்றும். (௨௧)

தெரிந்தகமகிழ்ச்சிமேவித்திரிபவன்செம்பொற்சோதி
விரிந்தகந்தரத்திற்சூழ்ந்தமின்னெனவிளங்குவேணி
வரிந்தொளிர்புலித்தோலாடைவற்கலைவாய்ந்தமாலை
புரிந்தகண்டிகைவெண்ணீற்றின்பூச்சுடன்முழுதும்போர்ப்ப. (௨௨

கலையுரிமீது*வீரவிருப்புடல்கவினவாற்றி
நிலைபெறுஞ்சமாதிமேவிநேத்திரங்குவித்துநீடுந்
தலையுலகனைத்துமின்பாஞ்சங்கரனுருவந்தானு
யுலைவறவுவந்துதத்தாத்திரையனங்குறையக்கண்டான். (௨௩)

கண்டவன்கண்ணீர்வீழ்த்துக்காதலாற்புளகம்போர்ப்ப
மண்டியபத்தியான்மண்மேற்பன்முறைவணங்கிவாழ்த்தப்
புண்டரீகக்கண்ணேக்கம்புரிந்தவனைபுனிதனுக்க
தெண்டிரையமுதம்போலுமாகியுஞ்செப்பியின்னும். (௨௪)

சூழ்தநின்சுற்றத்தோடுந்துயரறத்துசனிற்றீர்ந்து
வாழ்ந்தனைகுடிகளோங்கிவளர்தருநாடுமனைத
தாழ்ந்துநின்பகையுங்கெடதருமத்தின்வழாதுசாயன்
மூழ்ந்ததேயெனவினவிமொழிதருங்குசலங்கூறி. (௨௫)

ஆய்ந்தபின்னிங்குநம்பாலடைந்ததென்னகத்துச்காம
மேய்ந்ததையளிப்பன்கூறென்றிசைத்திடவிறையன்மேன்மை
வாய்ந்தநின்னருளிதனாலெழுங்கியயாவுநன்மை
தோய்ந்தனன்குசலமேவித்தோன்றலறயர்வன்றெல்லோய். (௨௬)

தானமுந்தவமும்வேள்வித்துதியுந்தழையச்செய்து
மானநன்மைந்தனற்றேன்வழங்குதிவரமீயென்றுக்
கோனவன்கூறநோற்குங்குணத்தவனகுழமன்மைவும்
வானகமேவியோங்குமலைமுடிமகிழ்ந்துகாணின். (௨௭)

வந்தியுமகவையீனுமற்றவர்க்குரையென்வாட்டுஞ்
சிந்திரீசுரசன்போலத்திகழ்தருகயிலைச்செயபொற்
பந்தியஞ்சிகரநோக்கிப்பாலனைப்பெறுதியென்ன
மைந்தியலரசன்போற்றிமாதவன்றனக்குச்சொலவான். (௨௮)

மசவறத்துயரமேய்ந்தசுரசனவண்ணமெல்லாந்
தகவருள்புரியாயெனனத்தவமுனிசாற்றுஞ்சால
வகமகிழ்†சுரசனென்பானரசமாவிருடியாக்கம்
புகவுலகளிக்குநாளிற்புலர்ந்தனன்புதல்வரற்றே. (௨௯)

சுருதிநூலாய்ந்துநோற்குந்துருவாசன்சரணமேவித்
தருதிநீபுதல்வனென்னததாழ்ந்தடிபல்காற்போற்றக்
சருதிநின்றனக்குவாயுங்காண்முனையிலைகன்றைப்
பரிதிவேணிருபமுன்னம்பாற்றினையசுவினீங்க. (௩௰)

* வீரவிருப்பு-வீராசனம். † சுரசன் இராசவிருடியாயிருந்து உலகத்தைப்புரந்தான் என்பது கருத்து.

முற்பிறப்பதனுலிம்மைமுனேயிலாதயர்வாய்வெள்ளி
வெற்பினிற்சிகரங்காணின்விழைந்திடுந்தோன்றலுண்டா
மற்புதன்கயிலைகாணின்மலடியுமடைந்தேயெச்சம்
பொற்பமர்ந்திலங்குமென்னப்புகன்றிடுஞ்சுருதிபோற்றி. (௩௧)

செல்கெனவிடுப்பவன்றேன்செய்யசேவடிகள்பல்காற்
புல்லினன்புகழ்ந்துபோற்றிப்புனிதநீயருளினல்லா
லெல்லியல்கயிலையெங்ஙனெளியனேனெங்ஙனென்று
நல்லியனீயேநீயேனலம்பெறவளிப்பாயென்ன. (௩௨)

உள்ளகங்குழைந்துசோதியொருவனையுளத்துளாக்கி
யெள்ளருந்தவத்தான்வேண்டவிறைவனைதருளானந்தி
வெள்ளியங்கிரியின்மேயமுடியொன்றுவிளங்குமேன்மை
தெள்ளருந்தவத்தோன்மேயவாச்சிரமத்திற்சேர்த்தான். (௩௩)

சுரசனையழைத்துமேன்மைதொகுந்துருவாசனீது
பிரசமார்சிகரம்போற்றிப்பேணிநீபணிதியென்னப்
பரசினன்பணிந்துதூயபாலரைப்பண்பிற்றந்தா
னரசனீசிகரங்காணினுமெனவயர்ந்துசொல்வான். (௩௪)

மக்கட்பிறப்பின்மேவிவழியறுமெளியேற்கீது
தக்கதன்றென்றுபோற்றத்தளர்வொழிசலிலநான
மிக்கதோருபாயமாகும்விளம்புவன்விருமபிமேவிப்
புக்கவந்நிலையேதோன்றலளித்திடும்புனிதநல்கும். (௩௫)

பாவமாங்கொடியகானம்பசையறப்பற்றித்தீய்க்குந்
தாவமாம்பிறவிவற்றுத்தடங்கடறணந்துநீங்கு
நாவமாநிலத்தோர்க்கென்றுநயந்தனயாவுநல்குந்
தேவராருலகிற்சிந்தாமணியெனச்செப்பற்பாற்றே. (௩௬)

வேறு.

இம்மாஸ்வரைக்கீழ்த்திசைநீசிலதூரமேகி
னெம்மானெனவேயிமையோர்தொழுதேத்தமூதூர்
செம்மாமலர்த்தேன்பொழிகாவிடைத்தேவரோடு
மம்மானையார்பயிலாரணகானமாமே. (௩௭)

கணமாயினுமப்பதிமேவினர்காதல்கூரத்
தணவாதுகிளைத்தவர்தாமரைத்தாதுசூழ்ந்து
மணமார்தருவாவியின்மூழ்கினர்மாதுபாகங்
[illegible] (௩௮)

கூடற்கரிதாகியமுத்தியுங்கூடிவண்டு
பாடற்களியாலிளமஞ்ஞைகள்பார்ப்பிரோடு
மாடற்கினிதார்தருநீழலுமார்வரன்பா
லுடற்கணியாரரமங்கையர்காப்பணுற்றே. (௩௯)

அங்கப்பதித்தென்றிசைமேவிடுமாதிசேது
துங்கத்தனுக்கோடியிலங்கிடுஞ்சோதியாகி
நங்கற்பகமீதெனக்கண்டுநயந்துபோற்றிச்
சங்கற்பமகத்துறமந்திரஞ்சாற்றிழூழ்கி. (௪0)

புலமேவினர்பூவொடுபோற்றியவேதநாதன்
மலர்போலடிவாழ்த்திவணங்கிமகிழ்ந்துமேவிக்
குலமாமணிபோன்றுகுணங்குறிகொள்கைமேன்மை
நலமார்தருமைந்தனைமேவுதிநாமவேலோய். (௪௧)

திருமாலயனிந்திரனேழ்திசைத்தேவர்மேவும்
பெருவாழ்வருளும்பதம்பீடுபிறங்குமேன்மை
யொருவாத்திருநற்புகழ்கல்வியுணர்ச்சிமற்றுங்
குருமாமணிசிந்தியகோடிகொடுக்குங்கோவே. (௪௨)

ஐயந்தவிர்ந்திம்மொழிமெய்யெனவார்வமேவி
வையந்தொழுங்கோடியின்மேவெனவாய்மையோதந்
தெய்வந்திக*ழத்திரிபுத்திரன்செய்யபாதந்
தைவந்துளமேவுமகிழ்ச்சியிற்றூழ்ந்துபோற்றி. (௪௩)

வேறு.

என்கிருதவீரியனெழுந்துவிடைகொண்டான்
பண்பிரெடுதண்ணடைகள்பற்பலகடந்தா
னண்புறவிலங்கொளியிலுகமதியாகம்
புண்படவிவந்தகொடிபோழ்மறைசைபுக்கான். (௪௪)

செம்பொன்மணிமாளிகைகளும்பர்நிலைசேரக்
கொம்பனையமங்கையர்கணம்பணிகள்கூடிப்
பம்புதருவம்பலர்களன்பொடுபறிப்பார்
தம்பணியிலம்பகநலம்பெறுதகைத்தாம். (௪௫)

வானமதுபூநிலையின்வந்துவளமேவிக்
கூனல்வளைமாகடல்கொழித்தமணிகோர்வை
பானிலவுமீனகிர்பான்மையுறுவேத
கானமுதிர்காதலொடுகண்டுதொழுதய்ந்தான். (௪௬)

* தத்தாத்திரையர் அத்திரிமுனி புதல்வரெனவறிக.

வேறு.

ஆதிசேதவிருடுதற்கெண்ணியோகூல
மோதியீர்திரைக்கோடியின்முன்னினன்முதநூல்
* வேதியாயசங்கற்பமும்விளம்பினன்மனுவு
மோதிமூழ்கினனுலப்பறுமுவகைகொண்டுரவோன். (சஎ)

† தாரமேமுதறபனியந்தரணியான்றகவா
லீரமாருளத்தீந்தறனியதியுமிழைத்து
வாரமாயயன்மான்முதல்வானவர்வணங்குஞ்
சீரமுதொளிர்மறைவனச்சினகரஞ்சேர்ந்து. (சஅ)

மாடுமும்முறைவலஞ்செய்துவணங்கியுண்மருவித்
தேடுமாமறைச்சிற்பரன்செழுமடற்கமலத்
தோடுபோலொளிர்துணையடிமுடியுறத்தொழுது
கூடுமன்பினுற்குழைந்துளந்துதிசெயக்குறித்தான். (சக)

வேறு.

தெள்ளுமாமறையின்சிரத்தொளியாகிச்சிற்பரானந்தமாய்த்தெளிவாய்
விள்ளுமாறறியாவிமலமாய்வெளியாய்விகற்பமாருலகெலாமாகி
யுள்ளுமாய்ப்புறம்பாயுண்மையாயறிவாயுலப்பறுமொருமுதலாகிப்
புள்ளுவார்கொடியோர்தமக்கரிதாயபூதனேவேதநாயகனே. (ருo)

விளங்குபூரணமாயெவற்றினுமேவிவேறறவிணைமனக்குறிப்பு
மளந்துணர்வாகியகிலமுந்தோன்றியழிந்திடவதற்கிடமாகி
யுளங்குளிரின்பவுருவமாத்திரையாயுகளமற்றசலமாயோங்கித்
துளங்கறும்பரமேசுயம்பிரகாசச்சோதியேவேதநாயகனே. (ருக)

நாகிளந்திங்கட்குழவியின்மெருழுக்குநகைகிலாவணியினுய்போற்றி
வேகமாய்மாகம்விழுங்குதற்கெழுந்தவெள்ளமார்வேணியாய்போற்றி
பாகனமென்சொற்படாமுலைப்பணைத்தோட்பவானிசேர்பகவனேபோற்றி
சோகவேரறுக்குந்துணையெனக்காயசுருதிமாவனத்தனேபோற்றி. (ருஉ)

ஆதியாய்‡மணியிற்சூத்திரம்போலவனைத்தினுமமர்ந்தனேபோற்றி
பூதியாலளித்துத்துடைத்தவைகாக்கும்பொருவிலாப்புனிதனேபோற்றி [றி
சோதியாய்மறையின்றுணிவுமாய்ச்சுடராய்ச்சொலற்கருந்துரியமேபோற்
வேதியாய்ப்பாகத்துயிர்க்கருள்வழங்கும்வேதமாவனத்தனேபோற்றி. (ருங)

---

* வேதோத்தமாகிய சங்கற்பம். வேதோத்தம்-வேதத்திலே சொல்லப்பட்டது. † தாரம்-வெள்ளி. ‡ இரத்தினத்திற் கோத்தநூல்போல.

குணங்குறிகொள்கைநீங்குங்கோதிலாவமுதேபோற்றி
பணங்கிளரரவஞ்சூடும்பரஞ்சுடர்ப்பதியேபோற்றி
யிணங்கியுமுயிர்கண்மூற்றுமிணங்கிடாவிறைவாபோற்றி
மணங்கமழ்மறைசைமேயவளரொளிமணியேபோற்றி. (௫௪)

நெக்குளமுருகிப்போற்றிநினைபவர்க்கினியாய்போற்றி
முக்கணெம்பெருமான்போற்றிமுடிவிலாமுதலேபோற்றி
மிக்குயர்சனகனுதிக்களித்திடும்விமலாபோற்றி
செக்கரஞ்சடையாய்போற்றிசிவசிவபோற்றிபோற்றி. (௫௫)

போற்றியிதயப்பொகுட்டினடுப்புணர்ந்தேமுழுதும்புலப்படுப்பாய்
போற்றியமலவானந்தப்புணரியாகிப்புகுந்தளிப்பாய்
போற்றியகிலமினைத்தினுக்கும்புகலாமறைசைபுரிந்துறைவாய்
போற்றிவேதநாதனெனப்பொலிவாயருணீபுரியெனவே. (௫௬)

வேறு.

அருவிபோல்விழிநீரலைப்பமெய்ப்புளகமணிந்தவனகங்குழைந்தன்பா
லுருகியேபணியமறைவனமேயவொருமுதலுவந்தெதிர்தோன்றிக்
கிருதவீரியநீகிளர்தனுக்கோடிகிடைத்ததிற்படிந்தனையதனாற்
பொருவருந்துதியான்மகிழ்ந்தனம்வரநீபுகலெனப்போற்றினன்புகல்வான்.

இலக்கணமுழுதமமைந்தரிபோலவிலங்கொளித்தேசிறேடியைந்த
வலக்கணில்புதல்வனளித்திடவேண்டுமெளியனேனமைத்தவித்துதியை
நிலக்கணேதினர்க்குமுத்திநீயளித்துநினைந்தனவருள்செயவேண்டு
நலக்கணமறைதோய்நம்பனேயிரண்டேநயந்தநல்வரமெனப்பணிந்தான். ()

ஆங்கவனுரைப்பமறைவனமேயவண்ணலு * மரிதனதஞ்சம்
பாங்குறுமகவாயாயிரங்கரமும்பரித்ததாய்ப்பலரிதயத்திற்
றூங்கு † மாசயமோர்ந்தருள்வதாய்வருமாற்றந்தனமற்றதுதளர்வி
னீங்குநீயேகென்றுரைத்தரன்மறையநிருபனும்பணிந்தருணினைந்தே. (௫௮)

பொன்னகரேகிப்புரவலனமர்ந்தானயநாட்புனிதன்வைகுண்டன்
‡ தன்னகமன்னித்தானலதரியாற்றனவர்ச்சாய்த்தலின்றென்னு
மின்னவிராழிப்படையினைநோக்கிவெகுண்டுமான்மேவியென்முனநீ
பன்னருமகந்தைகொண்டனையவுணர்பகையறப்பரிவினிற்படர்ந்தே. (௬௦)

அரிந்ததேயன்றியரியினுலாவதரிதெனவகந்தையின்மதித்தாய்
பிரிந்திவணேகிப்புடவியிற்பிறவிபெறுகெனச்சபித்திடப்பெரியோய் [ற்
தெரிந்திலாச்சிறியேன்பிழைபொறுத்தருணீசெய்யெனுஞ்சேவடிப்போற்றி
பரிந்தவனிரங்கிப்பாரிடைக்கிருதவீரியன்பாற்பகர்மகவாய். (௬௧)

* விஷ்ணுவினதம்மிசம். † ஆசயம்-எண்ணம். ‡ தன்னகமன்னி என்பது தன்னிடத்தில் நிலைபெற்றிருந்து; தன்னேயிருந்தென்னும் பொருட்டு-தன் என்றது விஷ்ணுவை.

வேறு.

குன்றினைமுருக்குங்கொற்றத்தாயிரங்குலவுத்திண்டோ
ளொன்றினின் * சுடரிற்றோற்றியுறுவலியரிமானேற்றிற்
பொன்றிகழ்கழற்கான்மன்னர்போற்றிடப்புரந்துபூம்பார்
வென்றியிற்சீர்த்திவித்திவேள்விகள்பலவும்வேட்டாய். (௬௨)

வேறு.

மீளவீங்குரம்பானுறுவாயெனவிளம்புங்
காளமாமுகிலடியிணைகசிவொடும்போற்றிக்
கேளவாவியகிருதவீரியன்மகவாகி
வேளுமாசுறவேந்தனுயமர்ந்தனன்விறலோன். (௬௩)

† கார்த்தவீரியனாகியமதலையைக்கண்ணுற்
றார்த்தசேதுவீதளித்திடும்பேறெனவமர்ந்து
தீர்த்தராசனுங்கோடியைப்புகழ்ந்தனுதினமுங்
கூர்த்தவெள்ளிலைக்குருதிவேற்கோவுளங்குளிர்ந்தான். (௬௪)

நீலமாமணிவண்ணனைநெடுநிலம்புரக்குஞ்
சீலமேவியகிருதவீரியனெனுந்திறலோன்
சாலுமைந்தனுயடைந்தமைசாற்றினந்தருமத்
தாலவாலமாம்பயனெலாந்தழைப்பதற்கதுவே. (௬௫)

ஆதிசேதுவிற்படிந்தவர்கிளையொடுமமர்ந்தே
யாதிமேவியபுரியிடையலங்குவரறத்தை
யோதியாயினுமுறுதவர்மூழ்கினுமுவந்தீ
ரோதியாமிழையுற்றபாலவன்புரியுறைவார். (௬௬)

கடியதீவினையுற்றவர்கலியினிற்கரைந்தார்
கொடியலாகிரப்புற்றவர்நோயுறவழன்றார்
வடிவமாயிழைமைந்தரைவிரும்பினர்மற்று
மிடியினார்க்கிருங்கோடியேகதியதாம்விளம்பின். (௬௭)

ஞானயோகங்கடவஞ்செபநலந்தருவேள்வி
தானமாதியதகையெலாந்தனுப்பெயர்க்கோடி
யானதாடலேயழிவிலாத்திருவொடுமணிக்கு
மூனமாற்றிடுமீதலாலுறுதியுமுளதோ. (௬௮)

---

* விஷ்ணுவின் சுதரிசனமென்னுஞ் சக்கரத்திற் காயிரமுனையுண்மை யின், ஆயிரங்கையோடு பிறக்கும்படி அவ்விஷ்ணு கூறினரென்க. சுடர் என்றது முனையை; காந்தியை யன்று. † கிருதவீரியன்மகன் கார்த்தவீரியன்.

பலவுமோதியென்புத்தியுமுத்தியும்பரிந்தோ
ரிலகுசேதவிருடலேயினியதாமிதபோ
லுலகின்மிக்கதொன்றில்லையாலுறுதியோர்ந்திங்ஙன
னலகின்மேன்மையாலளித்ததாமவிர்சடையடிகள். (௬௯)

வேறு.

மணிதருமாதிசேதுவளர்தனுக்கோடிக்காதை
பணிவொடுசொல்வோர்கேட்போர்பரமனதருகுபார்ப்பா
ரணிதருமவையிற்சொல்வாரருவினையனைத்துமாற்றிப்
பிணியொடுபிறவிதீர்த்துப்பெருந்திருப்பெற்றுவாழ்வார். (௭0)

வேறு.

இதுவாதியிராகவனுலியற்றியவாதிச்சேதுவிணர்ப்பூலூற்றும்
புதுவாசமருததனுககோடியெனாரதனுமபுனிதமேலோன்
மதுவாருமினியமொழிமாநதாதாமகிழ்தூங்கவகுத்தவாய்மை
யதுவாயவுரைப்பவருங்கேட்பவருந்திருமேவியமலமாவார். (௭௧)

கிருதவீரியசசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ,அ௩௪.

---

# வேதாமிர்தச்சருக்கம்.

தாதாவருண்மைந்தனதாமரைததாளகள்போற்றி
வேதாவமிர்தந்தருமேனமைவிளமபுகென்ன
* வாதாயனமூழ்மதககதிர்வார்வதேபோற்
காதார்தரவோதினனூரதன்காதலோடும். (௧)

முன்னங்கழிகாலையின்மாமறைமுற்றுமீசன்
பொன்னங்கழற்பூசைபுரிந்தருள்போற்றிமேவற்
கனனந்துயிலவாவியதாகவசழ்ந்துதமபேர்
மன்னுமபடிசெய்ததுபல்லுயிர்வாழ்வதாக. (௨)

சிறைவண்டுகுடைந்தாறுந்துடைட்செய்யமென்பூ
நறைவிண்டசெழுகதடமீதுகயந்தமூழ்கிற்
கறைகொண்டுகடிந்தயர்திமைகரிதக்கவற்
றிறைமுண்டகனம்புயச்செமபதத்தேல்லைசேர்வார். (௩)

* வாதாயனம்-சாளரவாய்தல்.

திருமாலுருவாயவியாதனித்தீர்த்தமூழ்கிப்
பெருமாமறையாயதொகுத்தருள்பேணியுய்ந்தான்
குருமாமணிசிந்தியவித்தடங்கூடிமூழ்கித்
தருவார்நிழலுற்றவரெண்ணிலர்தாரைவேலோய். (௪)

என்றேமுனிநாரதனோதவிலங்குசெம்பொற்
குன்றேய்திரடோளணிகுங்குமக்கோதைவேலான்
வென்றேசருமைம்பொறிவேதவியாதனென்பான்
நன்றேதருசெய்கைநவிற்றெனநல்குகின்றான். (௫)

வேறு.

பிள்ளைவெள்ளராவளையெனப்பிறைக்கதிர்பாயுங்
கள்ளருமலர்ச்செஞ்சடைக் * கண்ணுதற்பெருமான்
றெள்ளுசீர்வலிக்காற்றிடைக்கறங்கெனத்திரிவு
கொள்ளநான்கெனுமுகங்கிருதாதியாக்குணித்தான். (௬)

அறிவுமாண்மையுமாசறுமாயுளுமற்றுங்
குறியுமாகியயுகமுதற்பெருகியேகுறைவுஞ்
செறியுமாதலிற் † றுவாபரமுற்றிடத்தெளிவும்
பொறியுமல்கியமக்கடாமருட்கையைப்புணர. (௭)

ஆயுமத்துணைப்பொருடருமாரணமனைத்துந்
தோயுநற்பொருட்டனைமையுந்தந்திரத்துணிவும்
வாயுமற்றையநூல்களுமதிப்பதற்கரிதாய்க்
காயுமம்மரிற்கலங்கினர் ‡ காரணங்கரைவார். (௮)

கோதில்காரணமேதெனக்குறிப்பவரன்ன
மாதி § கோசமைந்தடைவினிற்றனித்தனியாகப்
பூதியாலுயர்காரணமாமெனப்புகன்று
ரேதிலாரதுவிதுவெனச்சூழ்ச்சியினிசைத்தே. (௯)

இராவிரித்தறிவுதவலாலிரவியே,யருந்தும்
புரவளித்தலாற்பாவக,னுயிர்க்கணம்புவனந்
தரவிரித்தலாலய,னவன்றனையுந்தரலா
லரவணைத்துயில்வானெனப்பிரித்தனரறைந்தார். (௧௦)

---

* சிவபெருமான் தம்முடைய ஆணையாகியகாற்றிற் கறங்குபோலச் சுழல நான்குயுகங்களைக் கிருதாதியாகக் குணித்தாரென்க. † இது ஆதிகற்பத்திற் றுவாபரயுகமென வறிக. ‡ காரணம்-நிமித்தகாரணம். § பஞ்சகோசங்கள் அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசமென்பன.

பரியிராசதஞ்சத்துவமுடைமையாற் * பகுதி,
யுரியகாரணம்புருடனேயென்னவுமுரைத்தா,
ரரியமெய்ப்பயனளந்தளந்தளித்தலாற்கருமங்,
தெரியினுமெனச்செப்பினரின்னணந்நிலைகதமே. (கக)

புத்தர்சாக்கியர்முதலியோர்தந்திரம்புணர்ப்பார்
தத்தமக்குணர்வகையினாற் † சாதனஞ்சமைத்தார்
பித்தரிற்பலபேசியென்மறையெலாம்பேசு
மத்தனாகியபரசிவனுண்மையையயர்த்தார். (கஉ)

வழிமயக்குறவருத்திடுஞ்சமயநூல்வழக்கா
லழிகுழப்பமோடறத்துறையடங்குதனோக்கிப்
பொழிமதத்துழாய்ப்புங்கவனயன்முதறபுலவோர்
பழியறத்திரண்டடைந்தனர்கயிலையின்பாங்கர். (கங)

பந்தநீங்கியபகவனைச்சராசரப்பயிர்க்கோர்
‡ கந்தமாகியகடவுளைக்கற்பனைகடந்தே
யந்தமாதியற்றமலவானந்தமாமமுதைச்
சிந்தையாமறையாதியாற்றெளிவருந்தெளிவை. (கச)

பிறவிவெம்பிணிப் § பிடகனைப்பெரியவாட்டடங்க
ணறவமார்குழனங்கையோடமர்ந்தநாயகனை
மறவிதீர்ந்தவரமையமோர்ந்தடைந்தடிவாழ்த்தி
யறவவீங்கிதகேளெனப்போற்றியேயறைவார். (சரு)

காலவேற்றுமைவழக்கினான்மதிக்குறைசலந்து
ஞாலமீதுறையாதனராதயோர்நயத்தன்
பாலதாமறையெண்ணிலவாதலிற்பயிலார்
சீலமோவினர்சாத்திரத்திறங்களுந்தெரியார். (கசா)

மையன்மேவியவாய்மையாலுலகெலாம்வகுப்பான்
செய்யதாமரைச்செங்கணனயன்குணத்திசைக்கோன்
வெய்யபாவகன்முதலியதேவரைவிழைந்தா
ரையரின்புகழயர்த்தனரமலமென்றறியார். (கஎ)

நிலையழிந்ததிகாரநன்முறைமையுநீங்கி
மலையு o மோகமுமுலோபமு + மயக்கொடுவாய்ந்து
கலையிழந்தவிமகமுதற்கருமமுங்கழித்தார்
தலையுறும்பொருட்சிராத்தமுந்தவிர்ந்தனர்சழக்கால். (கஅ)

---

* பகுதி-மூலப்பிரகிருதி. † சாதனம்-சமயசாதனம். ‡ கந்தம்-மூலம்; என்றது வித்தை. § பிடகன்-வைத்தியன். o மோகம்-ஆசை. + மயக்கம்-[illegible] மயக்கம்.

மறையினூற்றிபவவ்வியகவ்வியவழக்கா
னிறையுமாற்றலேமைவயிழந்தெங்ஙனநிலைப்பே
மிறைவநீபெருங்கருணையாளிரங்கியேயிடரான்
குறையினீக்கெனப்பணிந்திடப்பரனுளங்குறித்தே. (௧௯)

வனைதுழாய்மணிவண்ணனைநோக்கிநீமக்கட்
கினைவுதீர்தரமறையெலாந்தொகுத்தினிதெளிதாய்
நினையுமாறருள்வியாதனென்றொருபெயர்பூத
துனைவினுருதிதுவாபரந்தொறுமிதுதணிவே. (௨0)

திசைமுகன்றனைநோக்கிநீமனுவெனத்திகழ்ந்தே
யிசைவுறும்பரி * சறத்தினையியற்றெனவிமையோர்
பசையறுந்தவத்தோர்தமைச்சாததிரம்பயனு
னசைதரும்பழமொழியிவைநவிற்றுவீரெனவே. (௨௧)

இனியவாய்மொழியம்பியேவிடுத்தனுமீசன்
பனிகொடாமரைப்பதம்பணிந்தேகியேபாரின்
முனிவியாதனேமுதலியபடிவமாய்மொழிநதார்
கனியநூற்றுறையடங்கலுங்கற்றவர்களிப்ப. (௨௨)

வல்லி † சத்தியவதியிடைவியாதனுய்மாலும்
புல்லியீசனதருளினுன்மறையெலாம்புகலி
னெல்லையற்றனதொகுப்பதெவ்வாறெனவிரங்கி
நல்லியற்பெறுசாதனமறிநதிடானயந்தே. (௨௩)

தந்தையாகியபராசரன்றனக்கிதுசாற்றச்
சிந்தையோர்ச்சியிற்றெளிந்தவன்மறைவனஞ்சேர்ந்து
முந்தையோரெலாமுடித்தனர்நினைந்ததுமுயல்வா
னெந்தையேகுதிகடிதெனப்பணிந்தவணிசைந்தே. (௨௪)

அம்பிகாபதிக்கானந்தமகிழ்ச்சியேயளிக்கு
நம்பினூர்க்கிருடீர்த்தருண்ஞானமேநயக்குஞ்
செம்பொனூர்மணிமானிகைமறைவனஞ்சேர்ந்தே
யிம்பர்வானெனவிலங்கியவளமகிழ்ந்திறைஞ்சி. (௨௫)

---

* அறத்தினையியற்றென-தருமசாத்திரங்களைச் செய்யென்று. † சத்தியவதிக்கு மற்சகந்தி, யோசனகந்தி, பரிமளகந்தி எனவும் பெயர். இவள் [illegible]த்தால் மீன்வயிற்றிற் பிறந்து, பரதவர் வீட்டில்வளர்ந்து, பராசரமுனிவருக்கு வியாதரைப்பெற்றுச், சந்தனுவுக்குக் காமக்கிழத்தியாயிருந்தவள் எனவறிக.

மோகமீர்தர * யாத்திரையாற்றிபேமுதலா
மேகநாயகனிணையடியிறைஞ்சி † நீரேற்று
மேகமார்மதிற்சினகரமேற்றிசைவிரிநீர்த்
தாகமீர்தடந்தொட்டதன்மேற்றிசைதன்னின். (௨௬)

அட்டமூர்த்தமாயலங்கியலிங்கமுமாற்றித்
தொட்டதன்றடந்தோய்ந்தபிடேகமுந்தொடங்கி
மட்டவிழ்ந்தநன்மலரினூற்பூசையும்வகுத்து
வட்டவார்சடைவரதனைத்தினந்தொறுமகிழ்ந்தான். (௨௭)

உள்ளவாவறும் ‡ வியாதனீரோடையின்மூழ்கி
வெள்ளவாரொளி § வியாதனதிலிங்கமும்விழைந்தோ
ரெள்ளமேவுமஞ்ஞானமீர்ந்திலங்குபேரறிவாய்த்
தென்னுமாறுயர்ந்தோங்குவர்தீவினைதீர்த்தே. (௨௮)

மல்குசீர்மறைவனத்திடைவாவியும்வகுத்துப்
பில்குகாதலினிலிங்கமும்பேணியாற்றுதலா
னல்குமோகவேரரிந்தகத்தோர்ச்சியொன்றருளா
னல்குமாறெழுந்துதித்திடக்குறித்திதாவில்வான். (௨௯)

○ பற்றதாநிலையிழந்தவர்பதிதர்பாசண்டர்
மற்றுமோதலான்வந்தவாலாமையினீங்கி
முற்றுமாரணமூழ்கிவேதாமிர்தமுதற்சீர்
பெற்றதாலதுதருமறைதொகுத்திடும்பேறே. (௩0)

படியினின்றெழுந்தேகிவேதாமிர்தம்பணிந்து
கடியுலாமலர்க்கூலத்திற்சங்கற்பங்கரைந்து
நொடியுமந்திரத்தோடறன்மூழ்கியேநோற்பார்க்
கடிகளாயவித்தியேசனதடிமலர்போற்றி. (௩௧)

கொழுதிவண்டினங்கூட்டுணுங்கொன்றையம்பசுந்தார்
விழுதினூர்சடைவிமலனைப்போற்றிடமின்னு
லெழுதிவேய்ந்தபொற்சினகரத்தேய்ந்துமுன்பணிந்து
பழுதுதீர்தரவலஞ்செய்துமும்முறைபணிந்தே. (௩௨)

---

* யாத்திரை ஆறியாத்திரை. † நீரைப்பருகி மூகில்கள் சூன்மூஇருந்தணையும் படியுமதில். ‡ வியாதனீரோடை - வியாசதீர்த்தம். § வியாசலிங்கம். ○ இழந்தவரும், பதிதரும், பாசண்டரும், மற்றையரும், ஒதிலைமையால் உளதாகிய தோஷத்தினின்றும் வேதமுழுவதும் வேதாமிர்தத்திலே ஸ்நானஞ் செய்து நீங்கிப்பழைய நிறப்பைப் பெற்றனவன்றே, ஆதலால் அதுவே வேதங்களைத் தொகுத்தல் செய்யுமாற்றலையும் தந்ததென்று கருதி. நிலை-ஆச்சிரமம். வாலாமை-அழுக்கு.

காணுமாசையாலுட்சென் றுகண்ணினீர்காலப்
பூணுமன்பினுற்புதுமலர்ச்சேவடிபோற்றி
வாணிலாவியவளரொளியிலிங்கமாய்வயங்கித்
தாணுமேவுறத்தாழ்ந்தனன்பன்முறைதரைமேல். (௩௩)

வீழ்ந்தெழுந்தழன்மெழுகெனக்கரைந்தமெய்ப்புளகத்
தாழ்ந்தசங்குழைந்தமலனின்சேவடியடைந்தே
போழ்ந்தவிச்சைவெம்பொருப்பினைப்பொருவிலாமுதலாய்
வாழ்ந்துபோயினனெனப்பரிவாற்றுதிவகுப்பான். (௩௪)

அறிவரியபேரொளியாயனந்தமாய்நித்தியமாயசலமாகிப்
பொறிமனங்கட்கெட்டாதபோதமாய்ப்பூரணமாய்ப் * புரணமாகிக்
குறிகுணங்களவைநீங்கிக்கோதிலாவருட்கருணைக்குன்றமாகும்
வெறிகமழுமலர்ப்பொழில்சூழ்வேதவனப்பதிகதியாய்விளங்குமன்றே. ()

முன்னமறும்பரமாகிமுழுதுலகுந்தானேயாய்முதல்வனுகிப்
பின்னமறவவற்றவற்றிற்பிறங்கியவற்றியல்பாகிப்பிரிந்துநீங்கி
யன்னமுதற்கோசவடிவாயகன்றுபலவணுக்கட்காவியாகும்
வின்னிறையுமணிமாடவேதவனப்பதிகதியாய்விளங்குமன்றே. (௩௬)

அலகில்சராசரமனைத்துமாக்கியளித்தழித்தடக்கியமலமாகி
யிலகுபரமானந்தப்பரவையதாயிதிற்றிவலையேய்ந்துவாஞேர்
குலவினிலைகளிகூரக்கொடுத்துமறைச்சிரத்தொளிருங்குகையாய்முற்றும்
விலகுமொளியால்விளக்கும்வேதவனப்பதிகதியாய்விளங்குமன்றே. (௩௭)

சிற்பரத்திற்றெளிந்தபரசிவமாகிச்சிதானந்தத்தேறலாகி
யற்புதமாயகிலமுந்தன்னிடத்தலங்கவயிக்கமிளிரமலமாகி
நிற்பனவுஞ்சரிப்பனவுநிகழ்த்தியெழில்வளர்சோதிநீலவாட்கண்
விற்புருவக்கொடியிடனும்வேதவனப்பதிகதியாய்விளங்குமன்றே. (௩௮)

வேறு.

உருவருவுபயஞ்சார்ந்தமுக்கிரமூலகமாற்றுங்
கருவுளதிலதபாவங்கற்பனைபகுதியீசன்
பொருவறுபுருடன்மாயையணுவெனப்புனிதவேதந்
தெருமருமென்னில்வேதநாதநிற்றெளிவார்யாரே. (௪௧)

வேறு.

இன்னும்பலவாந்தோத்திரங்களியம்பிவேதவனத்தீசன்
பொன்னங்கழன்மேற்பணிந்து † சயபோற்றிபோற்றியெனப்போற்றப்
பின்னுஞ்சடையோன்வியாதனைநிர்பெறவேதோற்றிப்பெருந்தவத்தோய்
‡ முன்னந்தருவேமொழிதியெனமுருகார்முளரியடிபோற்றி. (௪0)

---

* புரணம்-பிரகாசம். பதி-பசுபதி கதி-மோக்ஷம். † சய-நம்மைப்பா துகாக்கும் விஷயத்திற் சர்வோத்தமனுயிரு. ‡ முன்னம்-குறிப்பு.

அருளாற்பெரியோய்வரமெனியேற்களித்தியாயினகத்தாகு
மிருளாசகற்றிப்புனிதமறையெல்லாந்தொகுத்தற்கியல்பாய
தெருளார்ந்திலங்குசங்கற்பசித்திமேவச்செய்தியெனப்
பொருளாமீசன்கரந்தலைமேற்பொலிவித்தருளிப்போயினனே. (௪௧)

கரந்தவீசன்றனைப்போற்றிக்காதலோடுமினிதமரச்
சுரர்தவருளாள்முழுதுணர்ச்சிதோற்றவேதந்தொகுத்துலகத்
தரந்தைதீரநான்குவகையாக்கியரியபொருளனைத்தும்
புரந்துதழையப்பயில்வித்தானறவோர்க்குலகம்பொலிதரவே. (௪௨)

ஆதியிருக்குப்பயிலவனுக்கருளிவைசம்பாயனனுக்
கோதுமிரண்டாந்தைத்திரியமுதவிச்சாமஞ்சயிமினிக்குக்
கோதுதிரக்கொடுத்தனந்தங்குலவுபுராணம்பதினெட்டாயப்
பாதுகாத்துப்பகுத்தவற்றைச்சூதற்களித்தான்பரிவினொடும். (௪௩)

வேறு.

மாலினீங்கியேயுயிர்த்தொகையின்பமேமருவப்
பாலினாகியநூலெலாந்தொகுத்தருள்பரப்பிக்
கோலியேயுலகளித்தனனவியாதனுங்குளிர்நீர்
வாலிதாயவேதாமிர்தம்படிந்தெழுவரத்தால். (௪௪)

இனியநீர்தருபுனிதவேதாமிர்தமெய்ந்து
முனிவியாதனுமுதுக்குறைமேவின்னமூழ்கு
மனிதர்போதமுமாயுளுமேவியேவாழ்வார்
வனிதையாசனுமகிழ்ந்துநல்வரமெலாமவழங்கும். (௪௫)

சீதநீர்மதிச்செஞ்சடைச்சிவனருள்சேர்ந்து
பூதனாகியவிரிஞ்சனுமனுவெனபம்பாந்து
வேதகானனத்தியாததிரையாறையும்வினைத்து
நாதனீரடிபணிந்தபின்றுளத்துறநயந்தே. (௪௬)

செய்ய * பானுவின்சிவகுறிக்கிருசதஞ்சேர்ந்த
வெய்யும்விற்கிடையிலங்குமீசானதிக்கேய்ந்தார்
வெய்யதீவினைவீட்டிடமேதகு † வாவி
மையறீர்தரவகுத்ததின்மூழ்கினன்மனுவால். (௪௭)

அகழ்ந்ததீர்த்தத்தினனுதினமாடியவரத்தாற்
றிகழ்ந்தவிப் ‡ பதிசிறப்பினாற்றெளிவுளத்தேய்ந்து
புகழ்ந்துமாதவர்போற்றிடமிருதியும்புனைந்தே
மகிழ்ந்துமேவினன்மனுவெனவையகம்வாழ்த்த. (௪௮)

---

* பானுவின் சிவகுறி-பாற்கரேசலிங்கம். † வாவி-மனுதீர்த்தம். ‡ பதி-பசுபதி.

நீதிநூற்றுறைநிகழ்த்தியநிறைமதிமனுவின்
போதநூற்றியதடம்புரிந்தாடினர்புகராங்
கோதினுற்றியவினையொழித்தறநெறிகூடிச்
சோதிவேதநாதலகிடையின்பமேதுய்ப்பார். (௪௯)

வேறு

அளவாவேதந்தொகுத்ததனால்*வேதவியாசனும்பெயரு
முளதாயுயர்ந்தான்மனுவெனநூலுலகத்திலங்கமனுவுயர்ந்தான்
வளமார்ந்திலங்குமிக்காதைபடிப்பார்கேட்பார்மலரோனுந்
துளவார்மாலுமறியாதசோதிதுணைத்தாடுறவாரே. (௫௦)

வேறு.

விரையார்மென்பூவேதாவமிர்தத், துரைசால்சாதையொளியேயுரவோன்,
கரைவாயுணரக்கனிநாரதனும், தரைவாய்பரவத்தகைசாற்றினனே. (௫௧)

வேதாமிர்தசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் உ,௯௦௫.

---

# பிரமதீர்த்தச்சருக்கம்.

கோடியன்மறைசைமேன்மைகுழைந்துளங்கோதின்றி
நீடியவருளின்மேவநிகழ்த்தியநெறியின்மிக்கோய்
பீடியல்பிரமதீர்த்தம்பிரமவீசன்சீர்பேணித்
தேடியதவமேயன்னுயருளெனச்செப்புகின்றான். (௧)

† மடங்கலானமிந்தயாவும்வரன்முறைவகுத்துவேதா
வடங்கலுந்தந்தமாற்றினணிபெறவமைத்தநாளிற்
படங்கிளர்பரவையல்குற்பணிமொழிப்பவளச்செவ்வாய்
விடங்கெழுகரியவேற்கண்மெல்லியற்சாயன்மிக்காள். (௨)

---

* வேதவியாசன்-வேதத்தைப் பிரித்தவன். வியாசம்-பிரித்தல். † மடங்கல்-ஊழித்தீ.

உருவெழில்வனப்புவாய்த்தவொருத்தியைத்தருவானெண்ணிப்
பெருகியவுலகின்மாந்தர்பிறங்கெழில்வேறுவேறு
மருவியவழக்கிற்காமர்மலிந்தன*திலத்தின்வாங்கித்
திருவினுமுருவமிக்குத்திகழ்தரச்சிறப்பிற்செய்தான். (௩)

வீங்கெழில்வனப்பின்மேன்மைவேய்ந்தனவேறுவாங்கித்
தேங்கமழ்குமுதச்செவ்வாய்த்திலோத்தமைதிசமுஞ்சாய
லோங்கெழிற்காமவல்லியொளிசெயுமுருவநோக்கிப்
பூங்கணைகுளிப்பநெஞ்சம்புழுங்கினன்பூவின்மேலான். (௪)

பஞ்சியிற்படருந்தீயிற்படர்ந்துயிர்பருகிப்போத
மெஞ்சிடக்குழைந்துதீயினமெழுகெனவியைந்துவேட்கை
வஞ்சியிற்செவ்விவாய்த்துவயங்கியமாதின்பாதங்
குஞ்சியிற்கொள்ளவெண்ணவஞ்சிமெனகொடிமொழிமெல்லி. (௫)

செய்யமென்கமலப்போதிற்சிறடிசேப்பச்செய்பொற்
பையராயவர்விறசெய்தபரிபுரமிழறறவோட
மையலோநின்னைமழாநதெழுநதவன்வலிதுபற்ற
வெய்யவெம்முலையாடேன்சோர்மென்மொழிமிழற்றுகின்றாள். (௬)

அத்தனீயெனக்குநின்போலறத்தினையளிக்குநீரா
ரித்திறநினையாரேசாமென்னவுமிரங்கியோரான்
புத்தமுதன்னசாயற்பூவைநின்புணர்மென்கொங்கை
முத்தமார்பமுந்தாதாயின்முடிந்திடுமாவியென்றே. (௭)

தோள்வளால்வலிந்துபற்றித்தொண்டையங்குமுதச்செவ்வாய்
யாளமர்துய்க்கோடிமதிதாயமாதுமார்பிற்
றுயமாமு மென்கொங்கைதழுவிபுரமணைந்துகாம
மூழ்ந்தமுயங்கியினபக்கடலிடைமூழ்கினானே. (௮)

முதிர்பெருங்காதல்கூரமுயங்கினனமுகர்துமூசி
யதர்க்கடலமிழ்தமபோலுமணங்கினையலங்குமார்பப்
பிதிர்சுணங்கருமபுங்கொங்கைபிணைவிழிசேப்பப்பெட்பாற்
கதிரிளநந்தளிரின்மேனி†கவினசெயக்கலந்துநீங்கா. (௯)

---

* திலம்—எள்ளு. ஆமேகநீககனிலே ஒவ்வோரங்கங்களே சிறந்திருந்தமையின், அனைத்தங்கங்களும் சிறந்திருக்குமாறு உத்தமவங்கங்களுள்ளும்உத்தமோத்தமமாய் எட்பிரமாணமாயுள்ள அழகுகளை எடுத்தாரென்பதாம். அதுபற்றியே இவட்குத் திலோத்தமை என்னுங் காரணக் குறியுளதாயிற் றெ ன்க. † கவின் ஈண்டுப்புணர்ச்சியினாலாயதோர் புத்தழகு. அதைவருஞ் செய்யுளான் விளக்குப.

கரியமென்கூந்தல்சோரக்கலைமதியமுதங்கான்ற
புரிவுறமுகத்தின்வேர்வைபொலிதரப்புளகம்பூப்ப
வரிமதர்நெடுங்கணச்சத்தலமரவாரஞ்சோரத்
தெரிதரநாணிக்காந்தித்திருமுகஞ்சிறிதுகோட்டி. (௰)

ஊதையினிசைந்தவல்லியொப்பநின்றசையுமொண்பூங்
கோதையைக்குளிரநோக்கிக்குவிமுலைக்குமுதச்செவ்வாய்
மாதையான்மணர்தவின்பம்வாயுமேவாரோர்க்கென்று
தாதைமுன்னையிற்சிட்டிக்கச்சத்தியற்றடங்கிற்றன்றே. (௧௧)

பெற்றநன்மகடன்சாயற்பெருநலனுகர்ந்தவாற்று
லற்றறிவடங்கிமூடமாகியேயவலங்கூர்ந்து
மற்றிதற்சென்கொல்சாந்தியெனவவன்மதித்துமுன்னூங்
கற்றனன்சிருட்டிவேதவனத்தெனக்கருத்திற்கொண்டான். (௧௨)

தெளிதருசிருட்டிமேவித்தீவினைசிதையமாற்றி
யொளியுறுமாறுவேதவனமெனவுணர்ச்சியோங்கி
* முளியரிற்பெயலிற்றோன்றமுளரியானெழுந்துமூசுங்
களியளிகமலமேயுங்கடிமறைக்கானஞ்சேர்ந்தான். (௧௩)

சேர்ந்தியாத்திரையோராறுந்திசழ்தரவாற்றித்தீமை
சோர்ந்திடவிலிங்கமாற்றத்தூயநல்லோரைசேர
வார்ந்தொளிரிலிங்கமாற்றிவனப்புறும்பூசையாற்றற்
கேர்ந்தனன்றடமொன்றங்கணீசனுக்காட்டற்கம்மா. (௧௪)

† காற்றெருளிரிலிங்கமேல்பாற்சதிருமிலிங்கமாற்றிப்
போற்றியதயிர்நெய்யான்பால்புரிந்தனவர்தமுதம்பூந்தே
னூற்றியநறைமென்போதுபைந்தொடையொழுகுந‡துப்பா
லாற்றியகறியிரோடுமோதனமளித்துப்பின்னும். (௧௫)

மணங்கமழ்தூபதீபமகிழ்ந்தளித்தடைக்காயீந்து
பணங்கிளர்மணியிற்செய்தபணிபரிவட்டஞ்சாத்திக்
குணங்கெழு§துரியமாற்றிக்குழைதருமன்பிரோடு
மணங்கமர்பாகத்தண்ணலடியிணையகத்திருத்தி. (௧௬)

கனிவொடும்பலநாட்பூசைகருத்துறவாற்றிப்போற்றிப்
பனிதருதீர்த்தமுற்றும்படிந்தரன்பாதம்போற்றித்
துனியுறுதீமைநீங்கித்தோற்றமார்தொழிலுமேவி
யினிதெனவிருக்கைமேவியின்பமுற்றமர்ந்தானன்றே. (௧௭)

---

* முளியரிற்குப் பெயல்போல உணர்ச்சியோங்கித் தோன்ற எனமுடிக்க. முளிதல்-காய்தல். அரில்-சிறுதூறு. † வாயுலிங்கத்துக்கு மேற்குத்திக்கில். ‡ துப்பு-நெய். § துரியத்தானத்தில் யோசித்து.

அண்ணன்மாமலரோன்வாவிபடிந்தவனிலிங்கம்போற்றின்
வண்ணமார்பரதாரத்தைமணந்தவப்பாவமாதி
யெண்ணிலவகலுமெல்லாவின்பமுமெய்வரீறில்
பண்ணவன்வேதநாதன்பதமலர்பணிந்துபோற்றி. (௧௮)

பிரமயாத்திரையின்மேவிப்பிரமதீர்த்தத்தின்மூழ்கி
வாமுறுபிரமலிங்கம்பணிந்திடினவலியமாயை
யுரமுறுஞானமேவியுப்பர்சோமகனைப்போலப்
பரமமாய்ப்பிரமகத்தியாதியபாவம்வீழ்ந்தே. (௧௯)

வேறு.

என்றவனியம்பவெரிமுகனாலுமிலங்கிலையலங்கல்வேலேந்துங்
குன்றெனநிமிர்ந்தநலவியதிண்டோட்கோமகன்கொழுமடற்செழுந்தேன்
மன்றலம்மலரோன்றனைமுதனாமவெல்வினைச்சோமகன்மறையோர்
கொன்றதுமவன்றன்கொள்கையுமுறுதியுங்கூறெனமுனிவரன்கூறும். (௨௦)

குளிரிளந்தென்றல்தூறுநடைபயிலுங்குருமலர்த்தருநிறைவாவித்
தளிர்மணங்கமழுந்தந்தனப்பொழுமபர்தம்பிழுகன்றூட்டுவான்றடவு
மொளிர்மனைப்பிரமபுரியெனவோங்குமுடர்பதியதனிடையோம
னளிர்புகைபாந்திருடைமறுவாய்*ஞாயிறுமப்புகைநடுவாம். (௨௧)

அப்புரியமர்வோனசோமகனெனும்பேரந்தணனருவினைச்செயலா
லொடயிலாளிளமையுற்றநாட்டொடங்கியுறும்பொருள்வேசைகட்குதவிச்
செயபிளமுலைமாபடிந்தவர்கலவிதந்தேறலைமாந்திவெஞ்செருக்கா
லிப்புவிமறந்துனபுறுமயங்கியிருவகைக்குரவர்தம்பொருளும். (௨௨)

போகம்பெற்றுதவும்பொருட்பசைமடவார்பொருட்டளித்தவசமாய்ப்புணரு
மூகமுற்றுழலுறுனமுடிபுதனபொருளுமுகிழ்முலையவர்களுமுனிந்தா
ராகம்விற்றுதவுதகாயினமுங்கிடவாடிநந்தகறநவுமகலான்
† மூகமுபுதிரங்காத்தனமையானமத்தந்தாங்கினன்பித்தநிற்றளர்ந்தான். ()

ஆங்குநின்றெழுநதேயவனிமேற்படர்ந்தா§னடவிநின்றடவிவாயடைந்தான்
றீங்குருவாயசோமகனொருகாற்சிறித்திடுந்திசைத்தழுமொருகாற்
பாங்குறவோடும்பதைததுடன்பார்க்கும்பருவிழிபிறழநின்றயருந்
தூங்குமோரிடையிற்றுளங்கிடுநீரிற்சொல்லருந்தொழில்பலபுரியும். (௨௪)

---

*அப்புகையாண்டும்பரந்திருத்தலாற்சூரியன் எஞ்ஞான்றும் அப்புகை மத்தியிற் சஞ்சரிப்பான் என்க. † அப்பொருட்பெண்டிர் தன்னிடத்துத் தாகங்கொண்டிரங்காத தன்மையினால். § ஓர் காட்டினின்று மற்றோர்காட்டை யடைந்தான்.

இன்னணம்வெறிகொண்டியங்குவானொருநாளிணர்த்தருநீழலிற்றுயிலும்
பன்னயமுணர்ந்துபசையுடன்மூத்தபனவனைப்படர்வனத்திடையின்
முன்னமுற்றதுகண்டவன்றலைமுடியினமுடிவுறச்சிலையினைமுரணார்
தன்னதுவலியாலிடவவன்பதைத்துத்தணந்தனனாருயிர்தளர்ந்தே. (௨௫)

முடிதலும்பிரமசத்தியொன்றெழுந்துமுனிவொடுமுழங்கழல்போலச்
சடிதெதிர்ந்தடரக்கருதியேவெருவிக்கலக்கமுற்றலக்கணாற்கரைய
வடிவொடுமிவனைத்தொடர்ந்தலைத்துருத்துமற்றவர்கண்ணாறுதாகக்
கொடியசோமசனுங்குலைந்தலைந்தழுதுகூப்பிடுங்கோவெனக்குழறும். (௨௬)

கண்டுயில்காலையெதிர்ந்துடன்சுதுவக்கண்விழித்தமூதயலோட
வுண்டுயிர்பருகற்குருத்தடிதொடருமுறுக்கிடுமொருதலையாக
விண்டுருதிவ்வாறலைத்திடப்பயத்தால்விரகறவெங்கணுமுழல்வான்
பண்டுசெய்தவத்தான்மறைவனத்தடைந்துபல்லிடைப்பயில்பவனொருநாள்.

மூகையவிழ்ந்தளிகண்முரன்றுபாண்மிழற்றுமுரிதிரைப்பிரமதீர்த்தத்திற்
றகையுறப்படியும்பனவர்தம்மருகிற்சார்ந்துறுங்களியினுற்றுவி
நகைவிரித்திலயநவிற்றிடுமோடுநடித்திடுமிவன்றனைநாடி
மிகையுறுநீசனிவனெனாவருகுமேவலைபோதியென்றுரைப்ப. (௨௮)

அருகுறுதெழுதிபோதியென்றுரைக்குமவர்தமையயர்மயக்கடைந்தோன்
றிருகுவெஞ்சினத்தானருகுறவவருஞ்செங்கையஞ்சலிப்புனல்சிறியோன்
வெருவுறவவன்மேல்வீசிடமெய்யின்விழுப்புனல்படுதலு*மிருதி
மருவிநற்போதம்வயங்கிடமோகமயக்கினைவழக்கறமாற்றி. (௨௯)

சினத்தடர்ந்தெதிரும்பிரமகத்தியினிற்றீர்ந்தனன்றெரிந்ததுகாணான்
மனத்துறுமகிழ்வாலித்தலையாதோமற்றிவர்யாவரோயானார்
கனத்துயரெங்ஙன்கழிந்ததென்றாயுங்காலையிற்போதமொன்றுதிப்ப
வனத்துறையலங்குந்தீர்த்தமீதமலமாமெனவருளினாலறிந்தான். (௩௦)

புனையுமித்தீர்த்தம்புண்ணியப்பொருளாம்புனிதமாம்பூசுரர்துவும்
நனையுநீர்த்துவன்மோகமுமாற்றிநலிதரும்பிரமசத்தியுமாய்ந்
தினையுமாறகற்றியிலங்கியபோதமீதலாலிதன்கரைமேவி
நினையுமாறடைந்ததமியனிற்றவத்தானீடினர்நிலத்திலையென்றான். (௩௧)

முற்செயுந்தருமத்தவம்பயனாதவமுகிழ்த்ததான்முழங்குதெண்டிரைசூழ்ந்
தெற்படுதீர்த்தமெய்தியதினியானியன்மறைவிதியினாலீதிற்
பொற்புறப்படிதல்பொருளெனக்கொண்டுபுகன்றுசங்கற்பமும்படிந்து
நற்புண்ணியநதிநயந்தவன்பிரமநாதனைநசையொடும்போற்றி. (௩௨)

---

* மிருதிமருவி-பழையஞாபகம்வரப்பெற்று.

அஞ்சலியோடமர்ந்திடப்போதமனங்கொற்றுறவின்மேலார்வ
நெஞ்சகநிறையவமலமாயுறையுநிலையெவராலெனநினைவான்
றஞ்செனப்பிரமநாதனைப்பணியுந்தவமுனிபுலத்தியன்றன்பொற்
கஞ்சநற்றுளேதனையெனப்பணிந்துகரைந்துளங்காதலிற்பகர்வான். (௧௩)

தோற்றமிங்கிதனின்மருவுறுமரணச்சுடிகையம்பாந்தள்வாய்ச்சுழல்வேற்
கேற்றநீகலுழனுவதேயன்றியிரங்கியீங்கருள்பவரிலையா
லாற்றவும்பிறந்தைக்கஞ்சினனடியார்வேனருந்துயர்ப்பிறவிவேரகற்றி
மாற்றிநீயுபாயம்வழங்கெனவிழிநீர்வழிதரக்குழைவொடும்வணங்க. (௧௪)

குறும்புமூன்றகற்றுங்கோதிலாமுனிவன்சோமகன்குறிப்பெலாமுணர்ந்து
பெறும்பதமளித்தபிரமதீர்த்தத்தினபெருமையைநினைந்தவனபேண
வுறும்*பவர்தீர்க்குமுறுதிமெய்ஞ்ஞானவுண்மையேயுயரிவெண்டிரைபோ
லறம்பலவினையாலரியதாமுத்தியறைந்தமெய்ஞ்ஞானமுமறியின். (௧௫)

மேதகுவேதசிரத்தினைத்தெளியின்†மெய்ம்மையாமப்பொருள்விளந்தா
ரேதமதகனறுபரமமாயுறைவரச்சிரத்தியற்கையாராயு
மூதறிவிலாதார்பிரமதீர்த்ததமூழ்கிடின்மொழிந்தமெய்ஞ்ஞானப்
போதமாமென்னப்புலத்தியன்புகலச்சோமகனபோற்றியேபுகல்வான். (௧௬)

கொழுமடற்கமலப்பிரமதீர்த்தத்துக்குளிர்புனற்குலவியான்படியத்
தழுவியவினைகள்சரிந்தன §தமத்தைததவிர்ந்துளந்தற்பரமுணர்வான்
விழுமியதறவேவிரும்பியதுடலும்வெறுத்ததவினைப்பிறப்பொழிப்பான்
பழுதறுஞானம்பரிந்தருளென்னப்பங்கயத்தவன்மகன்பகர்வான். (௧௭)

வருணவாச்சிரமத்தொழிற்பயனென்புமசமுதற்கருமநற்பயனைத்
தருபவனுகிமுழுதுணர்ந்தழியாத்தலைவனுய்ச்சகலமுமியற்றி
திருமலனுகினைந்தமுடிக்குநிந்தனுப் ○பழுதல்சங்கற்ப
மருவினனுகியமலவானந்தவடிவமாய்வயங்குபூரணமாய். (௧௮)

குறிகுணமகன்றவசலமாயவத்தைக்கூட்டமும்பிரிவுமற்றவற்றை
யறிபவனுகியலமுந்தோற்றியழிந்திடயதற்கிடமாகிச்
செறிவுறுமீசனொருவனுண்டென்றுதேறியிவ்வுலகெலாந்தெளியிற்
பொறிமுதற்சிறையுமச்சமுமவற்குப்புணர்ந்திடாதெனவறிபுகிந்தே. (௧௯)

சொற்றருமவனேநானெனப்பேதத்துகளறவேகமாய்த்துணியி
னற்றதுபிறப்புமமலவானந்தமாமுயிரென்றிடவறவோய்
பற்றறநிறைந்தபரஞ்சுடராயபரனுடுபசிமுதற்பிறவி
யுற்றயர்ந்தழலுமுயிரினுக்கேகமுறுவதெவ்வாறெனவுரைப்பான். (௨௰)

---

* பிறவியைத்தீர்க்குமுறுதிப்பொருள் மெய்ஞ்ஞானமுடைமையே; ச முத்திரமுத்திரையும்போலும் அறங்களுங் கிரியைகளும் முத்திசாதனமன்று † மெய்ஞ்ஞானம் உற்பத்தியாம். § தமம்-அந்தகாரம்; [illegible] ஞானத்தை. ○ பழுதில்சங்கற்பம்-சத்தியசங்கற்பம்.

தோற்றமுமழிவும்பெருக்கமுஞ்சுருக்கந்தன்னலுர்ஞாலமாமுடற்கே,
யாற்றியசெவிமுதலியபொறிகட், கழிபசிதாகமேயாதி
சாற்றியல்பிராணற், கிச்சையுமுவர்ப்புஞ்சுருதியதியற்றலுமனத்துக்,
கேற்றநற் * போகமருத்துதல்செய்வோனியல்பிறமதிக்கெனவிசைப்பர். ()

அறிவறியாமைபந்தமுத்திகடாமா † ருயிர்ப்போலியின்பாலா
நெறிதருகுணியுங்குணங்களுமவத்தைநிலைகளும்விளக்கியேநீங்கிக்
குறியுறமிவற்றின்றோற்றமுமழிவுங்குலவியசெலவொடுபிரிவுஞ்
செறிவுறக்கரியாய்ச்சச்சிதானந்ததெளிவுயிரங்கதேசிவமாம். (சஉ)

ஆய்ந்தவையுசாவினவற்றவற்றியல்பையீறறிவுக்காற்றியேயான்மா
வேய்ந்திடாதிவையென்றுண்மையையுணர்வீசனுயிருடருமயக்காற்
றேய்ந்தடலாதியானெனவவற்றின்றொழிலினைமேற்கொளிற்றோற்றி
மாய்ந்திடுமிவற்றைவிடுத்திடிற்சிவமாய்வயங்கிடுமாயையினகன்றே. (சங)

ஒருமுதற்றேமாயையின்விகற்பாலுயிர்பரமுலகமாயொளிரும்
‡ தருகனவதனிற்றன்பலவாயதன்மையிறசார்தருநனவின்
வருமவையசத்தாமாறெனப்போதமருவிடிற்சிவமலதியாற்
கருதிடிற்காலமூன்றினும்பந்தங்கலந்திடான்சரிபெனக்காணும். (சச)

போதமாயமலப்பொருளதாயென்றும்புணர்ந்திடுமயர்விலுற்போக
மீதியானென்னவிரும்பிடுமொருநால்விடுத்தவைவிரவுநீர்த்தமதால்
வேதமோர்குரவன்வியனமொழியதனுல்விமலமாய்வேறறவினாரு
காதனுயின்பாலம்பொலிந்திலங்குமென்றிடச்சோமகனவிம்வான. (சரு)

குரவனதருளாற்கோதறப்பிரமங்கூடுதலுண்மையார்தீர்த்தம்
வரமிகப்புரியுமாறெவனென்னமனத்துநீயனுபவபவாயநது
விரவியநெறியினையமேதமுச்குவிடுத்துநீவிமலமாய்விளங்கும்
பரமமாயினையாற்பிரமதீர்த்தத்துப்படிந்லாலெனதுரைபலித்தே. (சசு)

வேறு.

பிருகுவருணன்யாக்கியவற்கியனேபேசுமவன் § மனையா
ருருகுநாசிகேதுமுதலுரவோர்வேதநதிமூழ்கிப்
பருகுமின்பப்பரமானுர்பகர்காசிபன்றேவலருதி
குருகுபாயுமணிகன்னி,வணிகர்கோடிகுறித்துயர்ந்தார். (சஎ)

---

* போகமருந்துவோன-போத்தா, அருத்துதல செயவோன் - கருத்தா, என்னுமிரண்டும் புத்திக்குரியவை. போத்தா-அநுபவிப்பன்; ஜீவான்மா. கருத்தா-செய்பவன்; பரமான்மா. † உயிர்ப்போலி-சிதாபாசன் .‡ சொப்பனப்பிரபஞ்சம் நனவிற் பொய்யாதல்போல மெய்ஞ்ஞானமுதிக்கச் சிவமல்லது பிறிதில்லை. § மனையாரென்றது காரக்கியும் மயித்திரேயியுமாகிய இருவரையும். வணிகரென்றது வசுதேவன், சுதேவனென் னு மிருவைசியர்களையும். இவர்கோடி தீர்த்தத்திலுலே மேம்பட்டார்கள்.

இன்னும்பலதீர்த்தத்தினிடையேய்ந்துநிகழ்ந்தாரிழிபாக
மன்னுமையம்விடுதியெனுமமிழ்ந்தேயருளிப்புலத்தியனுந்
தன்னதிருப்பிற்சார்ந்தனனுற்றருமப்பிரமதீர்த்தத்தை
முன்னம்பணிந்துசோமகனுமுதலாம்பிரமேசனைப்போற்றி. (௪௰)

இன்பப்பரமாய்முத்திநிலையேய்ந்துபழுத்தவிளையளவும்
வன்புற்றமர்ந்தேபிறவியினைமாய்த்தான்பிரமமலர்வாவி
துன்பக்கொடியவிளையனைத்துந்தொலைத்தேபிரமஞ்சோமகனுக்
கன்புறறளித்தவண்ணமுமங்கலரோன்செயலுமறைந்தனமே. (௪௧)

வேறு.

பிரமதீர்த்தப்பெருங்கதைபேசுவார், பரவுவாரவர்பாவம்பரிந்தர,
* விரவுதீர்த்தவிடைபுறந்லங்கிட, பரமமாயபதத்திளைப்பற்றுவார். (௫௦)

* இரவு-இருள்; என்றது அஞ்ஞானத்தை.

பிரமதீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨,கருரு.

---

# அஞ்சுமான்றீர்த்தச்சருக்கம்.

பிஞ்சுமாமதியந்தநிப்பிஞ்ஞனருளேபெறு
மஞ்சுமானதீர்த்தமேனையமைறைகூவன்கேணிபிஞ்சி
மஞ்சுதேரயோத்திமையனனயனமருவாரபோரி
லஞ்சசீரவிறலோனமாதர்க்கருளிஞலனைபோலவயான். (௧)

இருங்கடலுலகெல்லாமெதிரெதிர்ந்தளித்துமாற்றூர்
நெருங்கடனமுருங்கச்சீறிநிணங்கமழ்தணைங்குநாறுங்
கருங்கைவெண்கோளிற்றனனனகாவலன் † கடுவிறேடு
மொருங்குதாய்வயிற்றின்மேவிச்சகரனென்றேங்கும்பேரான். (௨)

† இச்சகரன் பிதா அசிதன் என்பவன். இவ்வசிதனுக்கு மனைவியர் இருவருளர். இவன், சந்திரகுலத்துக் கேகயராசன் வந்தெதிர்க்கவே, அபசெயமடைந்து, அரசிழந்து, நாட்டைவிட்டு, மனைவியரோடும் மந்திரிகளோடும் காட்டிற்போய்ப் பார்க்கவசவனரென்னும் பிருகுமுனிவரது ஆச்சிரமத்திற் சிலகாலமிருந்தான். இருக்கும்போது அம்மனைவியரிருவரும் ஒருங்கு கருப்பவதிகளாயினர். இவருள் மூத்தாளாகிய காளிந்தியென்னும் மனைவியின் சிசுமரிக்கும் பொருட்டு, இளையாள் அவட்கு நஞ்சூட்டினாள். அங்ஙனம், அப்பிருகு முனிவரதனுக்கிரகத்தால் சிசுவையுந்தாயையுங்கொல்லாது கருப்பத்துடனிருந்து, காலமுதிர்ந்து பிறக்கும்போது பிள்ளையுடன் பிறந்தது. அக்காரண

த்தால் அப்பிள்ளைக்குச் சகரன் என்னும் நாமதேயம் உளதாயிற்று. இதபற்றியே, கடுவிடனோடு மொருங்குதாய்வயிற்றின்மேவிச்சகரனெனவொருங்கும் பேரான் என்றார். கரம்-நஞ்சு. கரத்தோடு கூடப்பிறந்தவன் சகரன். இச்சகரன், தந்தையாகிய அசிதன் காட்டின்கணிறப்பவே, பிருகு முனிவரானும் மந்திரிகளாலும் க்ஷத்திரிய தருமங்களைெற்றினும் அதிசாமர்த்தியமுடையவனாகித் தன்பகைவனாகிய கேகயராசனைவென்று தன்னரசை மீட்டான். இச்சரித்திரத்தை வான்மீகராமாயணத்திற் காண்க.

ஆடல்வெம்பரிமா * மன்னற்சணிநலஞ்சுமக்கலாற்று
வேடவிழ்மலர்மெனகூந்தன்மடந்தையரிருவர்தம்மு
ளோடரித்தடங்கணங்கையொருதபாலுலவாத்தீமை
நீடசமஞ்சசன்றனுதித்தறநீத்துநாளும். (கூ)

குறுநடைப் † புதல்வர்தம்மைக்குளமுதற்சொரிந்துவஞ்சித்
துறுதிரைச்சரயுவீழ்த்தங்குடறுடிதலப்பநோக்கிக்
குறுநகைவிளைக்குஞ்செய்கைசொற்றவனோர்ந்துமாய்ப்ப
விறுமசமஞ்சசறகனநேநதிழைகருப்பமெய்தாள். (சா)

சிற்றுதரத்து ‡ மற்றைத்தேவிபாற்கருப்பஞ்செய்லூன
வெற்றுயிர்ப்பிண்டமாமெயார்விதியினாலவீழ்ந்தாகண
மற்றதுதன்னைவேறுவனைந்தனைத்தயுதமாறு
பெற்றநற்பிண்டமாக்கித்தனித்தனிகுடத்திற்பெய்தே. (ரு)

அரியமந்திரநீர்தூவியருந்ததிகேள்வனுக்கப்
புரிவலிமொய்ம்பினமிக்கார்பொருதிறற்புரையிலாதார்
தெரிதருமயுதமாறுசேர்ந்தவர்திருமாலென்னப்
பரிசரிபனைத்தேர்சாபவேதத்திற்பயிற்சிமிக்கார். (சு)

தம்பையர்தொடையன்மைந்தர்சூழ்தரத்தோற்றமேவி
வெம்புவெங்கிரணபானுநடுப்பகல்விளக்கமேபோ
லம்புவியொருவனாகவளித்தவன்மனுடானாத
நம்பறத்துறக்கதின்பநயந்துவாழுதனுவான். (எ)

கொய்யுளைப்பரிமாமேதமாயிரங்குறித்துக்கோலத்
தையவிததுபங்காட்டிநெற்றியினமபொறபட்ட
மையறவீரவாற்றல்வரித்துமாநிலமீதேவி
வெய்யமாவினைக்காத்தோம்பயைத்தரைவிடுத்துவேந்தன். (அ)

---

* ஈண்டு மன்னனென்றது சகரனை. † சிறுவர்களை வெல்லம் முதலியவைகளைக் கொடுத்து வஞ்சித்தழைத்துக் கொடுசென்று சரயுநதியில் வீழ்த்தி. ‡ மற்றைத்தேவி என்றது சகரனுடைய இரண்டாம் மனைவியை. அகைத்தல்-அரிதல். அயுதமாறு-அறுபதினாயிரம்.

* ஊனமொன்றுயரா துவேள்வியுமுஞற்றியொன்றும்
வானகமகிழவாற்றமாவிடமகவான்மாயந்
தானமர்ந்தருவமாற்றித்தன்னரசழியாவண்ணம்
† பானலன்மாவைச்சோரப்பான்மையாற்கவர்ந்துபற்றி. (௯)

காதலற்றமலமாயபொருளினைக்கருத்துளாக்கிப்
பாதலத்தமரு ‡ மாயன்படிவமாங்கபிலன்பாங்கிற்
றீதகலத்தியமென்போதாரிருக்கையிற்பிணித்துத்தான்போய்
மீதலத்தமர்ந்தானுக்கம்விழைந்துவான்மேயகோமான். (௧0)

அடிச்சுவடாய்ந்துபின்சென்றறுபதாயிரவராய்ந்தும்
படித்தலைமுற்றுங்காணார்பாதலப்படர்வானெண்ணிப்
பொடித்திரட்பூமிக்கண் § பூழிவாய்மடுத்துவேலை
வடித்தனராகிப்பாத்தண்மண்டலமருளச்சென்றார். (௧௧)

சென்றவரெங்குநாடிக்கைச்சுரிசிமிழ்த்தபாங்கி
னொன்றியுமாயதுட்டவொருசிறையுலவாவேட்கை
பொன்றியகபிலன்பாங்கிற்புரிவுறப்பிணித்தபாடாங்
கன்றியசினத்தாற்கண்டறவனைக்கண்ணியாராகி. (௧௨)

ஆர்த்தனரவிழ்ப்பத்தேறியருக்கவன்சீறநோக்கிற்
பார்த்திடப்பொடியாகிப்படரெரிபஞ்சிற்போல
மூர்த்தமுந்துகளாய்வீழ்ந்தாரமுடிக்குவிச்செய்கையாவும்
பார்த்தனனனைகேட்டுப்பழங்கணுற்றவலங்கூர்ந்தான். (௧௩)

பகத்தழுவுசாலைத்தீக்கைமருவியவேந்தன்சேறற்
கெத்துறுமுயற்சிமுற்றுமாய்ந்தனனுக்ககோமான்
முகத்தெதிர்வதைரந்தானதீமைமுடைசமஞ்சசன்று
னுகச்செறுடக்காணாய்ந்தகருப்பமாயுதத்தபர்தான்றல். (௧௪)

முருகனினிளவலானென்முயலுமூதாதைபாதத்
தருகுறவணைந்துபோற்றியஞ்சுமானரசதேற்ற
மருவுதிபுலம்பல்போதவழக்கன்றூன்மகத்தினீங்கி
யொருவுதலறமன்றுகுமுறுதியற்றவரையொத்தே. (௧௫)

---

* ஊனம்-குறைவு. எனவே,தொண்ணூற்றொன்பதுயாகமும் என்பதாயிற்று † பானனன்மா-பானலாகிய நல்லவிலங்கு. பானல்-குதிரை. ‡ மாயன்படிவமாங்கபிலன்-விஷ்ணுவின் அவதாரமாகிய கபிலமுனிவர். § பூழிவாய்மடுத்து-மண்ணைவாயிலிட்டு விழுங்கி. வடித்தல்-சமமாக்கல்; சமுத்திரமாக்கி என்றதாம். ○ இவனே அசமஞ்சசன் புதல்வனாகிய அஞ்சுமான். அது வருஞ்செய்யுளாற்றெரித்துக்கூறுப.

யானுனனைக்கப்பீழையெய்துவதெவனேவேற்றேன்
வானவனெனினுமாய்த்துவயப்பரிகொணர்வனின்னே
தானருள்புரிதியென்னத்தாழ்ந்திடத்தழைத்துத்தாங்கி
யானனமுச்சிமோந்தேயகன்மடிக்கொண்டுசொல்வான். (கசு)

இளையனீசாவதானத்தெகுயேயிடுக்கணீங்கித்
தளையவிழ்த்தயத்தையீங்குத்தருகெனவிடுத்துத்* தாரை
யுளைவுகன்றேகிவாவென்றுரைத்தவனுசிமேவி
முளையெயிற்றரிமானேற்றின்குருளையின்முடுகிச்சென்றான். (சஎ)

சுருதியுஞ்சாமவேதத்தொகுதியுந்துபரநீக்கு
மிருதியும்படைகளாற்றும்விற்றிறல்வெம்மையாவுங்
கருதியவஞ்சுமானுங்கடற்படைசூழ்ந்துகாப்பப்
பரிதியிற்பொலிந்துதோற்றிப்படர்ந்தனன்கபிலன்பாங்கர். (கஅ)

படர்பவனெறியிற்கண்டேயுரோமசன்பாதம்போற்றி
யிடர்கெடுமுறுதிவல்லேயிசைத்தியென்றிறைஞ்சவன்னோன்
மடலவிழ்துளவத்தண்டார்மாயனுங்கபிலன்வாய்மா
வடலினால்வலியாற்போதத்தமைதியாலாவதன்றால். (கசு)

சீற்றமோடமர்வானுங்குச்சேரலைகடிதுசேரு
மாற்றல்சாலுறுதிவேறென்றறைகுவனமலற்கஞ்சிக்
கூற்றமுமணுகாமேனமைமறைவனங்குலவுங்கோமான்
போற்றவேவேண்டிற்றெல்லாமளித்திடும் † போதமாகும். (உ0)

பாண்டவரங்கண்மேவியென்றெடும்பரமற்போற்றிப்
பூண்டனரரசின்பான்மைசனியுமப்புரியையபோற்றிக்
காண்டகுகிரகமேலாய்க்கவின்றனன்கணிப்பிலாதா
ராண்டணைந்தின்பம்பெற்றாராதலாலங்கணியும். (உக)

கடிதெழுந்தேகிவேதநாயகன்கமலம்போலு
மடிகளிற்போற்றியுள்ளத்தருள்பெறற்காயசெய்கை
மடியறவகுத்தியாயின்மணத்துநீங்கிணைந்தவெல்லாங்
குடிபுகவருளும்போகென்றருந்தவன்கூறியேக. (உஉ)

மேவியகளிப்பிறேனுடும்விரைந்தவன்மேவிவாவிக்
காவியங்கழனிமென்பூங்கமலமென்பொகுட்டிற்காதற்
றாவியஞ்சேவலன்னந்துணையொடுந்துயிலத்தோட்டிற்
றாவியங்கனிகண்மேவிதைவருந்தகையுநோக்கி. (உஙு)

* தாரை-வழி. † போதமாகும்-ஞானஞ்சித்திக்கும். ‡ தைவருதலாகிய
நற்சகுனத்தையும் பார்த்தென்பது கருத்து.

முற்றியவனத்தின்மேயமறைவனமுன்னியாக்கம்
பற்றியாத்திரையோராதும்பலிற்றியப்பாங்கிற்றீர்த்த
முற்றனவனைத்துமூழ்கியும்பர்கோனுவக்கும்பூசை
தெற்றெனவாற்றற்கெண்ணித்திருவினதமைதிக்கேற்ப. (உச)

உருகியபசும்பொற்சாந்தினொளிமணிக்கற்சேர்ந்தோங்கற்
பருகியமதிலோரேழுங்கோபுரம்பரிதியாக்க
மருகியதென்னவாக்கிமண்டபமநேகமம்பொன்
செருகியசிகரமாதிதிருவுறத்திகழச்செய்தான். (உரு)

நிலவிரிமுத்தமாலைகிழன்மணித்தாமநாற்றி
யலர்கதிர்ப்பரிதித்தோற்றமாமெனவலங்குஞ்சோதி
குலவுசோபானமாதிருயிற்றியேகுளிர்ந்தகோயில்
விலகிவில்லுமிழவாக்கிவீதிகள்பலவுமிட்டான. (உசு)

மேனிலைமாடமோங்கவிரிகதிர்மனைகள்வீதி
தானிறைவெய்தவாற்றியந்தணர்தவதநோர்மேவப்
பானிலவிருக்கையோடுபலவளமயிலவீந்து
கூனிலவொளிருஞ்சோதிக்குருமணிச்சடையோற்கெனவும். (உஎ)

செருத்தலான்பால்களாதிசெழும்பழத்தேறல்செந்தேன்
றருத்தலைக்கனிகளாதிதண்பனிச்சாந்தம்பூநீர்
திருத்தமாரபிடேகங்கடேங்கமழ்மாலைசந்தக்
கருப்புரமணந்தராவிக்கலவையுங்கவினச்சாத்தி. (உஅ)

விலைவரம்பறிபலாகாமென்பணிமிகும்பட்டாடை
கலைபலசாத்தியாவிகமழ்ந்தவோதனங்களாதி
யிலைதவர்க்காயினொடுமினியநீர்தூபந்தீப
மலைவறமுற்றுமேறியாபரணங்கவீந்தே. (உகூ)

திருவிழாவாற்றிவீதிதிகழ்தரக்கலைதூவித்
தருமலர்சிதறித்தீபத்தளிபலதயங்கிமொய்ப்பக்
குருமணித்தடந்தேராதிவாகனங்குலவித்தோற்றம்
பொருவறத்திகழச்செய்துபூசனைபுரிவித்தானே. (௩0)

தாணுவீசானதிக்கிற்றன்னமரிருக்கைமேவப்
பாணவீழ்ச்சியினோர்*பட்டம்பரிவுடனமைத்துமூழ்கி
வேணவாவடங்கப்பார்ப்பார்விழைவனவளித்துமேவிப்
பூணுலாமுலையாள்பங்கன்பொன்னடிதினமும்போற்றி. (௩க)

* பட்டம் இதுவே அஞ்சமான்தீர்த்தம்.

மாடுசூழ்ந்திறைஞ்சிமுக்கால்வருபவனொருநாள்வேதம்
பாடுசேவடியிற்போற்றிப்பரிவொடும்பணிந்துபல்காற்
கூடுமென்பதனுற்போற்றிக்குருமயிர்ப்புளகமேவி
யாடுமோதரவாற்சாற்றுந்துதிதொடையமைப்பதானுன். (௧௨)

வேறு.

திருவார்மறையுமயன்மாலுந்தேவர்கோனும்பலதேர்ந்து
மொருகாலனுவாயினுமுணராதயர்ந்தமேன்மையுடையானே
பெருவாழ்வளிக்குமறைவனத்தெம்பெருமானேயமுதேபெருசோதியே
வெருவாதடைந்தேனினதடியையருளாய்வேதவிழுப்பொருளே. (௧௩)

பெருக்கார்கருணைத்திவலையினைப்பெற்றேயயனுந்திருமாலு
முருக்காண்பதுவுமளிப்பதுவுமொழிந்தேயிற்றுராதலினின்
றருக்கார்நோக்கந்தரும்பினிகடைச்சாரினதுவேயவராகு
மருக்கால்வேதவனவாழ்வேயெல்லாநினதுவலியாமே. (௧௪)

மகவான்முதலோர்தானவரால்வருந்தவவர்பால்வலியீந்தே
யிகவாதளிக்கமறந்திரித்தேமென்னுமகந்தைக்கியக்கவுருத
தகவாய்ந்தழல்சான்முதற்றேவர்தன்மையிழந்தேதருந்திருணத்
துகவாரகந்தையொழித்தனையேதுலகுஞ்சத்திபொழித்திடினே. (௧௫)

அயனேயாதி*சலமேவியருளினிலேசமவ்வதொழிற்
பயனேயாகப்பகுத்ததுவுமுணராய்பரமானந்தநிறை
வயமேயாகிக்களைசூதன்வகுத்தேயுலசுமளிக்கவருள்
வியனேயருளும்வேதவனவிமலாகதிநீவேறிலையே. (௧௬)

† ஆதிநோக்கமாயையினீயளித்தாயதனுற்சராசரமும்
பூதிமேவுமெனுமேன்மைபுகழேன்பூசைபுரிந்தறியேன்
நீதிநூலுமழற்றுறையுநினையேனினைவார்தமகசெனியாய்
நீதினிறைவேன்வேதவனத்தெளிவேபுகலுன்சேவடியே. (௧௭)

அறிவாய்விகற்பமதற்கிடமாயவத்தைநீங்கியானந்தக்
குறியாயிலகியேகமதாய்க்குறித்தற்கரியவனுபூதி
நெறியாய்விலங்கும்பரமாயநிமலாபோற்றிநிறையின்பச்
செறிவேபோற்றிவேதவனத்தேவேபோற்றிசிவபோற்றி. (௧௮)

* சலமேவி-விட்டுனு. இலேசம்-அற்பம். உணராய் உணரப்படமாட்டாய்; செயப்பாட்டுவினை. சூதன்-பிரமா. பிரமாமுதலியதேவர்கள் தேவரீரருளின தற்பமாகிய கூறேயாம். † ஆதிநோக்கம் ஞானக்கண்பார்வை. பூதி-சுவானுபூதி.

நிலமிசைப்பணிந்துநீநிகழ்த்துநோக்கினாற்
றலமிசைச்சாம்பராந்தலைவர்யாவரு
மலமரலொழித்துவானடையநல்கெனப்
புலமலிகபிலனும்புரிவிற்கூறுவான். (சஎ)

எழிலிசைப்பகீரதனென்னும்வேந்தனும்
வழியிடைத்தோன்றியேவானக்கங்கைநீர்
பொழிதரவளித்திடும்போதிநீயெனக்
கழிமகிழ்வெய்தியக்காலையஞ்சுமான். (சஅ)

வேதநாயகன்றனைப்போற்றிமெய்த்தவன்
பாதமேபணிந்தவன்பணித்தவாம்பரி
காதலின்மேவியேகடிதுகாவியம்
போதவிழயோத்தியிற்போதன்மேயினான். (சகூ)

பவளவாயினியர்பல்லாண்டுமேவியே
சவளமாலியானையான்சகரன்காதல்கூர்
தவ்ளமாளிகையிடைச்சார்ந்துதாதணி
* யுவளகச்சாலையினுவப்பினெய்தினான். (ரு0)

அவையெலாம்பெருமகிழ்வெய்தியாரணக்
குவைதருமாசிகள்கூறியேத்திட
நவையறு † பிதாமகனளினநாண்மல
நிவையெனுஞ்சேவடியிறைஞ்சியேத்தலும். (ருக)

வரையகன்மார்பகத்தணைத்துவார்மயிர்
நிரைகமழுச்சியுமோந்துநேயமாய்க்
கரைதருகண்பனியாட்டிக்காதலால்
விரைமகமுடித்தனன்வேந்தர்வேந்தனே. (ருஉ)

மாலுருவாகியகபிலன்வண்டினத்
தோலுறுமஞ்சுமான்றீர்த்தத்தொண்புனல்
சாலுமுக்காலமும்படிந்துதன்னையே
போலுயர்வேதநாயகனைப்போற்றினான். (ருங)

போதவிழ்த்தனியினமூசிப்பூந்துணர்த்
தாதயிலஞ்சுமான்றீர்த்தத்தண்கரை
யேதமற்றுறைந்தனவிலஞ்சியீதினிற்
காதலிற்படிபவர்காண்பரின்பமே. (ருச)

---

* உவளகம்-அந்தப்புரம். † பிதாமகன்-பாட்டன்.

வேறு.

பரிந்தவர்க்குப்பரிமேதப்பயனளிக்குமஞ்சமான்பட்டமேன்மை
விரிந்தகதைநாரதனும்வேந்தனுக்குவிளம்பினனிவ்வியனூர்காதை [ய்
தெரிந்துரைப்பார்கேட்பவர்தாந்திருமருவும்பெருவாழ்விற்சிறந்துசெவ்வா
முருந்தனையமுலைசூரன்முற்றிழையாள்பங்கனடிமுளரிசேர்வார். (௫௫)

அஞ்சுமான்றீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௯,0௯0.

---

# பாண்டவதீர்த்தச்சருக்கம்.

திருவாருஞ்சிவேதவனத்தெளிகாதையெனுஞ்செழுந்தேன்செவியினூடு
பெருவாழ்வுபெறவளிததோய்பிறங்கியபாண்டவதீர்த்தப்பெயரின்மேவி
மருவாருந்தடமேன்மைசனியிவணேய்ந்துயர்ந்ததிவைவகுப்பாயென்றுந்
தருவாருமழைத்தடக்கைத்தகைவேந்தன்வினவமுனிசாற்றலுற்றான். (௧)

ஆடியவஞ்சனைச்சூதாலரசிழந்துதிருநீங்கியமுதச்செவ்வாய்
வாடியமென்மருங்குல்வனத்திரௌபதைபோடணிவேள்விவனப்புவாய்மை
கூடியவந்தணர்சூழவிந்திரசேனுதியவர்சூழாத்திரோடு
நீடிய*வெம்மாத்துவிதவனத்தடைந்துசிலகாலநிகழ்ந்தபின்னர். (௨)

காரிருட்காமியவனத்துப்பயில்காலைத்தனஞ்சயன்கற்பகக்காவேந்த
னூரிருவரனுமதியாலுரோமசனுந்தருமனுழையுயர்வானின்றும்
பாரினுறப்பணிந்தெழுந்தேபாத்தியமேமுதலருளப்பரிந்துமேவிக்
கூரியவுணதிர்வடிவேற்றருமன்முகநோக்கிமனங்குளிரச்சொல்வான். (௩)

தங்கியொருதலைமேவிற்றருந்துயரங்†காரியமித்தருணத்தில்லைப்
பொங்கியெழினனிதருமம்புணராதுபுலத்தியனேமுதலோர்பூமேற்
கொங்கிவருங்குளிர்தீர்த்தயாத்திரையாணிணைந்தவெலாங்கூடிப்பாவ
மங்கிடவுயர்ந்தனராலெழுதியெனவிதிகாசம்வகுத்துக்கூற. (௪)

மடவரலுந்தம்பியருமற்றையரும்புடைசூழவழிக்கொண்டோங்குந்
தடமருவுபெருங்கானும்வாவிகளுங்குளிர்சாரற்சைலவைப்புங்
கடன்மடியுநதிகளுங்கலைமுனிவரிருக்கைகளுங்கண்டுபோற்றி
யுடனணையப்படிந்துமறையொழுக்கியலும்வழக்கியற்றியுவகையோடும். ()

---

* வெம்மாத்துவிதவனத்தடைந்து-கொடியவிலங்குகளையுடைய துவித வனத்தையடைந்து. † இத்தருணத்திற்றிராசகாரியமில்லை, இராசகாரியங் களின் மிகமுயற்சிசெய்யிற் பெரிதுந்தருமம் புணரமாட்டாது, இதிகாசம்-சரித்திரம், மேற்கோள்.

தேன்குமுதச்செழுங்கனிவாய்ப்பாஞ்சாலிபிளையவர்தாந்தெய்வவேதத்
தோங்குமறையுரோமசனந்தணரோடும்பலவிடமுமுற்றுநீங்கிப்
பூங்குழலார்பந்தடிப்பப்பொறித்தடங்கட்கலாபமுடல்போர்த்தெழாலிற்
பாங்குநடமஞ்ஞையினம்பயில்வேதவனமடைந்துபரிவிற்போற்றி. (௬)

நோக்கியகண்ணிக்கரிதாநொடிவரியவனமேவிநுகர்ச்சிநோற்பார்
பாக்கியமேபோற்பரந்தபதியிடையாறியாத்திரையும்பரிவினூற்றி
நீக்கிமடல்விரித்தறுகாலெழுசிறைப்பாண்சுரும்பளிதேனிறையமாந்தித்
தேக்கியிடும்பலவாவிதினைத்தாடித்திங்களொன்றுசேர்ந்துவைகி. (௭)

இருக்கையினோர்மலர்*வாவியிழைத்ததனின்முக்காலமியல்பின்மூழ்கி
மருக்கிளரும்வேதவனமாதீர்த்தம்பலபடிந்துமறைநசாதற்
குருக்கியவன்பொடும்பூசையுவந்தளித்துத்துதியாற்றியொளியார்கோயிற்
றிருக்கிளரவலஞ்சூழ்ந்துதிங்களுமிம்முறைமேவித்திகழ்ந்தானன்றே. (௮)

பற்றலராருயிர்தொலையத்தானிழைத்தபட்டமதிற்பசியமாழை
கற்றவர்பாற்பலவுதவிக்கமழ்மறைசைப்பெருமான்றன்கருணைமேவிச்
சுற்றியகாங்கேயன்முதற்றுணையோருஞ்சுயோதனனுந்தொலையப்போரில்
வெற்றியமர்ந்துலகளித்தான்விறற்றருமன்மறைவனஞ்சேர்மேன்மையாலே.

பாண்டவவாவியிற்படிந்தேபசியதபனியமளித்தோர்பகையினீங்கி
யாண்டகையாயரசுரிமையடைவர்சிறூர்கல்விதிருவனைத்துமேவி
நீண்டசடைநிமலனருணெறியடைவருலகளிக்குநிருபரேறே
வேண்டவரமளித்தருளும்பாண்டவதீர்த்தப்பெருமைவிளம்பினேமால். (௧௦)

## சனிதீர்த்தமான்மியம்.

சனிதீர்த்தமேன்மையினிச்சாற்றுதுங்கேளெழுந்†தரணிசாயைதன்பா
லினிதீன்றமகவாகுமிலங்குசனியவன்கிரகமெவைக்குமேலாய்த்
தனிதாங்கும்பதமேவத்தவம்புரிதற்குயர்ச்சியுறுந்தலமொன்றுய்ந்து
கனிதூங்குநறியநருக்கமழ்வேதவனமடைந்துகாதல்கூர்ந்தே. (௧௧)

மூன்றிரண்டியாத்திரையுமுறைபுரிந்தத்தலதீர்த்தமுற்றுமூழ்கி
வான்றிகழுந்தலமேவவயங்கியவேதாவமிர்தவாவித்தெனபாற்
றோன்றினியநீர்த்தடமுந்தொட்டதனிற்றினமூழ்கித்துயரமீச்கூர்ந்
தான்றியமெய்த்தவம்புரிந்தானுணவகன்றிந்தியமடக்கியுலப்பில்காலம். (௧௨)

நறியமலர்த்‡தனதடகானவிதியாற்படிந்தாங்கனம்போதுஞ்
செறியமறியணிவேணிச்சிவபெருமானடிபோற்றித்திகழ்வானோர்நாள்
வெறிமெழுமலர்தூவிவிழைந்தடிமேற்பணிந்தவசமேவியன்பாங்
குறிகெழுத்தோத்திரங்கள்பலவாற்றிக்குழைந்துருகிக்குறித்துச்சொல்வான்.

* வாவி இன்னே பாண்டவதீர்த்தம். † தரணி-சூரியன். சாயாதேவிக்குச் சவர்ணையெனவும் பெயர். ‡ தனதடம்-சனிதீர்த்தம்.

போற்றியருளாலுலகம்புரந்தளிக்கும்புகலாயபொருளேபோற்றி
தேற்றியெனையிருணீக்கிச்சேவடிக்கீழருமையுறச்செய்தாய்போற்றி
யூற்றியலன்புருவாயவுளத்திறொளிபழுத்தூறமுணர்வேபோற்றி
மேற்றிகழும்பரமாவேதவனத்தமுதாயவிளைவேபோற்றி. (௪௪)

என்றினையபலவேத்தியிறைஞ்சுதலும்வேதவனத்திறையோனேர்ந்து
நன்றிதரும்பூசையினலியாத்திரையாற்றடமியற்றுநன்மைதன்று [ப்
லொன்றியகோனபதுதன்றுலுவந்துவரமளித்தருள்வோமுரைப்பாயென்ன
பொன்றிகழுஞ்சடையானையடிபோற்றியெழுந்துசனிபுகல்வதானன். (௪௫)

வரந்தருவாயெனிற்கிரகமனைத்தினுக்குமேலாயவாழ்வுமேவப்
புரந்தடியேனியற்றுமலர்ப்பொய்கையினிற்படிந்தார்கள்போகமேன்மை
நிரந்தபதந்திருவாயுணீர்மையுறவெனதுதுயர்நீங்கிநீடு
மரந்தைகெடவருள்வாயென்றுரைப்பவளித்தமலேசனகன்றனம்மா. (௪௬)

நிறைபுனலிற்றிரைபோலப்பரனகலச்சனிக்கோடானெடுவான்மேவி
யுறைகிரகமனைத்தினுக்குமுயாபதத்துப்பரனருளாலுறைந்தேயோர்ச்சிக்
குறையகல்வானியங்கியுளங்குளிர்காலையொருகாலக்கோடான் * பூமே
லறையுமுரோகிணிநடுவணடைந்தமரமழையுலகத்தற்றதன்றே. (௪௭)

மாரிவறந்தாவிதனைவருத்துபசியிகுந்துபயிர்வாய்த்தலின்றிப்
பாரினுயிர்பலவிறப்பப்பஞ்சமுறீஇப்பதைபதைக்கும்பருவநோக்கிக்
கூரிலைவேற்றயரதனுங்கோவேந்தன்வசிட்டனுரைகொண்டுமேவித்
† தேரியலுமணிவீதிவேதவனத்தியாத்திரையோராறுஞ்செய்தே. (௪௮)

ஒழியாதுசனிதீர்த்தமுவந்துபடிந்தேதினமுமொளிரும்பால
விழியாளனுயமறைவித்தகனைப்பத்தியொடும்விழைந்துபோற்றி
யழியாததனிமுதலேயன்புறுமாருயிர்க்கமுதேயருளேவேத
மொழியானேயுலகேத்துமுன்னவனேயெனப்பணிந்துமுறையிற்சூழ்ந்தே.

அருண்மேவித்தினம்பணியுமதனாலுஞ்சனிதீர்த்தமாடலாலுந்
தெருண்மேவுவேதவனச்சிறப்பாலுஞ்சங்கற்பசித்திசேர்ந்தே
யுருண்மேவுந்தேர்நினைந்தவுழையுறுபேறெய்திமனத்துவகையோடு [ன்.
மிருண்மேவுஞ்சனியொடும்போரிழைப்பனெனவவன்பதத்தினெய்தவன்று

---

* சனி இடபலக்கினத்திலிருக்கிறவர். † தேரோடும்வீதி இத்தயரதமகாராசாவான் நிருமிக்கப்பட்ட தாகலின், அதனையுமின்றுஞாபகம் கூர்வித்தற்பொருட்டுப் பிதிதேரடை கொடாது தேரியலுமணிவீதிவேதவனமென வீதியடைகொடுத்தோதினர். இவ்வேதப்பற்றி இவ்வேதவனத் தேரோடும் வீதி தயரத மகாராசர்வீதி என இன்றும் வழங்கப்படும் மாதலில்.

கட்புகரபதியோடுயெர்ந்தமறைவனப்பெருமைகாடிப்பூமேற்
கொட்பகலமழைதவிக்குளிரவனித்தவளியுறக்குறையுநீக்கிப்
பெட்புறநல்வரமளிப்பேம்பேசுகெனநீயாற்றும்பீழையோகத்
தட்பமுறக்தடமுனதிற்றூழ்ந்தார்கட்கருளுகெனத்தந்தபோனான். (உக)

வேந்தனுமவ்வரஞ்சனிபால்வேண்டியயோத்தியையடைந்தவிருப்பின்மேவி
மாந்தர்பெருமகிழ்வோடுமனங்களிப்பப்புரந்தளித்தான்வையம்பூநீ
ரேந்தசனிதடம்படிந்தாரினபமுமாரோக்கியமுமிலங்குஞ்செல்வக்
காந்தியுமுண்டாய்ச்சனிதன்கடுந்துயருமருவாதகளிப்பரன்றே. (உஉ)

வேறு.

சனிவாவியின்மேன்மைகடாழ்வறவே
கனிவாய்முனிகாவலனோர்தரவே
யினிதாகவிசைத்தனனீதுணர்வார்
முனிவார்வினையாயினமுட்டறவே. (உ௩)

பாண்டவதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௬,0௩௩.

---

# சூரியபுட்கரணிச்சருக்கம்.

பருமணிதிரைசொரிபானுப்பட்டமு
மிருளகல்பாற்கரவிலிங்கமுற்றதும்
வருமுறைகூறெனவழங்குமன்னனுக்
கருண்முனிதகவொடுமறைதன்மேயினான். (க)

பாயிருள்சீத்தெழும்பரிதிவானவ
னாயிரங்கண்ணனென்றிருவராசறச்
சேயுயர்விசும்பிடையமர்ந்துசெல்வமே
மேயினரிருங்களிமேவியெண்ணுவார். (உ)

முறைதரவடுக்கு*மூவுலகும்போற்றிடு
மிறையெனுமதிபன்யான்யானென்றெண்ணியே
கறைதருமகந்தையிற்கலந்துகாதலா
துறையுகாளெல்லைபொன்னுழையினேகியே. (௩)

மூவுலகேத்திடுமுதல்வன்யாரெனத்
தேவர்நாயகனெனச்செப்புமிந்திரன்
காவலனென்பதற்கையங்காண்கிலே
மாவலாலின்றெனவருக்கன்கூறுவான். (௪)

---

* திரிலோகநாதன் யான்யானென்று தனித்தனிகருதி.

கலமலிகடலுலகினுக்குநாதனுய்ப்
பலர்தொழும்பான்மையும்படைத்துமல்குவா
னிலமிசைத்தவம்பலகிறைப்பனென்றுதே
னலர்சொரிமறைவனத்தருளின்மேவினான். (௫)

உள்ளியபயனுடனுதவுமோங்குசீர்
வள்ளியவிலிங்கமொன்றமைத்துவாவியுந்
தெள்ளியதீம்புனல்சேரவாற்றிவண்
புள்ளியல்புதுமலர்ப்பூசையாற்றுவான். (௬)

ஆற்றுமத்தடப்புனலாட்டியன்பினாற்
போற்றுமுக்காலமும்புரிந்துபூசனை
சாற்றுடன்மனம்பொறியடக்கிக்காய்தர
நோற்றுளத்தரனடிபதித்துநோன்மையால். (௭)

வற்றியென்புகுதரவயங்குமாதவ
முற்றினனெடியநாண்முயலமோகமீர்
சுற்றியசெஞ்சடைச்சுருதிநாயகன்
பொற்றிரட்குன்றெனமுன்னமபூத்தனன். (௮)

கண்டனனெழுந்தனன்கண்கள்காதனீர்
விண்டனன்றொழுதனன்வேதநாயகன்
முண்டகநாண்மலர்முருகுநாறெழி
லுண்டனசேவடியுவந்துபோற்றினான். (௯)

பருகியவன்பினாற்பரிதிவானவ
னுருகியவுளத்தொடுமுவப்பினோங்கியென்
திருகியதீவினைதீர்ந்ததென்றுதேன்
பெருகியகாதலாற்பேணிப்பேசுவான். (௧௦)

வேறு.

விண்ணமரும்புரமூன்றுமழல்வாய்வீழ்ந்துவெந்தவியக்குறுமூரல்வி
னைத்தாய்போற்றி, கண்ணழலாற்கழைக்காமன்கருகிநீறாய்க்கவினழியவிமை
யலர்த்துங்கடவுள்போற்றி, மண்ணகழ்ந்தும்விண்பறந்துமயனுமாலுமருட்
கையுறத்தழலாகிவளர்ந்தாய்போற்றி, பண்ணமருமொழியோடுமறைசைமே
யபரம்பரனேபசுபதியேபகவாபோற்றி. (௧௧)

கூற்றுயிர்விண்டயர்ந்தடங்கமிர்த்தகோலக்கோகனதக்குரூஉச்சேவ
டியாய்போற்றி, தோற்றுமூரட்சலந்தரன்வெந்திறன்மாய்ந்தாகந்துடித்தவி
யவருணேமிச்சுடரேபோற்றி, யூற்றமிகுந்தகவிடம்பார்விழுங்கச்சீறியோர்
குக்ஷரநகிவேகமொழித்தாய்போற்றி, சாற்றுமறைவனமேவியுலகங்காக்குந்
தன்னனியாய்சங்கரனேதனியேபோற்றி, (௧௨)

---

* திரிலோகேசனுமி.

காலவழல்வெம்பகுவாய்விழுங்கமாய்வர்கண்ணன்முதற்றேவர்களைக் காலமுண்போங், கோலமிதனுற்றெனிவீரெனக்கபாலக்குனிர்மாலையெழின் மேனிக்கொண்டாய்போற்றி, யாலமணிகளமேவியரியேயாதியமரர்தமக்கர சளித்தவமலாபோற்றி, ஞாலமதற்கணியாயமறைசைவேதநாயகனேநான்ம றையினயமேபோற்றி. (கஉ)

கனித்துவர்வாய்க்குழைதடவுங்கருங்கணீலக்காரிகையோடெழின்மே னிகலந்தாய்போற்றி, தனித்துணையாயெனதுளத்தேதழைத்துத்தோன்றித்த னர்வகற்றியெதிர்ந்தபவந்தவிர்த்தாய்போற்றி, புனிற்றிளமாமதிக்குழவியமு தச்சோதிபொறியரவமெழுமாந்திப்புனல்வாய்ப்பாயு, மினிற்றிகழுங்குளிர் வேணிவிகிர்தாபோற்றிவேதவனநாயகனேபோற்றிபோற்றி. (கச)

வேறு.

தோத்திரமின்னனவியம்பித்தோமறுங்
காத்திரங்கம்பமுற்றேங்கிக்காதலா
னேத்திரமிமைப்பறுநிலைமைக்கேய்ந்தது
பாத்திரமெனவிழிபரப்பிப்போற்றவே. (கரு)

வேண்டியதருளுதும்விளம்புநீயெனுத்
தூண்டியசெஞ்சுடர்ச்சோதிகூறலும்
* பாண்டரக்களிற்றவனென்னப்பாயசீ
ரீண்டிமூவுலகமுமேத்தநல்குவாய். (கசு)

என்பெயர்த்தினத்திடையாவரேனுமென்
பொன்பயில்வாவியின்மூழ்கிப்போற்றிறு
ரின்பமுந்தருமமும்பொருளுமேய்ந்துபின்
னன்புறச்சிவபுரியடையநல்கென. (கஎ)

பணிந்தெழும்பரிதியைப்பார்த்துமூவுல
கணிந்துநாயகனெனவலங்கியந்தணர்
துணிந்துனைச்சந்திகடோறும்போற்றியே
யுணர்ந்துறச்சதமகனொத்துவாழ்கெனு. (கஅ)

நல்வரமளித்தநீயந்தநாடனிற்
† பல்வலம்படிந்தெமைப்பணிவிற்போற்றுவார்
செல்வமுமாயுளுமறமுஞ்சேயுய
நல்வனின்பமுமியாவுமெய்துவார். (கக)

* வெள்ளையானையையுடைய இந்திரனைப்போல. † பல்வலம் - பிறு குணம்.

ஆவணிகார்த்திகையாருந்திங்களிற்
பூவணி * பொய்கையிற்புக்குநந்தமைத்
தாவணியாடினர்தொழுதாய்மையோர்
நாவணிபுகழொடுநயப்பரின்பமே. (உ0)

† பார்பொருட்டரியவதாரம்பற்றுநாட்
சார்சதமகனெனச்சகாயநல்கிநீ
சீர்வளமருவுதியென்னச்செப்பிநீர்க்
கார்மணிமிடற்றவன்கரந்துபோயினான். (உக)

கரந்தவப்பரமனைக்கருதிப்போற்றியே
யரக்கைதீர்ந்தரியெனவகிலம்போற்றிட
நிரந்தவன்புகழொடுநிகரற்றுதியாய்ப்
பரந்தவான்மகிழ்ந்தனன்பரிதியென்பவே. (உஉ)

மணிதிகழ்மறையனமேவிவாவியு
மணிகிளரிலிங்கமுமாற்றுமேன்மையாற்
பணிபவாக்கின்பருள்பகவனாகிவான்
றணிதருமதிபனுய்ச்சோதியாயினான். (உங)

வேறு.

ஆதலினாற்சூரியபுட்கரணியிடையவன்றினத்தினடைந்தமூழ்கிக்
காதலினறபகலவன்றன்கருதிவழிபடுமிலிங்கங்கணிந்துபோற்றிற்
பூதலமீதழியாதபுகழ்மேனமைதருமாதிபொருந்திமூன்று [ன்.
மூதலகுந்தொழுமபதியாய்முளைப்பரெனமுதல்வனுக்குமுனிவன்சொற்று

வேறு.

சூரியவாவிதனைந்துபடிந்தா, ராரியராகியருந்திருவுற்றே
பாரியவின்புபரிப்பர்விரிப்பார், சீரியரிக்கதைதேர்பவரோடும். (உரு)

. சூரியபுட்கரணிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯, 0ருஅ.

---

# சந்திரபுட்கரணிச்சருக்கம்.

சீதமதியப்பகவன்றிருவார்மறைசைமேவி
நாதனுருவஞ்சமைத்தநலமார்தடமுமமைத்துப்
பாதம்பரவவளித்தபான்மையுரைத்தியெனவே
போதக்கிகமுமுனிவனரசற்கினிதுபுகல்வான். (க)

---

* பொய்கையிற்புக்காடினராய் நந்தமைத்தொழுதவாய்மையோர்.
† உலககாரியமியிந்தும் விட்டுணு அவதாரத்தை மேற்கொண்டுள்ளகாலங்களில்
இந்திரனைப்போல நீயும் அவ்விஷ்ணுக்குச் சகாயஞ்செய்து.

மழையார்தடங்கண்மகளிரிருபத்தெழுவர்வளப்பாற்
றழைவார்தம்மைத்தக்கன்றகவாலளித்துச்சசிநீ
பிழையாதிவர்பாலன்பிற்பிரியஞ்சமமாய்ப்பெரிதும்
விழைவாயென்னவிடுப்பவமர்ந்தேயகலாவிழைவால். (உ)

கலவிக்கடலிற்படிவான்கதிர்மென்முலைரோகிணிபாற்
குலவிக்குளிரமற்றைக்குதலைப்பணிமென்மொழியா
ரலவிக்கலவிமதனனடலம்பகலம்போழ
நிலவிக்கனிவான்முனிவார்தந்தைக்கிதனைநிகழ்த்தி. (ங)

நாணாலெருத்தமிறைஞ்சிநலமார்கழுநீர்விழிநீர்
பூணாரகலநனைப்பப்புழுங்கத்தக்கன்புகைந்து
சேணார்மதியைக்குறைந்துதேயச்சாபஞ்செப்ப
வேணார்கிரணமழுங்கியழுங்கிக்குறைவுற்றெய்த்தான். (ச)

நெஞ்சங்கலங்கித்தீர்க்குநெறியேதென்னநினைவா
னஞ்சந்துணையோடணையவரியார்வரிகள்பாடுங்
கஞ்சங்கமழுங்கழிசூழ்மறைசைமேவிக்களியா
னஞ்சங்கவினுமிடற்றானளினப்பதங்கணயந்தே. (ரு)

வேறு.

அன்பாலுயர்பூசனையாற்றவலங்குமீச
னென்பாலருள்செய்திடிற்சாபமிழைப்பதென்னென்
றினபார்மறைசைப்பதிமன்னியிறைஞ்சியேத்தி
முன்பாரருள்பெற்றிடயாத்திரைமுற்றுமாற்றி. (சு)

பதியார்தருதீர்த்தமனைத்தினும்பண்பின்மூழ்கி
விதியான்மறைநாயகன்வீறுவிடங்கவீசன்
கதியேயுமிராகவன்பூசைகனிந்தகோமான்
* சதியாழனவாணியென்றீங்கிவர்தாள்கள்போற்றி. (எ)

தாவிக்களிவண்டுணமுண்டகந்தாழு † மென்றாழ்
வாவிக்கயல்வாய்ந்தநன்றூணுயர்வாரமோரை
மேவிச்சிவலிங்கமுமாற்றிவிரும்பியாட்டப்
பூவிற்றிகழ்பொய்கையுந்தன்பெயர்பூப்பநல்கி. (அ)

காலந்திகழ்மூன்றினுமாவிகலந்தமூழ்கி
யேலங்கமழ்தீம்புனலாற்சிவலிங்கமாட்டிச்
சீலந்தருபூமுதலாயதெரிந்துசெய்தான்
ஞாலம்பரவும்படிபூசனையென்றுமென்றும். (கூ)

---

* சதியாழனவாணி வீணாவாதவிதூஷணி. வீணையினுடைய நாதத்தைமிகத்தூஷித்தல். வாதம்-நாதம். † என்றாழ்வாவிக்கயல்-சூரியபுட்கரணிக்கயலே.

தலையாயவரிச்சைசெபந்திசாலவாற்றி
நிலையாமனமைம்பொறியாசையினீக்கிநீக்கி
யுலைவாயவருந்தவமேவியுலப்பில்காலஞ்
சிலையாயசமாதியுமாற்றினன்றிங்களாஞேன். (௧௦)

அரிதாயவருந்தவமாற்றியரிச்சைமேவிப்
பரிவாயமதிக்கலர்த்தேங்குழற்பாவைபாகன்
புரிவோடுமெதிர்ந்திடப்பொங்கொளிபூத்தமேனிப்
பெரியோனடிபோற்றிமகிழ்ந்தலர்பெய்துபேசும். (௧௧)

வேறு.

மூவாமணியேமுழுமாமுதலே, பாவார்மறைதேடுபரம்பரனே,
பூவார்சடையாய்புனிதப்புயலே, தேவாபிறைசூடியசேகரனே. (௧௨)

ஆடுங்கழலாயறிவேயமலா, நீடும்பொருளாகியநின்மலனே,
நாடுந்தனியேநலமேயருள்வாய், வாடுந்தமியேனமகிழ்வாயுறவே. (௧௩)

அரியோடயனுவிதிகைத்தறவே, யெரியாகியிலங்கியவெம்மிறையே,
வரியார்மலர்வாள்விழிபங்குடையாய், புரியாயருளென்றுபுகன்றிடலும்.

வேறு.

முன்னமேயெதிர்தோன்றியமுக்கணெம்பெருமா
னின்னலோம்புதியீ சுதும்வரமறையியலாற
பன்னநம்முருவாற்றியேபரிந்தபூசனையா
லன்னமார்தடமாற்றலாலறியாததிரையால். (௧௫)

மறைவனத்திடைவைகலால்வழங்கியேவரமுன்
குறையசற்றுதங்கூறெனக்குழைந்தடிபோற்றி
யிறைவநின்னருளின்னதேலிகலினுற்றகக
ளறையவாய்த்தருசாபமுன்பகற்றியேயதனபின். (௧௬)

யாணிபற்றியதடத்திடைமூழ்கியாணிழைக்கும்
வாணிழற்குறியிலிங்கமுமபோற்றினர்யவியோர்
தாணிழ்ந்தியசாபமுநதவிர்ந்தவர்தாங்கு
மூணிழைத்தவெவ்வினையெலாமொழிந்திடவுதவாய். (௧௭)

வாரமென்னதுதன்னினிவ்வாவியின்மூழ்கித்
தீரமேவியசிவகுறிபோற்றினர்திகைபபார்
சாரவாற்றியதழல்வினைதடிந்தினசார்பிற்
சேரநல்கெனச்சிவன்மகிழ்ந்தினிதருள்செய்வான். (௧௮)

தக்கனுற்றியசாபவெந்தீயுறத்தளர்ந்தோர்
பக்கநீதுறைமேவியேமற்றையபக்கம்
புக்கவான்கலைமுறைமுறைபொலிவுறப்பொருந்தி
மிக்கபூரணமேவுதிகம்மருள்வியனுல். (௧௯)

வளர்ந்துவான்கலைமல்குதற்கவதிபூரணையார்
தளர்ந்துவண்கலைசாய்வதற்கமையதுதானு
மளந்திரண்டினுக்கிடைபடுநாட்டிதியவற்றிற்
கிளர்ந்த * கவ்வியமவ்வியஞ்செயமறைகிளக்கும். (௨0)

† தேயுமக்கலையங்கியேமுதலியதேவர்
வாயுமாறளித்தவர்தமைவளர்த்திடாமகத்தா
லாயுதற்றவந்தானமென்றிவற்றினாலாகி
மாயுமக்கலைவளர்ந்துபூரணமுறமலரும். (௨௧)

‡ தின்னதாக்கமுங்குறைவுமூன்றுலகருணெறியான்
மன்னவாகுவதாம்பிணிதீர்த்துயிர்வாய்ப்பப்
பன்னு ο மோடதித்தலைவனுய்ப்பாரளித்துயர்வா
யென்னநல்கியேநீண்மலரிலஞ்சியினேய்ந்தே. (௨௨)

சோமவாரத்திற்படிந்தெமைத்தொழுவினைதுடைத்துக்
காமமேவுவர்கார்த்திகையாந்தினங்கலந்தே
தாமமார்ந்தநந்திருவுருப்போற்றியதவத்தோ
ரேமமாயவீடெய்துவரென்றிறையெழுந்தான். (௨௩)

மல்குபேரொளிமறைதலும்போற்றியேமதியும்
பில்குகாதலாற்றனதுயர்நிலையிடைப்பெயர்ந்தே
யல்குபாவநோயகற்றியேயகிலமும்புரந்து
பல்கவான்கலையமுதமீந்தொளியுருப்படைத்தான். (௨௪)

திங்களம்புலிச்செழுந்தடந்திளைத்தவண்சிறக்கு
மங்களந்தருவரதனைப்பணிந்தவர்யாழ்ந்து
வெங்களங்குறுவினையொழிதமலராய்விளங்கி
யெங்களம்பரன்பதியிடையினிதுவீற்றிருப்பார். (௨௫)

---

* கவ்வியம்-தேவப்பிரீதி; யாகமுதலியன. அவ்வியம்-பிதிர்ப்பிரீதி; பிண்டமுதலியன. இதுமேலுங்காட்டப்பட்டது. † தேயுங்கலைகள் பதினைந்தும் முறையே பதினைந்துதினத்திலும் ஒவ்வொன்றாக அக்கினி முதலிய தேவர்களாலுண்ணப்பட்டு, அவர்களை உச்சீவிக்கும்படி செய்து, மகத்தினாலும், தவத்தினாலும், தானத்தினாலும் அவைகள் மீளவளர்ந்து மலருமென்க. ‡ தின் வளர்ச்சியுந் தேய்வும் திரிலோக க்ஷேமவிருத்தியின்பொ

வேறு.

சினத்துத்தக்கனளிக்குஞ்சாபச்செயல்போய்
மனத்துக்களியின்மதியக்கடவுண்மல்கின்
பினத்துத்தழையுங்காதையரசற்கியலா
லனத்துத்திசழ்வானளித்தானளித்தானருளால். (௨௧)

சந்திரபுட்கரணிச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩,0௮௪.

---

# சஞ்ஞைதீர்த்தச் சருக்கம்.

தழன்மணிக்கலாபஞ்சூழ்ந்தமுழைத்தபோல்துற்றுமக்
குழன்மழைக்கருத்தசெவ்வாய்க்குயின்மொழிக்கொடியாஞ்சஞ்ஞை
யுழலரிக்கணைக்குழ்பட்டத்துயர்மனையுரைப்பளேர்ந்த
கிழனிணக்குருதவெள்வேனெடும்படைநிருபரேற. (௧)

வடிவெழில்வனப்புவாய்ப்பவானத்தலட்டாவின்ற
பிடிநடைமயிலஞ்சாயற்சஞ்ஞையைப்பிறங்குவெய்யோன்
கடிமணங்கமழமேவிக்கலந்தறக்களிக்குநாளிற்
கொடியிடையிரவிமேனிக்குருஉச்சுடர்குறித்துக்கூசி. (௨)

உருப்பவிர்வெயிலொறுக்கும்புனித்தினைந்தளரினேற்குத்
திருப்புரையெழின்மென்சாயற்றிருத்திமைருழையுமேனி
நெருப்புறுகிரணமாற்றுங்கயர்ந்தவணீங்கிநேய
விருப்பொடுதந்தைதன்பான்மேவியுள்விளைவுகூற. (௩)

வஞ்சியங்கொம்பரன்னாண்மனக்கருத்திரவிசோதிக்
கஞ்சியீங்குறைதற்காகுமெனவுணாந்தருளார்தெய்வம்
பஞ்சின்மெல்லடியினார்க்குப்பதியலதில்லைப்பற்று
லெஞ்சினார்நிரயத்தாழ்வரெனவெடுத்தியம்புகின்றான். (௪)

தீயவன்பிணியனேழைசினத்தினன்*சீத்தையேனும்
பாயவன்போடுந்தெய்வம்பதியெனப்பரிந்தண்மேவி
யாயவனேவலாற்றியடித்துணைபோற்றியால
மேயவன்சொல்லாற்சீறியிசைப்பினுமினிதுசெய்தே. (௫)

குழைதரவினிதுகூறிக்கொண்கனுதரிக்கமென்மை
தழைதரப்பொருளைப்பேணிச்சரணநீர்பருகித்தாழ்ந்தே
யுழையகலாதமென்மையுருவெழிலொழுக்கமென்மேல்
விழைவுறவணிந்துபோற்றல்விதியறமின்னனார்க்கே. (௬)

---

* சீத்தை-கிழவன்.

தலைவனிற்றீர்ந்தனோர்தம்மனைச்சார்தருய்தன்
னிலையிடைநெடிதுவாழ்தல்பதிக்குறைநிகழ்த்தித்தூற்ற
லுலைவறவெறுப்புச்செய்தலுவர்த்தலூண்டுயில்முன்மேவ
விலைமலிவேற்கணல்லார்க்கெரிநரகியுமன்றே. (௭)

காதலனுவக்குமாயிற்கனிபெறுங்கலவியின்ப
மாதரம்பெருக்கல்வேண்டுமவட்கவன்கடவுளன்று
யீதறமிரவிதன்பாலேகுதிகடிதினென்ன
மாதவளயர்ந்துசோகமருவிமீண்டியங்கிலானின். (௮)

கண்டனளெம்மைப்போற்றிக்கருத்துறுதுயரமெல்லாம்
விண்டவளுரைப்பயாமுமெல்லியற்குறுதியோர்ந்து
வண்டமர்குழலாய்சோகமாற்றிவானகன்றுமண்மேற்
றண்டலைசூழும்வேதவனத்திடைத்தவத்தின்மேவி. (௯)

வேதகானனத்துத்தீர்த்தமனைத்தினும்விழைந்தூழ்கிப்
போதவிழ்தடமொன்றூக்கிப்புனிதமாதிரதநான்மூழ்கி
காதலைப்போற்றிமேவினலம்பெறுசித்தியுண்டா
மேதகுசித்திதன்னுன்மெல்லியனின்னையொப்பாள். (௧௦)

ஒருத்தியையமைத்துவெய்யோனுழையமைத்துறைதி*யப்பாற்
கருத்தியல்கருமமுற்றுங்காண்டியென்றுரைத்தேமாகத
திருத்திகழ்மறைசைமேவித்தீர்த்தங்களனைத்துமூழ்கி
யருத்தியாத்திரையுமாற்றிச்சஞ்ஞையங்கரனைப்போற்றி. (௧௧)

மேற்றிசைச்சுடர்களாற்றிமேவுபுட்கரணிப்பாங்க
ராற்றினடீர்த்தமாற்றியதிற்றினமுக்கான்மூழ்கிப்
பேரற்றியேயரனைநோன்புபுரிந்தனள்பொறியின்வேட்கை
மாற்றிவாயுணவுந்தானோர்மண்டலமருட்கையற்றே. (௧௨)

கோற்றருந்தவத்தாற்†றன்போனுணங்கிடையணங்கையாக்கிப்
பாற்கரன்றன்பாலேவப்பரிந்தவள்சஞ்ஞைபோலத்
தோற்றமுமெழிலுமேவச்சுடரவன்கலந்துதோய
‡ மாற்றவள்சனியினோடுஞ்சாவண்ணிமனுவையீன்றாள். (௧௩)

---

* அதன்பின்பு நின்கருத்திருக்குங் காரியமுற்றும் அதனைக்காண்பாயென்றியாஞ் சொன்னேமாக. † தன்போனுணங்கிடையணங்கு சவன்னை. சவன்னை-சமானவன்னத்தையுடையவள். சவன்னையிடத்துப்பிறந்தவன் சாவன்னி என்க. சாயாதேவி என்பதும் இச்சவன்னையை எனவறிக. ‡ மாற்றவள்-மறுமனையாட்டி.

முன்னியசஞ்ஞைவைவச்சுதமனுத்தருமன்மோதிப்
பின்னியயமுனையென்னுமூவரைப்பெற்றப்பின்னு
வின்னியற்சாயையைவர்தம்மையுமிலிதுபோற்றி
யன்னியமின்றித்தாயாய்வளர்த்திடுமந்தகாலில். (கச)

நிகமகானனத்துச்சஞ்ஞைநிலைபெறுந்தவத்தாலீச
னகமகிழ்வெய்தி*மேவற்கருந்துவட்டாவையுனன
முகமலர்ந்தெய்திப்போற்றிமுக்கணெம்பெருமான்முன்னேய்ந்
துகமதனுடலங்காய்ந்தோயுன்னியதென்னையென்ன. (கரு)

முறுகுவெங்கிரணமாற்றுமுகிழ்த்தமென்றளிர்மாமேனி
யிறுகுவெப்முலையாள்சஞ்ஞைக்கிரவிதனிலங்குமேனி
குறுகி†வெங்கரத்திற்றீர்ந்துகுளிர்பெறவைரச்சாலை
மறுகுறக்கடைந்துசாயல்வனப்புறவகுப்பாயென்ன. (கசு)

கூறியபணியுட்கொண்டுகுழைந்தடிபணிந்துபோற்றித்
தேறியகளியால்வானஞ்சேர்ந்தனன் சஞ்ஞைதேர்ந்து
வேறியனுருவமாகிவேதகானனத்துமேவி
யாறியகாலந்தார்வச்சஞ்ஞைமுன்னளித்தமைந்தர். (கஎ)

தருமனு‡மனுவுந்தூயயமுனையுந்தரணிதன்பான்
மருவினர்பணிந்துதந்தைமலரடிபோற்றியுள்ள
முருகுறவழுதுதாயாமுவள்சனிமனுவையோம்பி
வெருவுறவெம்மைக்காயுட்வேற்றவள்போலவென்ன. (கஅ)

ஆய்ந்தவன்றாய்க்குமைந்தரனைவருமொப்பாராகக்
காய்ந்திவர்மூவர்தம்மைக்கடியதென்னென்றுஞானந்
தோய்ந்தவன்நோக்காலுண்மைதுணிந்தகச்சாயைதன்பா
லேய்ந்துநீயாரைவல்லேயிசையலதிடுக்கணேற்பாய். (ககூ)

எனவெகுண்டுரைப்பவஞ்சியிலங்கெழிற்சஞ்ஞையேய்ந்துன்
மனமருள்கிரணவெம்மைவாய்வதற்கஞ்சிமாலைமத்
தனதுருச்சாயையென்னைத்தானெனநதந்துநின்பா
லனகடைக்கிழத்தியாகியமர்கெனவளிக்கவன்றே. (உ0)

கலந்துநின்னோடுமேவிக்காதல்கூர்மைந்தராக
வலந்தருமிருவர்தம்மைவாய்ந்தவர்தம்மையன்பா
னலந்தரப்பரிந்துசஞ்ஞைமைந்தர்பானயப்பற்றனனேர்ப்
புலத்தனவென்னுவுண்மைபுகன்றவள்கரந்துபோனாள். (உக)

---

* மேவற்கு-சஞ்ஞை தன்னுயகலுறிய சூரியனை யடைதற்கு. † உஷ்ண கிரணத்தினின்றி. ‡ மனு முன்னையது வைவச்சுதமனு, பின்னையது சாவன்னிமனு.

போயபின்றுவட்டாவில்லிற்பொழிகதிரவிபோகி
வேயனபசுந்தோட்சஞ்ஞையாங்கெனவிரைந்துசிற்பி
யாயவன்பற்றித்தோளாற்பிணித்தரனருளாற்*சாணை
வாயவனாரவெய்யமுரட்கதிர்மழுங்கவாக்கி. (உஉ)

ஒழுகெழில்வனப்புவாய்ந்தவொளியுருவுவப்பமேவிப்
பழுதறுமிரவிக்கினசொற்பகர்ந்துநின்பாலார்வேட்கை
தழுவியசஞ்ஞைநின்கூர்தருங்கதிர்க்கஞ்சிசசாம்பி
முழுமறைவனத்துநோற்பான்முயங்குதற்குறுதிமேவ. (உங)

ஆங்கடைந்தனதுமேனியழகெலாமவட்குநல்கித்
† தேங்கடைந்தனையமென்சொற்சேயிழைதிருவில்வீசிக்
கோங்கடைந்தடவிநோற்குங்குவிமுலைகுழையப்புல்லித்
தீங்கடைந்தமர்ந்தவினபஞ்சேர்கெனச்செப்பவேகி. (உச)

பூமகட்கரிசேர்மார்பம், ‡ புவிமகட்கணிபொற்றாலி,
பாமகட்கயன்றனாவாம், பயின்மறைவனத்துமேவித்
§ தேமகட்கமலவாவித்தீர்த்தங்கடிளைத்துநாகக்
கோமகட்கங்கமீந்தகுழகனைக்குழைந்துபோற்றி. (உரு)

மணிவளர்மறைசைமுற்றுந்தேடித்தன்மனையைக்காணா
தணிகிளர்0வடவையாகிநின்றதையறிந்துகாமம்
பிணிசெயக்கனிந்துபாய்மாப்பிறங்குருவாகிச்சேரப்
பணிவளரல்குலேனோரெனப்பிரிந்தகறறிப்பல்கால். (உசு)

கணவனென்றுணர்ந்துகாமக்கலவியிற்களித்துக்கூடிப்
புணர்தலுமிருவர்தம்பாற்பொங் + கழல்பரிபோற்றோன்றி
யணவுதலறிந்துதாங்கியளக்கரினருக்கன்வீழ்ப்பத்
தணவுறுவடவையாகித்தரித்ததுதரணியோங்க. (உஎ)

---

* சாணையின்கணச்சூரியனிருகக. † தெளித்தெடுத்ததேன்போலுமென் சொற்களை வசனிக்கும் சேயிழையாகிய சஞ்ஞையினது திருவில்வீசுதலினாலே கோங்கரும்பானதுதோற்றுக்காட்டையடைந்து நோற்றற்கேதுவாகிய குவிமுலைகுழையப்புல்லிச் சிலகாலமிடை யூறாகிய தீங்கையடைந்திருந்த காமவின்பத்தைப்பெறுகவெனச்செப்பச் சென்றெனக. ‡ புவிமகட்கணி பொற்றாலி-பூமிதேவிக்கு வேதாரணியம் திருமங்கிலியம்போலு மென்பது தாற்பரியம். § தேம என்புழிஈற்றகரம் ஆறாவதனுருபு. நாகக்கோ-மலையரசன். 0வடவை-பெண்குதிரை. + அழலானது குதிரைபோலத்தோன்றி வருதலையறிந்து.

பரவையின்வீழ்த்தபின்னரிருவரும்பழையமேனி
வரமுறமேவிச்சித்திவனப்பருள்சஞ்ஞைதீர்த்தங்
கரவறப்படிந்துபோற்றிக்கலந்தனர்வானிற்காட்சி
விரவியசஞ்ஞைதீர்த்தம்படிந்தவர்விழைந்தயாவும். (௨௭)

மேவியேவினைகள்வீட்டிச்சித்திகண்மேவியீசன்
பூவினேர்பாதநீழற்பொலிகுவரொருகான்மூழ்கிற்
றுவிரிவாசபேயபலத்தினைச்சார்வரென்றாற்
காவிசூழ்சஞ்ஞைதீர்த்தமேன்மையார்கணிக்கற்பாலார். (௨௮)

வேறு.

மறைவளர்கலர்வாவிவகுத்துளக், குறையகற்றினள்கோதறுசஞ்ஞையென்,
றிறைவனுக்கருண்மாமுனியின்சொலாற்,கறையகற்றியகாதையிதாமரோ. (௨௯)

சஞ்ஞைதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩,௧௧௪.

---

# சந்தசாகரதீர்த்தச்சருக்கம்.

சந்தசாகரமேன்மைதடங்கடல்
வைத்தமாநிலமுற்றுமகிழ்தர
வத்தனாருளனவளித்திடு
முத்தவெண்குடையானுமொழிகுவான். (௧)

ஆதிகற்பத்தலை * கடலேழுமாய்ந்
தேதனீதியில்வாழ்க்கையிபற்றுவான்
மாதுவேண்டி வகுத்துலகாகவிற்
றீதிறக்கவைச்சேர்ந்தடிபோற்றியே. (௨)

பெருகுசோமன்பிறங்கியகாசிபன்
மருகராகவகுத்தனபோலெமக்
குருகுகாதற்புதலவியுதவிநீ
யருளுவாயெனவாய்ந்துமறுத்தனன். (௩)

மறுத்ததக்கனைவாரிகளேழ்வருங்
கறுத்தநெஞ்சிற்கனனறுகழிவளம்
பொறுத்தவேதவனத்திற்புகுந்திதங்
கறுததீர்த்தமினைத்திறுமூழ்கியே. (௪)

---

* கடலேழுமானவை யாய்ந்து என எழுவாயாக வைத்துரைக்க.

வேதநாதன்விரும்பியகல்லிடும்
பாததாமரைபோற்றிப்பணிந்துபின்
* ஞாதவேசனுக்குத்தரத்தார்வமோ
டோதவேலைகள்வைகியுவப்பினால். (௫

மேயவாச்சிரமத்துவிளங்குசீர்ப்
பாயதம்பெயராற்பனிமாமலர்த்
தூயவோர்தடந்தொட்டனரத்தடஞ்
சாயன்மேன்மைதழைத்தணிசார்ந்ததே. (௬

ஆக்குமத்தடமூழ்கியனுதினந்
தூக்குமந்திரஞ்சொல்லிச்சுருதியால்
வாக்குநீரபிடேகமறைவனாந்
காக்குநாயகற்காட்டிக்கசிவினால். (௭

வற்றியாகமறுகுறவான்றவ
முற்றியோர்மண்டலஞ்செலமோகமீர்
பற்றியாத்திரையாறும்பயின்றுநேர்
மற்றிலாதமறைவனவள்ளல்பால். (௮

மாடுசூழ்வலங்கொண்டுமகிழ்ந்துவா
னாடுசேவடிகண்டெழுமன்பினா
னீடுசாதனிலைபெறமாமறை
தேடுநாதன்திருவுருத்தேறியே. (௯

வேறு.

அரகரசங்கரவமலவற்புத
புரகரபுங்கவபுனிதபூரண
சிரகரதுங்கவனங்கசீதர
முரகரபங்கவபங்கமுன்னவ. (௰

கரியுரிபரிதருமுரககங்கண
புரியெரிபுரைவிரிசடிலபுங்கவ
பரிபுரமரிசொரிசரணபங்கய
வரிவிரிமரையவற்கருளுமங்கண. (௰௧

வேறு.

எனத்துதித்திறைஞ்சவேதவனத்திறையெதிர்ந்துதோன்றி
மனத்துயரகற்றுந்தூயமானினிவேண்டிநீங்க
வனத்துறைமறைசைமேவியாறியாத்திரையுமாற்றித்
தினத்துறத்தவமும்போற்றிச்செழுந்தடத்திகழச்செய்தீர். (௰௨

* பாஸ்கரேசலிங்கப்பெருமானுக்கு.

இனமணிவரன்றிக்கூலத்தெறிதருநதிகள்யாவு
மனமகிழ்மனைவியாகவயக்குவீர்மீளவின்னும்
பனவரமளிப்போமென்னப்பரவைகடொழுதுபாத
வனமலர்பணிந்துபோற்றிவாழ்த்தினர்வகுத்துச்சொல்வார். (கங)

அழிந்துலகடங்கிற் * காலவங்கியெம்மாக்கவீக்க
மொழிந்துகவன்னியேவவுன்னுகாளுருவமென்பூ
வழிந்ததேனுறுபாயுமறைவனமேவிவைகப்
பொழிநதருள்புரிதியெம்மாற்போற்றியபுனிதவாவி. (கச)

ஐயநின்னருளாலெம்பேரகவங்கதனிற்றோய்ந்தார்
வெய்யவெமபாவமுற்றும்வீட்டிநின்விமலமாகுஞ்
செய்யசேவடியிற்சேரத்திகழுணர்வளித்தியென்னத்
தையலோர்பங்கன்வேண்டும்வரமெலாந்தமக்கங்கீந்தே. (கரு)

ஒளித்தனன்கடல்களெல்லாமுவகையொடோங்கித்திங்கட்
டெளிததனநதிகள்காதற்சேயிழையாகமேவிக்
களித்தனவொடுங்குங்காலக்கமழ்மறைவனத்துமேவி
யளித்தநல்வரத்தாறசத்தசாகரத்தமர்ந்துமன்னும். (கசு)

மடிவிலாமறைசைச்சூழிவருதலின்றதனுன்மேவி
யொடிவிலாதுறையுஞ்சத்தசாகரமுவந்தமூழ்கிற்
கடியதீவினைகள்வீட்டிக்கதிதருஞானமேவிப்
படியின்மேலுயர்ந்துவாழ்ந்துபரன்கழற்பதமஞ்சேர்வார். (கஎ)

வேறு.

தேன்றருமகதியாழ்த்திருவமாமுனி
வானறருசததசாகரத்துமாட்சியை
யூன்றருநெடியவேலுரவறன்சாதிஞன்
சான்றருந்தவமுதறறருமஞ்சாரவே. (கஅ)

தாழ்குழற்சஞ்ஞைதன்றடத்துக்காதையு
மேழ்கடற்சத்தசாகரத்தினேய்வதுங்
கேழ்தரப்படிப்பவர்கேட்பவர்க்கெலாம்
வாழ்வுறத்தனயருமனையுமல்குமே. (ககூ)

சத்தசாகரதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ட,சடட.

---

* காலவங்கி-காலாக்கினிருத்திரர்.

ஒற்றியூரென்றவூனத்தினாலதுதானோ
வற்றப்படவாரூரதென்றகன்றாயோ
முற்றாமதிசூடியகோடிக்குழகா
வெற்றாற்றனியேயிருந்தாயெம்பிரானே.

நெடியானொடுநான்முகனும்மறிவொண்ணாப்
படியான்பலிகொள்ளுமிடங்குடியில்லை
கொடியார்பலர்வேடர்கள்வாழுங்கரைமே
லடிகேளன்பதாயிடங்கோயில்கொண்டாயே.

பாரூர்மலிசூழ்மறைக்காடதன்றென்பா
லேரார்பொழில்சூழ்தருகோடிக்குழகை
யாரூரனுரைத்தனபத்திவைவல்லார்
சீரூர்சிவலோகத்திருப்பவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

சுவாமிதிருநாமம்-அமிர்தகடேசர், குளகேசர்.

தேவிதிருநாமம்-மையார்தடங்கண்ணியம்மை.

ஸம்ஸ்கிருதநாமம்-அஞ்சனாக்ஷீ.

---